ராஜனுக்குத் தரிசனந்தந்து 'நீ உன்குறை யிருந்து கூறுவாய்' என்ன, அவன் 'சூரபதுமனாலெனக்கும் அவன் மகனாலே தன்மகனுக்கும் அசுரர்களால் அமரர்கட்கும் நேர்ந்த தீங்குகளையும், அசுரர்கள் பொன்னுலகத்தைத் தீயிட்டழித்ததையும் எடுத்துக்கூறி 'அசுரர்களை அழித்தருளல் வேண்டும்' என்று வேண்ட, அதற்கு உமாபதி 'நம்பால் ஒருகுமாரன் தோன்றி அவனை ஒழித்து உங்களைக் காத்திடுவான்' என்று அருளிச்செய்து மறைந்தார்.

14346

அதுகேட்டு அப்பொழுது மகபதி மனமகிழ்ந்தனனாயினும், 'உமாமகேசுவரர்கள் ஒருபொழுதும் பிரிந்திருத்தலால் எங்ஙனம் அவர்கட்குக் குமாரனுதிப்பான்?' என்று எழுந்த பெருஞ்சஞ்சலத்தால் உடனே மனமயங்கி, மனோவதியென்னும் பிரமனகரத்தை அடைந்து, அங்கு உள்ள பிருகஸ்பதியின் மனையாளிடத்தே தன்மனையாளை இருக்கச்செய்துவிட்டு, அந்தரங்கத்திலே வீற்றிருக்கின்ற பிரமதேவனைப் பிரமதேவர்களோடும் வணங்கி நிகழ்ந்ததனைத்தையும் விண்ணப்பஞ்செய்ய, நான்முகக்கடவுள், அதற்குத் தக்க முயற்சியைச் செய்யத்துணிந்து, தேவர்களுடனே வைகுண்டநகரத்தை அடைந்து, மாயவனை மலரடிதொழுது, சிவபிரான் யோகஞ்செய்துநிற்குந் தன்மையையும் சூரபதுமன் தன்னையுட்பட்ட வல்லமைகொண்டு தேவர்களை இடைவிடாது வருத்திவருவதையுந் தெரிவித்து, அப்பெருமானோடும் ஆலோசித்து, மோனநிஷ்டைகூட்டிநிற்கும் இறைவனை அந்நெறியினின்று நீக்கி மலைமகளைமணந்து அவளுடன்கூடிக் குமாரனை அளிக்கும்படி அகக்கட்டவனுக்குக் காதல்வேட்கையை உண்டாக்குதற்பொருட்டு, மன்மதனை வரவழைத்துச் செய்தி செப்பி அரிதில் இசைவித்து அவனை அனுப்ப, அவனும் பிரமனது நிர்ப்பந்தத்தாற் கயிலைமலையிற்சென்று பரமசிவன்மேல் மலரம்புகளை எய்து அவரது தவத்தைக் கெடுக்கத்தொடங்க, அதனையறிந்த இறைவன் சினந்து நெற்றித் திருநயனத்தைத் திறந்து உற்றுநோக்கிய மாத்திரத்தில், அதனினின்று எழுந்த நெருப்புக்கு இரையாகி மன்மதனது சுந்தரமேனி சாம்பராய் விட்டது. அஃதுஉணர்ந்த பிரமாதியோர் வருந்திக் கைலையையடைந்து கோயில்வாயிலிற் குழுமினராய் பலவாறு தமதுகுறைகளை எடுத்துக்கூறி முறையிட, சுவாமி அவர்களை உள்ளேவரவழைத்து அவர்கள்குறையை விரைவிலே ஒழிப்பதாகக்கூறியருளி அவர்களை அனுப்பிவிட்டு, தன்கணவனாகிய மன்மதன் தகிக்கப்பட்டதனால் மிகத்தவித்துத் தமைச்சரணமடைந்து பிரார்த்தித்த இரதிதேவிக்கு, மலைமகளை மணம்புரியுங்காலத்து மன்மதனை உயிர்ப்பிப்பதாக வாக்களித்து, மோனநிலை நீங்கி, சனகாதியர்க்கு விடைகொடுத்துவிட்டு, தாம் ஒரு விருத்தவேதியவடிவங் கொண்டுசென்று பனிமலைசேர்ந்து அம்பிகையின் தவவடிவத்தைக் கண்டு களித்து அவளிடஞ் சிலசல்லாபஞ்செய்து அவளுடையஅன்பினை அளவிட்டறிந்து மீண்டு, ஸப்தருஷிகளை வரவழைத்து அவர்களை மலையரசன்பக்கல் அனுப்பி அவன்மகளை மணம்பேசி முடித்துவரச்செய்து, கல்யாணத்தின்பொருட்டு மிக அலங்கரிக்கப்பட்ட இமயமலையைச் சேர்ந்தருளினர். அப்பொழுது சகலதேவர்களும் முனிவர்களும் மற்றுமுள்ளார்பலரும் விவாகமகோத்ஸவத்தைத் தரிசித்து உய்யுமாறு அப்பனிமலையினிடத்துவந்து ஒருங்குகூடினார்கள். அதனால் வடதிசைதாழ்ந்து தென்திசைஉயர, கண்டு கலங்கிய அடியவர்களின் வேண்டுகோளால், சங்கரபகவான் அகத்தியமகாமுனிவரை அழைத்துத் தென்திசைக்கு ஏகும்படி ஆஜ்ஞைசெய்து அனுப்பியருளவே, பூமி சமநிலை பெற்றது. அதன்பின் பரமசிவன் பார்வதியைத் திருக்கல்யாணஞ்செய்து கொண்டு, மன்மதனை எழுப்பி உயிர்ப்பித்துத் தன்மனைவியான ரதிதேவிக்கு மாத்திரம் ரூபமுடையவனாகவும் மற்றையோர்க்கு ரூபமில்லாதவனாகவும் இருக்கும்படி அவனுக்குஅருளி, அம்பிகையுடனே திருக்கயிலாயத்தையடை

ந்து வீற்றிருந்தருளினார். அப்பொழுது உலகத்திலுள்ள உயிர்களனைத்தும் ஆணும்பெண்ணுங் கூடிக் குலாவி இன்பமுற்றன.

பின்னரும் பலகாலம் பரமசிவன் குமாரனை உண்டாக்காமலிருக்கவே, தேவர்யாவரும் மீண்டுந் திருக்கயிலையையடைந்து பிரார்த்தித்தார்கள். அப்பொழுது அக்கடவுள் ஆறுதிருமுகங்கொள்ள, அந்தத்திருமுகம் ஒவ்வொன்றின் நெற்றிக்கண்ணினின்றும் ஒவ்வொன்றாக ஆறு அனற்பொறி எழுந்து உலகமுழுவதும் பரவி யாவரையும் அஞ்சுவிக்கவே, அருகிலிருந்த உமாதேவியும் அதனை வெப்பத்தைப் பொறுத்து அங்கு நிற்கமாட்டாது மிக்க தவிப்பையடைந்து ஓடுந் தனது காற்சிலம்புகள் ஒன்றோடொன்று தாக்கும்படி ஓடித் தனது அந்தப்புரத்தையடைந்தாள். பின்பு அவற்றைச் சிவபிரான் தேவர்களின் வேண்டுகோளின்படி அடக்கி ஆறுபொறிகளாகக் கொடுக்க, அவற்றை அப்பிரானருளினாற் சகிப்பின்றி அக்கினியும் வாயுவும் மாறிமாறி எடுத்துக்கொண்டுபோய்க் கங்கையிற் சேர்த்தார்கள். கங்கையும் அவற்றைச் சரவணப் பொய்கையிற் செலுத்த, தேவர்கள் பலரும் அப்பொய்கையைக் காவல்செய்து நிற்கையில், ஆறுமுகங்களோடும் பன்னிரண்டு திருக்கைகளோடும் பரமசிவனே தாமரைமலரிற் குமாரனுருவமாய்த் தோன்றினார். நின்ற அக்குழந்தையையெடுத்துப் பால்கொடுத்து வளர்க்கும்படி தேவர்கள் அறுவகைப்பட்ட கிருத்திகா நக்ஷத்திரத்தை ஏவ, அக்குமாரன் ஆறுவடிவங்கொண்டு அவர்கள் கொடுத்தபாலை உண்டு வளர்ந்துவந்தான். இதற்கு முன்பு மாதேவி எழுந்தோடியபொழுது அவளது காற்சிலம்பு உடைபட்டு அதிலிருந்து விழுந்த ஒன்பது ரத்தினங்களிலே பின்பு நின்ற அவ்வம்பிகையின் சாயை தோன்ற, அந்தச்சாயைகளைச் சிவபிரான் அருகில்வரும்படி அழைத்தருள, அவை சத்தியமசமான ஒன்பது மங்கையராகிவந்து சிவனைக் காதலுடன் கண்டமாத்திரத்திற் கருப்பங்கொள்ள, அம்பிகை அவர்களிடம் அழுக்காறுகொண்டு 'கருப்பத்தைப் பெருமலே சுமந்திருக்கக்கடவீர்' என்று சபிக்க, அதுகேட்டு அஞ்சி மிக நடுங்கின அவர்களுடம்பி லெழுந்த வியர்வையில் லக்ஷம் வீரர்களும் பின்பு அவ்வம்பையின் அருளைப்பெற்ற அவர்கள் வயிற்றினின்று * ஒன்பது புத்திரரும் உதித்தார்கள். இவர்கள் முருகக்கடவுளுக்குத் திருத்தம்பியரெனப்படுவர். பின்பு உமாபதி தேவியுடனே சரவணத்தையடைகையில், கொழுநன் கட்டளையால் மலைமகள் அம்மைந்தனது வடிவங்களாறையும் ஒன்றாகச்சேர்த்து எடுத்து ஒருகுழந்தையாக்கி உச்சிமோந்து மார்பிலணைத்துப் பாலருத்திப் பரமன் கையிற் கொடுக்க, அப்பிரான் தனக்கும் அம்பிகைக்கும் நடுவிலே அக்குழவியை வைத்துக்கொண்டு கயிலைசேர்ந்தார். அதன்பின் லக்ஷத்தொன்பதுவீரரும் சண்முகனை வணங்கி வந்தடைந்தார்கள்.

அப்பால் முருகக்கடவுள் தன் தம்பிமாருடனே பற்பல திருவிளையாடல்களைச் செய்யத்தொடங்கி, மலை கடல் யாறு சந்திரசூரியர் முதலிய உலகத்துப் பொருள்களையெல்லாம் பலவாறு மாறுபடுத்த, அதுகண்ட இந்திரன் அக்குமாரன் மகிமையை யறியாது கோபங்கொண்டு தேவர்களுடனே அக்குமாரனைச் சூழ்ந்து போர்செய்ய, அவ்விளமகன் அவ்விந்திராதியரை அழித்துத்தள்ளினன். அச்செய்தியை நாரதமுனிவராலறிந்த பிருகஸ்பதிபகவான் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்திக்க, பின்பு ஆறுமுகக்கடவுள் அவர்களையெழுப்பி அவர்கள் வணங்கிச்செய்த தோத்திரத்திற்குத் திருவுள்ளமுவந்து தனது விசுவரூபத்தைக் காட்ட, அதனை அவர்கள் அப்பொழுது அப்பிரானருளாற்பெற்ற ஞானக்கண்ணால் தரிசித்துப் பலவாறு துதித்தபின்னர்,

* வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரன், வீரமகேசுரன், வீரபுரந்தரன், வீரராக்கதன், வீரமார்த்தாண்டன், வீராந்தகன், வீரதீரன் என இவர்கள்பெயரை யுணர்க; இவர்கள், சிவகுமாரரெனப்படுவர்.

அப்பரமன் அப்பெருவடிவத்தை அடக்கி, அவர்கள் வேண்டிக்கொண்டபடி முன்பு தன் திருவிளையாடல்களால் பிறழ்ந்த பொருள்களையெல்லாந் தனது கட்டளைமாத்திரத்தால் முன்னிருந்த நிலையில் நிறுத்தியருளினன். பிறகு இந்திரன் தான் செய்யும் பூசையை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று வேண்ட, சண்முகமூர்த்தி உடன்பட்டுக் கைலாசகிரிக்கு அருகிலுள்ளதொரு மலையை அடைய, அங்கே சென்று இந்திரன் தேவர்களோடும் அத்தேவதேவனை விதிப்படி பூசிக்க, அதன்பின் அப்பெருமான் கயிலையை அடைந்தனன். தேவர்கள் குமாரக்கடவுளைப் பூசித்த அந்தமலை, அதுமுதல் அவனுக்கு இடமாகி, கந்தகிரியெனப் பெயர்பெற்றது.

பின்பு நாரதமுனிவர் பூமியிலிருந்து சிவபிரானைக் குறித்துச் செய்ததொரு யாகத்தில் ஓமகுண்டத்தினின்று ஓராட்டுக்கடா எழுந்து உலகத்தவர் யாவரையும் அழிக்கத்தொடங்க, அதுகண்டு அஞ்சியோடிவந்து சரணமடைந்த முனிவர்கள் முதலியோரது பிரார்த்தனையினால் முருகக்கடவுள் அக்கடாவைத் தனது துணைவருள் வீரவாகுவைக்கொண்டு வலியடக்கிக் கொணரச் செய்து, பின்பு அவர்கள்பிரார்த்தனைப்படி அதனை வாகனமாகக் கொண்டருளினன். பிறகு நாரதரது வேள்வி நிர்விக்கினமாக நிறைவேறிற்று.

பின்னர் ஒருநாள் பிரமன்முதலிய தேவர்களனைவரும் வந்து சிவபெருமானைத் தரிசித்துக் கைலாசத்தினின்று மீண்டுசெல்லும்பொழுது அங்கிருந்த முருகக்கடவுளைப் பிரமனொழிந்த பிறதேவர்கள் வணங்கிச்செல்ல, பிரமன் மாத்திரம் அச்சிவகுமரனைச் சிறுபிள்ளையென்று கருதி அலட்சியஞ் செய்து வணங்காதொழிய, அக்கடவுள் அயனுக்கு அறிவுறுத்த எண்ணி அவனை அழைத்து 'பிரணவமந்திரத்துக்குப் பொருள் சொல்வாய்' என்ன, அவன் அதுகூறத்தெரியாது மயங்க, குமாரக்கடவுள், 'பிரணவத்துக்குப்பொருளறியாத நீ படைப்புத்தொழிலை நடத்தத்தக்கவனல்லன்' என்று சொல்லி நான்முகனைத் தலையிலே வலியக்குட்டி விலங்கிடுவித்துக் கந்தகிரியிலே சிறைவைத்துத் தானே படைப்புத்தொழிலியற்றிவந்தான். இச்செய்தியைத் திருமாலாலறிந்த சிவபிரான் பிரமனைச் சிறைவிடும்படி குமாரனுக்கு நந்திபிரானிடஞ் சொல்லியனுப்ப, அங்ஙனமே நந்தி சென்று சொன்ன கட்டளையைக் கேட்டும் மைந்தன் அயனைச் சிறைவிடாமலிருக்கவே, பின்பு பரமசிவன் தானே சென்று குமாரனுக்கு நல்வார்த்தைகள்கூறி அயனைச் சிறையினின்று விடுவித்தபின்பு மகனையெடுத்து மடியின்மீதிருத்தி உச்சிமோந்து தழுவி 'பிரணவப்பொருள் உனக்குத் தெரியுமோ? தெரியுமாயிற் சொல்லுவாய்' என்ன, முருகவேள் 'அது இரகசியமாகவன்றி வெளிப்படையாக உரைக்கத்தக்கதன்று' என்று கூற, உடனே சிவபிரான் செவிதாழ்த்துக்கொடுத்து அதனை அவன் சொல்லக்கேட்டு ஆனந்தித்துச் சென்றபின்னர், முருகன் தன்னைவணங்கிக் கேட்ட அகத்தியமகாமுனிவனுக்கு அப்பொருளை உபதேசித்தருளினன்.

அதன்பின் திருமாலின் பெண்களிருவரும் தன்னை மணஞ்செய்துகொள்ளுதற்பொருட்டுத் தான் அவதரித்த இடமான சரவணப்பொய்கையில் தன்னைநோக்கித் தவஞ்செய்வதை அறிந்து அம்முருகக்கடவுள் அங்குச்சென்று அவர்கட்குத் தரிசனந்தந்து அவர்களை முறையே இந்திரனிடத்தும் வேடரிடத்தும் மகளாய்வளரும்படி அருள்செய்து அனுப்பி மீண்டு சிலநாள்கழித்துக் கயிலைசென்று தந்தைதாயரை வணங்கி அவர்களருகில் வீற்றிருக்கையில், வந்துபிரார்த்தித்த தேவர்களின் வேண்டுகோளால், சிவபிரான், சூரபதுமன்முதலியோரைக் கொன்றுவரும்படி குமரனுக்குக் கூறி, சிறந்த ஏகாதசருத்திரவடிவமான பதினொருபடைக்கலங்களையும் ஒப்புயர்வற்றதொரு வேலாயுதத்தையும் சேனைகளையுந்தேரையுங் கொடுத்து

ஆத்மஞானத்தை உபதேசிப்பவ னென்றும், மனிதர்க்குஉள்ள ஒற்றுமையைக் கெடுப்பவ னென்றும் காரணப்பொருள்படும். நரர் - ஆன்மாக்கள்: மனிதர்; அவர்களைச்சம்பந்தமானது, நாரம். த - கொடுத்தலும், கெடுத்தலும் அனுவியென்றும் பதம்பிரிக்கலாம். ஏ - அசை. புண்டரீகம் - வடசொல்: இம்வெண்டாமரையின் பெயர், இங்கே, செந்தாமரைக்கு வந்தது; 'புண்டரீகாக்ஷன்' என்றுபட்டது போல. நோ - உவமவாசகம் விண்ணோர் உளம் பதைபதைத்தனர் - திணைவழுவமைதி; [நன் - பொது - உக ] இன்னன - பெயர்; இ பகுதி. ன் - சாரியை. அன் - சாரியை, அ-விகுதி.

"கண்டனர் வெருண்டனர் கலங்கின ரிடுங்கண், கொண்டன ருளங்குலைகுலைந்தனர் கரந்தார், திண்டிறல்கொள் மேல னிருசேவடி வணங்கி, யண்டர்புகழ் நாதனை நடைந்திடுதலுற்றான்" என்பது, கந்தபுராணச் சுருக்கம் (௨)

௩. தூயநான்மறையந்தணர் முனிவரிச்சுரத்திற்
போயவெல்லையினெறியதாய்வரவரப்புணர்த்து
மாய்வுசெய்துபின்குறுமுனிசூளினிவ்வடிவாய்
மேயதொல்பெயர்க்கிரவுஞ்சமால்வரையிதுகாண்.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்) தூய - பரிசுத்தகுணமுள்ள, நால் மறை - நான்குவேதங்களையும் அறிந்த, அந்தணர் - பிராமணர்களும், முனிவர் - இருடிகளும், இச்சுரத்தில் போய எல்லையில் - இக்காட்டிற் செல்லுஞ் சமயத்தில், நெறியது ஆய - ஒருநேர்வழிவடிவமாய்க் காட்டி, வர வர புணர்த்து - (அவர்கள்) மேலமேல் உள்ளேவரும்படி மாயைசெய்து. மாய்வு செய்து - (அங்ஙனம்வந்தவர்களையெல்லாம்) அழித்தலைச்செய்து, பின்-பின்பு. குறு முனி சூளின் - குறுகியவடிவங்கொண்டவரான அகத்தியமுனிவரது சாபத்தால், இ வடிவு ஆய் மேய - (காணப்படும்) இந்தமலைவடிவமாயப் பொருந்தின, தொல் பெயர்-தொன்றுதொட்டுவருகின்ற பிரசித்தியையுடைய, கிரவுஞ்சம் மால் வரை - பெரிய கிரௌஞ்சகிரி, இது—; காண்-(இச்செய்தியைத்) திருவுளங்கொள்வாய

பெருமாயைவல்ல கிரௌஞ்சனென்னுங்கொடியஅசுரன், தாரகாசுரனது மாயாபுரிக்கு அருகில், மாயையால், ஒருபெரியமலைவடிவங்கொண்டு, அங்கு வருகின்ற முனிவர் முதலியோர்க்குப் பலவழிகளைத் தன்னுள்ளே சிறிதுதூரங்காட்டி, அவ்வாறின்வழியாய் அவர்கள் தனதுஉள்ளே வந்தவளவில, சுற்றிலும்வழியில்லாதபடி செய்து, அவர்களைப் பலதீச்செயல்களால் அழித்துக்கொண்டிருந்தான்; ஒருகால், வானத்தையளாவிநிமிர்ந்தவிந்தியகிரியின் செருக்கை யடக்குதற்பொருட்டுச் சிவபிரானிடம் விடைபெற்று அகத்தியமுனிவர் மேருமலையிலிருந்து தென்திசைநோக்கிவருகையில், இடையிலே இவ்வசுரன் தன்வழக்கப்படி அம்முனிவர்க்கும் வஞ்சனைசெய்ய, அதனையுணர்ந்து அவர் தம்கையிலுள்ள பிரமதண்டத்தால் அம்மலையைப் பலவிடங்களிற் குத்தித் துளைபடுத்தி 'கொடியவனே நீ, இனி இம்மலைவடிவத்தோடு கொடிய அசுரர்க்கு இருப்பிடமாய்த் தேவர்கட்கும் முனிவர்கட்கும் பலதீங்குகள்செய்துகொண்டு பலநாளிருந்து பின்பு சுப்பிரமணியக்கடவுளின் வேற்படையால் அழிந்திடுவாய்' என்றும், 'என்கைத்தண்டு உன்மீதுபட்டுத் துளைபடுத்திய இடங்களெல்லாம் பலபல மாயைகளுக்கு இருப்பிடமாகுக' என்றும் சபித்துத் தமது தவத்திறலால் அம்மலையைக்கடந்து அவ்விடத்தை நீங்கிச்செல்ல, அசுரன் அச்சாபப்படியே அசுரர்க்குஇடமான மலைவடிவத்தோடு நின்றிட்டன னென்பது கதை: இதனை, மேல அசுரகாண்டத்திற் கிரௌஞ்சப்படலத்திற் பரக்கக் காணலாம.

நால்மறை - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன; தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் என்பனவுமாம். 'அந்தணர்', 'முனிவர்' என்ற சொற்களில் ஒன்று துறவறத்தார்மேலும், மற்றொன்று இல்லறத்தார்மேலும் சிறக்கும். அந்தணர் என்ற சொல் - அம் தண் அர் எனப்பிரிந்து, அழகிய தண்மையை [குளிர்ச்சியான அருளை]யுடையவரென்றும், அந்த அணவு ஆர் எனப்பிரிந்து, (அணவுதல் - தழுவுதல்.) வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவரென்றும் பொருள்படும்; இது பிராமணர்க்குக் காரணவிடுகுறிப்பெயராம். திருக்குறளில் நீத்தார்பெருமையில் "அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்" என்றதனால், இது துறவறத்தார்க்குச் சிறப்புப்பெயராதலுணர்க. முனி என்ற வடசொல்லுக்கு - (கடவுளை எப்பொழுதும்) தியானஞ்செய்பவன் அல்லது, திரிகாலஞானமுடையவன் என்று பொருள்; இனி, (எல்லாப்பற்றுகளையும்) முனிந்தவன் [வெறுத்துவிட்டவன்] ஆதலால், முனி என்று தமிழ்வகையாற் காரணப்பொருள் கூறலாகாது, வடசொல்லாதலின். போய - ய - இறந்தகாலவிடைநிலை. சுரம் - ஜ்வரமென்னும் வடசொல்லின் சிதைவு. வெப்பமுடையதென்று பொருள். நெறியது, 'அது' - பகுதிப்பொருள்விகுதி. காண - முன்னிலையசையுமாம். எய், ய - இறந்தகாலஇடைநிலை; எய் எனனும் பகுதியின் ஈற்று யகரம், தனிக்குறில் சாராததாதலால், யகரம்வரக் கெட்டது, ["யரழமுன்னர்" என்ற நன்னூற்சூத்திரத்தின் 'பிற' என்ற மிகையைக் காண்க.] மால - உரிச்சொல். 'வரை' என்ற கருவினைப்பெயர் - அதனையுடைய மூங்கில்கள் விளையும் மலைக்கு இருமடியாகுபெயராம். (ந)

ச நேரிலிக்கிரிக்கொருபுடைமாயநீணகரிற்
சூரெனப்படுமவுணனுக்கிளவலாந்துணைவன்
போரிலச்சுதனேமியையணியதாப்புனைந்தோன்
தாரகப்பெயர்வெய்யவன்வைகினன்சயத்தால்

(இ - ள்.) நேர் இல - ஒப்பில்லாத, இ கிரிக்கு - இந்தமலைக்கு, ஒருபுடை - ஒருபக்கத்திலே (உள்ள), மாயம் நீள் நகரில் - நீண்ட மாயாபுரியிலே, சூர் எனப்படும் அவுணனுக்கு இளவல் ஆம் துணைவன் - சூரபதுமனென்னும் அசுரனுக்கு இளைய சகோதரனும், போரில் அச்சுதன் நேமியை அணியது ஆ புனைந்தோன் - யுத்தத்தில் திருமாலின் சக்கராயுதத்தைத் தனக்கு ஓர் ஆபரணமாகத் தரித்தவனுமாகிய, தாரகன் பெயர் வெய்யவன் - தாரகனென்னும் பெயரையுடைய கொடிய அசுரன், சயத்தால் - வெற்றியோடு, வைகினன் - தங்கியிருக்கின்றான்; (எ - று.)

சூரபதுமன் தம்பியரோடும் மற்றும்அசுரர்களோடுங் கூடிச்சென்று பொருது திக்குவிஜயஞ்செய்தபின்பு பாற்கடலைச்சேர்ந்துகலக்க, அதுகண்டு எழுந்துவந்து எதிர்த்த திருமாலுக்கும் அசுரர்க்கும் உக்கிரமாக நடந்த பெரும்போரில் திருமால் பலபடைக்கலங்களைப் பிரயோகித்து, அவற்றையெல்லாம் பயனில்லவாகச் செய்த தாரகாசுரன்மேற் கடுங்கோபங்கொண்டு தனக்குஉரியசக்கராயுதத்தை விடுக்க, எதிரிகளைத்தவறாமலழிக்கவல்ல அந்த ஆழிப்படை பரமசிவனிடம்பெருவரம்பெற்றஅவ்வசுரனை ஒன்றுஞ்செய்ய மாட்டாமல் ஓர்ஆபரணவடிவமாய் அவ்வசுரனது கழுத்திற் சேர்ந்துதங்க, அதுகண்டு திருமால் வியந்து போரொழிந்தனனென்பது கதை, இதனை, மேல் அசுரகாண்டத்தில் திக்குவிசயப்படலத்திற் பரக்கக் காணலாம்.

இப்பாட்டின் மூன்றாமடி, அவ்வசுரனது பெருந்திறலை விளக்கக்கூறியது. சூர் - சூரனென்பதன் விகாரம். இளவல்-இளையவன். இளமையென்

னும் பண்பி னடியாப் பிறந்த பெயர் அல் - பெயர்விகுதி துணைவ னென்பது-முன்பிறந்தவனையும் பின்பிறந்தவனையும் உணர்த்தக்கூடிய தாதலால், இங்கே, தம்பி யென்பதற்கு, 'இளவலாந்துணையன்' என்றார். அசசுதன் - அசயுத னென்னும் வடசொல்லின் திரிபு; (தன்னைச்சரணமடைந்தவர்களை) கைவிடாதவ னென்பதும், அழிவில்லாதவ னென்பதும் காரணப்பொருள்படும். கிரி, சேமி, ஐயம் - வடசொற்கள். நகர் - நகரம் அல்லது நகரீ என்ற வடசொல்லின் விகாரம். 'துணையன்' என்பதில், ய-பெயரிடைநிலை. 'அணியது' என்றதில், 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி. ஆ - ஆக என்பதன் தொகுத்தல்விகாரம். வெய்யவன் - வெம்மை யென்னும் பண்பி னடியாப் பிறந்த பெயர்; பண்புப்பகுதி ஈறுபோய் இடைநின்ற மகரமெய் யகரமாகத்திரிந்தது. வைகினன்—வைகு - பகுதி. போர - பொரு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். தாரகன + பெயர்=தாரகப்பெயர்; "சில விகாரமா முயர்திணை." 'சயத்தால' என்பதில், 'ஆல' என்னும் மூன்றும் வேற்றுமையுருப-'ஓடு' என்னும் உருபின் பொருளில் வந்தது; இங்கு அடைமொழிப்பொருள் ஐயமுடையவனைப் என்க.

"உற்றகிரிமீது கிரவுஞ்சமதி னேர்சார, மற்று நிகரற்றதொரு மாய நகருடே, சுற்றவுணர் சேனையொடு சூரிளவ லாகும, வெற்றிபுனை தாரகன் விருப்புட னிருப்பான்' என்பது, கந்தபுராணச்சுருக்கம். (௪)

ரு. இன்ன வன்றனை யடுதியே லெளிதுகா ணிளையோன்
முன்ன வன்றனை வென்றிட லெனமுனி மொழிய
மின்னு தண்சுடர் வேலவ னவற்றினை வினவி
யன்ன வன்றனை முடிக்குது மிவணென வறைந்தான்.

(இ - ள்.) இன்னவன்றனை - இத்தாரகாசுரனை, அடுதியேல - (இப்பொழுது) கொல்வாயானால், இளையோன் முன்னவன்தனை வென்றிடல் - இவனது மூத்ததமையனான சூரனை (ப் பின்பு) சயித்திடுதல், எளிது காண் - எளியதாம், என - என்று, முனி மொழிய - நாரதமுனிவர் சொல்ல,— மின்னு தண் சுடர் வேலவன் - விளங்குகின்ற குளிர்ந்த ஒளியையும வேலாயுதத்தையு முடையவனான முருகக்கடவுள், அவற்றினை வினவி - அந்தவார்த்தைகளைக் கேட்டு, 'இவண் - இவ்விடத்து [இப்பொழுது], அன்னவன் தனை முடிக்குதும - அந்தத்தாரகாசுரனை யழித்திடுவோம' என - என்று, அறைந்தான் - உறுதிமொழிகூறியருளினான், (எ - று.)

காண் என்னும் ஒருமையேவல், இடைசசொல்தன்மைப்பட்டு, தேறற்பொருள்குறிக்கும். 'வினவி' என்றது - இங்கே, இலக்கணையாய், 'செவியுற்று' என்ற பொருளில் வந்தது, இது இங்ஙனம வருதற்குக் காரணம், இதன்பரியாயமான 'கேட்டு' என்னுஞ் சொல் இவ்விருபொருளுக்கு முரியதாதல். 'முடிக்குதும்' என்ற தன்மைப்பன்மைமுற்றில், கு - சாரியை. 'தும' விகுதி - எதிர்காலங்காட்டிற்று; [நன-பத-கஅ.] அறைதல் - உறுதிக்கூறுதல். 'இன்னவன்,' 'அன்னவன்' என்ற பெயர்களில், ன் அ - சாரியைகள். தன் - சாரியை. 'அடுதி' என்ற முன்னிலையொருமைமுற்றில், இகரவிகுதி-எதிர்காலங்காட்டிற்று: த-எழுத்துப்பேறு ஏல்-என்னில் என்பதன் மரூஉ. இளையோன்-ன், ஐ-சாரியைகள். 'வென்றிடல்' என்றதில், 'இடு' என்பது-துணிவுணர்த்திற்று. அவற்றினை-அற்று, இன்-சாரியைகள்; அவ்-முதல்வேற்றுமை: [நன்-உருபு - கக.] இவண், அண் - இடப்பொருள்காட்டும் விகுதி; அவண், எவண், நடுவண் என்பவற்றிலும் இது.

"வென்றியுற வின்றிவனை வென்றிடுவை யாயின், வன்றிறல்கொள் சூரனை வதைப்ப தெளி தென்னத், துன்றுகதிர் வேலன் முனி சொன்னமை

வினவிச, சென்றிவண தாருயிர் சிதைத்திடுது மென்றான்" என்பது, கந்த புராணச்சுருக்கம். (௬)

வேறு.

௬. சிறந்திடு முருகவேள் ளிணைய செப்பலு
நிறைந்திடு மமரரு மிறையு நெஞ்சினி
லுறைந்திடு கவலொரீஇ யுவகை யெய்தினா
ரிறந்தனன் றாரக னின்றே டேயென

(இ - ள்) சிறந்திடு - (யாவரினும்) மேம்பட்ட, முருக வேள் - குமார மூர்த்தி, இனைய செப்பலும் - இச்சொற்களைக் கூறியவளவிலே,—நிறைந்திடும் - (அங்கு)நிறைந்துள்ள, அமரரும் - தேவர்களும், இறையும் - (அவர் கட்கு) அரசனான இந்திரனும், நெஞ்சினில் உறைந்திடு கவல் ஒரீஇ - மனத்தில (வெகுகாலமாகத்)தங்கியுள்ள கவலை நீங்கி, தாரகன் இன்றேடே இறந்தனன் என - தாரகாசுரன் இன்றைக்கே இறந்துவிட்டானென்று நிச்சயித்து, உவகை எய்தினார் - மகிழ்ச்சியடைந்தார்கள்; (எ - று.)

முருகவேள் - 'குமரவேள்' என்றாற்போலக் கொள்க. முருகு-தெய்வத் தன்மை, இளமை, அழகு; அதனையுடையவன், முருகன். 'இனைய' என்றது, கீழ் "அன்னவன்தனை முடிக்குது மிவண்" என்றதை. கவல் - முதனிலைத் தொழிற்பெயர். ஒரீஇ = ஒருவி, சொல் விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசையளபெடை; மாத்திரை மூன்று இறந்தனன் - விரைவுந் தெளிவும் பற்றிய காலவழுவமைதி; [நன் பொது-௩௩.] இன்றேடே - இப்பொழுதே; இதில், மூன்றனுருபு இடப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம்; ஏ-தேற்றம். இனைய - பலவின்பாற்பெயர். 'அமரர்'என்ற வடசொல்லுக்கு-(அமிருதமுண்டதனால்) மரணமில்லாதவ ரென்பது காரணப்பொருள். உவகை - 'கை'விகுதி பெற்ற தொழிற்பெயர்.

இதுமுதற் பதநூக்கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௬)

எ. ஐயர்கள்பெருமகிழ்வடையவாறிரு
கையுடைமுருகனக்காலைதன்புடை
மெய்யருளெய்தியவீரவாகுவாந்
துய்யனைநோக்கியேயினையசொல்லுவான்

(இ - ள்.) ஐயர்கள் - தேவர்கள், பெரு மகிழ்வு அடைய - (இவ்வாறு) மிக்கமகிழ்ச்சியையடைய,—ஆறு இரு கை உடை முருகன் - பன்னிரண்டு திருக்கைகளையுடைய முருகக்கடவுள்,—அ காலை - அப்பொழுது, தன் புடை - தனதுபக்கத்திலுள்ள, மெய் அருள் எய்திய - உண்மையான கருணையைப் பெற்ற, வீரவாகு ஆம் - வீரவாகுவாகிய, துய்யனை நோக்கி - பரிசுத்தகுணமுடையவனைப் பார்த்து, இனைய சொல்லுவான் - இவ்வார்த்தைகளைக் கூறியருள்வான்; (எ - று.)—அவற்றை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க.

ஐயர்கள் - முனிவர்களுமாம்; ஆர்யர் என்ற வடசொல்லின் விகாரம்: சிறந்தவ ரென்று பொருள்; இதில், கள் - விகுதிமேல்விகுதி. காலம் - காலை யென ஈறுதிரிந்தது. 'மெய்யருளெய்திய' என்பதற்கு - (பிராணிகளிடத்துத)தவறாத கருணையையுடைய என்றாவது, (முருகக்கடவுளது) உண்மையான திருவருளைப் பெற்றுள்ள என்றாவது கருத்துக்கொள்க. வீரபாஹு என்னும் வடசொல் - வலியதோள்களையுடையா னென்று பொருள்படும்.

தூய்யன் - தூய்மையென்னும் பண்பி னடியாப் பிறந்த பெயர்; பண்புப் பகுதி ஈறுபோய் ஆதி குறுகிற்று வீரவாகுவாந் தூய்யன் - தூய்யனும் வீர வாகு என மொழிமாற்றலுமாம். நோக்கியே—ஏ - அசை; தேற்றமும், பிரிநிலையுமாம. (எ)

அ. உற்றவக்கிரிகிரவுஞ்சமாகுமான்
மற்றதனொருபுடைமாயநொச்சியுட்
செற்றியவசுரர்தஞ்சேனைதன்னுட
னற்றமிறாரகனமர்தன்மேயினான்.

இதுமுதல் மூன்று கவிகள - ஒருதொடர்.

(இ - ள்.) உற்ற அ கிரி - எதிரில்நேர்பட்டுள்ள அந்த மலை, கிரவுஞ்சம் ஆகும் - கிரௌஞ்ச மென்பதாம்; அதன் ஒரு புடை - அம்மலையின் ஒருபக் கத்தில், மாயம் நொச்சியுள் - மாயாபுரியென்னுஞ் சிற்றூரில், செற்றிய அசு ரர்தம்சேனைதன்னுடன் - நெருங்கிய அசுரசேனையுடனே, அற்றம் இல் தார கன் - அச்சமில்லாத தாரகாசுரன், அமர்தல் மேயினான் - தங்கிவசித்திருக் கின்றான்; (எ - று.)—ஆல - ஈற்றசை. மற்று அசை; வினைமாற்றுமாம.

மாயநொச்சி - மாயையமைந்த ஊா. பெரிய அரணகரத்தை 'நொச்சி' என் றது, இகழ்ச்சியால். நொச்சி - மதிலுமாம், நகர்க்கு இலக்கணை. மாயம் - மாயா என்னும் வடசொல்லின் திரிபு. அசுரர் - அஸுரர். வடசொல திரிபு; இது, தேவர்க்கு எதிரானவ ரென்றும, பாற்கடலினின்று தோனறிய சுரை யை [வாருணியென்னும மதுவை]ப் பானஞ்செயயாதவ ரென்றும, (பகை வரது) உயிரைக் கவாபவ ரென்றும காரணப்பொருள்படும். அசு-உயிா. தம், தன - சாரியைகள். அற்றம்-தளாச்சியும, அழிவுமாம். அமாதல் மேயினான்- தங்குதலைப் பொருந்தினான். (அ)

கூ. ஏயநின்றுணைவர்களிலக்கத்தெண்மர்க
ளாயிரவெள்ளமாமடல்கொள்பூதர்கள
சாய்வறுதலைவர்கடமமொடேகியே
நீயவன்பதியினைவளைத்திநேரிலாய்.

(இ - ள்.) நேர இலாய் - ஒப்பிலலாதவனே!—ஏய - பொருந்திய, நின துணைவர்கள் இலக்கத்து எண்மர்கள்-உனது உடன்பிறந்தவர்களாகிய லக்ஷ த்துஎட்டுப்பேர்களும், ஆயிரம் வெள்ளம் ஆம் அடல கொள் பூதர்கள்-ஆயிர வெள்ளக்கணக்கான வலிமைகொண்ட பூதாகளும, சாய்வு அறு தலைவர்கள் தம்மொடு-அழிதலில்லாதபூதகணநாதாகளும் ஆகியஇவாகளோடு, நீ—,ஏகி- சென்று, அவன பதியினை வளைத்தி - அத்தாரகனது ஊரை வளைத்திடு வாய்; (எ - று.)

இஙகே, 'துணைவர்கள் இலக்கத்தெண்மா' என்றது, முன்கதைத்தொ டர்ச்சியிற் குறிக்கப்பட்ட முருகக்கடவுளின்தம்பியரான லக்ஷத்தொன்பது வீரருள் வீரவாகு வொழிந்தவரை. இவர்களில் வீரகேசரி முதலிய எண்மர் வீரவாகுவுக்குப் பின்தோன்றியவரும, மற்றையிலக்கத்தவர் வீரவாகுவுக்கு முன்தோன்றியவரு மாவர். இலக்கம-வடசொல்திரிபு. எண்மர்-எட்டுஎன் னும் பெயரினடியாப் பிறந்த பெயர்; பகுதி ஈறுகெட்டு, டகரம் ணகரமாயி ற்று; [நன் - உயிர் - ௩௮. ௬௩:] மகரவொற்று பெயரிடைநிலை. முருகக்கட வுள், தனக்குச்சேனையாகச் சிவபிரானால் அனுப்பப்பட்டுவந்த இரண்டாயிர வெள்ளமவீரருள், ஓராயிரவெள்ளவீரரைத் தன்னுடன்நிறுத்தி, மற்றோ ராயிரவெள்ளவீரரை உடனழைத்துச்செல்லும்படி வீரவாகுவுக்குக் கட்டளை யிட்டனனென்க.

வெள்ளம் - ஒரு பெருந்தொகை: மிகப்பல அக்ஷௌகிணி கொண்டது. யானையொன்றும், தேரொன்றும், குதிரைமூன்றும், காலாளைந்துங் கொண்டது - பத்தி யெனப்படும்; அப்பத்தி மூன்று கொண்டது - சேனாமுகம்; சேனாமுகம் மூன்று-குல்மம்; குல்மம் மூன்று-கணம்; கணம் மூன்று-வாகினி; வாகினி மூன்று - பிருதனை; பிருதனை மூன்று - சமூ; சமூ மூன்று - அனீகினி; அனீகினி பத்து - அக்ஷௌகிணி; அக்ஷௌகிணி எட்டுக் கொண்டது - ஏகம்; ஏகம் எட்டு கோடி; கோடி எட்டு - சங்கம்; சங்கம் எட்டு - விந்தம்; விந்தம் எட்டு - குமுதம்; குமுதம் எட்டு பதுமம்; பதுமம் எட்டு - நாடு; நாடு எட்டு - சமுத்திரம். அந்தச சமுத்திரம் எட்டுக்கொண்டது - வெள்ளம் எனக் காண்க. 'தலைவர்கள்தம்மொடு' என்பதி லுள்ள 'ஒடு' உருபை, 'எண்மர்', 'பூதர்கள்' என்றவற்றோடுங் கூட்டுக. ஏகி, ஏகு - பகுதி. வளைத்தி - ஏவலொருமைமுற்று. 'அடல்வெம்பூதர்கள்' எனவும் பாடமுண்டு. ஏகியே—ஏ - அசை.

பூதர் - வடசொல்: இவர்கள், சிவபிரானுக்கு அடிமைபூண்டு ஒழுகுபவர். சாய்வு - தோல்வியாற் பின்னிடுதலுமாம். தலைவர்கள - நந்தி, உக்கிரன், சண்டன், அக்கினிநேத்திரன், சிங்கன் முதலியோர் நூற்றெண்மர். வளைத்தல் - முற்றுகைசெய்தல். நேர் - எதிருமாம். (௯)

௧0. தடுத்தெதிர்மலைந்திடுமவுணர்தானையைப்
படுத்தனைதாரகப்பதகனெய்துமே
லடுத்தமரியற்றுதியரியதேலியா
முடித்திடவருகுதும்முந்துபோவென்றான்.

(இ - ள்.) தடுத்து - மறுத்து, எதிர் மலைந்திடும் - எதிரிற்போர்செய்யும், அவுணர் தானையை-அசுரர்சேனையை, படுத்தனை-அழித்து;—தாரகன் பதகன் எய்துமேல்-தாரகனாகிய தீவினையுடையவன் அங்குவந்து எதிர்ப்பானானால், அடுத்து அமர் இயற்றுதி - நெருங்கி(அவனோடும)போர்செய்வாய்: அரியது ஏல் - (உனக்கு அவனைப் போரில் வெல்லுதல்) அரிய தாகுமானால், யாம்—, முடித்திட - (அவனை) அழிப்பதற்கு, வருகுதும்-வருவோம் முந்து போ-முனனே செல்வாய், என்றான்-என்று (வீரவாகுவுக்கு முருகக்கடவுள்) கட்டளையிட்டருளினான்; (எ - று.)

'அரியதேல் யாம் முடித்திடவருகுதும்' என்றதனால், வீரவாகுதேவர் தாரகனையழிக்கவல்லரல்ல ரென்பது தோன்றும். 'முடித்திட' என்பதை 'அரியதேல்' என்றதனோடுங் கூட்டலாம். அரியதேல்+யாம் = அரியதேலியாம்: தன்னொழிமெய்ம்முன் யகரம்வர இகரந்தோன்றிற்று; [நன் - மெய்-௩.] அமர் - ஸமர மென்ற வடசொல்லின் விகாரம்; சமா, சமம் என்பனவும இவ்வாறே. வருகுதும்—கு-சாரியை. படுத்தனை முன்னிலையொருமை முற்றெச்சம். பதகன் - பாதக னென்பதன் குறுக்கல்; பாதகம் - தீவினை.

"என்றபி னடற்பெறு மெழிற்புயலை வேலோன், நன்றுறு தெரிந்தினைய நாகமதி னோர்சார், வென்றியுள மாயநகர்மீ தவுணரோடும், வன்றிறல் கொள் தாரகன் வயத்தொடுவதிந்தான்." "அம்புவி யழுந்தவரு மாயிரநல் வெள்ளத், தும்பர்தொழு சாரத ருவர்க்கிறைவனோருன், தமபியர்களோடு மிகு தானவர்களோடு, மொய்மபொடு செருப்புரிய முந்துபடரென்றான்" என்பன, கந்தபுராணச்சுருக்கம். (௧0)

௧௧. நலமிகுகுமரவேணவிலவின்னணம்
வலமிகுசிறப்புடைவாகுநன்றெனத்
தலைமிசைக்கூப்பியகரத்தன்சூழ்ந்துமுன்
னிலமிசையிறைஞ்சினனேர்ந்துநிற்பவே

இதுவும், அடுத்த கவியும் - குளகம்; ஒருதொட ரெனப்படும். [குளகமாவது - பலபாடல்கள் தொடர்ந்து ஒருவினையைக்கொண்டுமுடிவது; "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்." குளகமல்லாதது, முத்தக மெனப்படும்; அது - ஒருசெய்யுள் தனியேநின்று முடிவது: "முத்தகச்செய்யுள் தனிநின்று முடியும்."]

(இ - ள்.) நலம் மிகு குமர வேள் - நற்குணங்கள் மிக்க முருகமூர்த்தி, இன்னணம் நவில-இவ்வாறு சொல்ல,—வலம் மிகு சிறப்பு உடை வாகு-வலிமை மிக்க மேன்மையையுடையதோள்களையுடையவனான வீரவாகு,—நன்று எனா-'நல்லது' என்று சொல்லி, தலைமிசை கூப்பிய கரத்தன்-தலையின்மேற் குவியவைத்துத்தொழுத கைகளையுடையவனாய், முன் - எதிரிலே, நிலம் மிசை தாழ்ந்து இறைஞ்சினன் - தரையில் விழுந்து நமஸ்கரித்து, நேர்ந்து நிற்ப - (போர்க்குச்செல்லுதற்கு) இணங்கிநிற்க, (எ-று.)—'ஆதி ஏவினான்' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

நலம் மிகு - அழகு மிக்க எனினுமாம். 'வலமிகுசிறப்புடைவாகு' என்றது, 'வீரவாகு' என்னும் பெயர்க்கு ஓர் பரியாயமாக நின்றது: அடுத்தகவியில் 'திறல்வாகு' என்பதும் இப்படியே, மேலும் இங்ஙனம் வருவனவுங் காண்க. 'நன்று' என்றது, அங்கீகாரத்தை [உடன்பாட்டை] உணர்த்தும். தலைமேற்கைகூப்பிவணங்கல், திரியங்கநமஸ்கார மெனப்படும். தாழ்ந்து நிலமிசையிறைஞ்சுதல் - ஸாஷ்டாங்க நமஸ்காரம்; தண்டனிடுதல். நிற்ப—ப் - எழுத்துப்பேறு. ஏ - ஈற்றசை. இன்னணம் - இன்னவண்ணம் என்பதன் மரூஉ. வலம் - பல மென்ற வடசொல்லின் விகாரம். கூப்பு - கூம்பு என்பதன் பிறவினை. கரம் - தற்சம வடசொல். நலம் - 'அம்' விகுதிபெற்ற பண்புப்பெயர். நிலம் - (சலியாமல்) நிற்பது என்று பொருள்படுங் காரணக்குறி; நில் - பகுதி, அம்-கருத்தாப்பொருள்விகுதி; 'அசலா,' 'ஸ்திரா' என்ற பூமியின் வடமொழிப்பெயர்கள் இப்பொருளனவாதல் காண்க. இறைஞ்சினன் - முற்றெச்சம். முன் - இடமுன்; சந்நிதானத்தி லென்க. நேர்ந்து - அக்கட்டளையை நிறைவேற்ற இசைந்து. (௧௧)

௧௨ ஏந்தலந்துணைவராமிலக்கத்தெண்மரை
யாய்ந்திடுபூதரையாதிநோக்கியே
வாய்ந்திடுபெருந்திறல்வாகுதன்னுடன்
போந்திடுமவுணரைப்பொரவென்றேவினான்.

(இ - ள்.) ஆதி - (யாவர்க்கும்) முதல்வனான முருகக்கடவுள்,—ஏந்தல் அம் துணைவர் ஆம் - உயர்வையுடைய அழகிய தம்பிமாரான, இலக்கத்து எண்மரை - லக்ஷத்தெட்டுவீரர்களையும், ஆய்ந்திடு பூதரை - (அனைத்தையும்) ஆராய்ந்தறிந்த பூதர்களையும், நோக்கி - பார்த்து,—'அவுணரை பொர-அசுரர்களை எதிர்த்துப் போர்செய்யும்பொருட்டு, (நீங்கள்), வாய்ந்திடு பெருந்திறல் வாகுதன்னுடன் - உரியதாகப்பெற்ற பெருமையையுடைய வீரவாகுவுடனே, போந்திடும் - செல்லுங்கள்', என்று ஏவினான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

ஏந்தல்-தொழிற்பெயர்; இனி, தொழிலாகுபெயராகக் கொண்டு, ஆண்பாற்சிறப்புப்பெயராக்கி, 'ஆதி' என்பதற்கு அடைமொழியாகக்கூட்டி, பெருமையிற்சிறந்தவனான முன்னோனென்றுங் கொள்ளலாம். அன்றி, ஏந்தல்-பெருமையையுடைய வீரவாகுவுக்கு, அம் துணைவர் ஆம் - அழகிய உடன்பிறந்தவரான என்றலும் ஒன்று. திறல்வாகு - வீரவாகு; திறல் - வலிமை, வீரம். 'ஆய்ந்திடு பூதர்' என்பதற்கு - (சிறந்தவராகத்) தேர்ந்தெடுக்கப்பட்ட பூதகணங்க ளென்றும் பொருள்கொள்ளலாம். மூன்றாமடியில், பெருந்

திறல்வாய்ந்திடுவோகு என மொழிமாற்றியுரைப்பாரு முளர். போந்திடும் - 'உம்'விகுதி பெற்ற எவற்பன்மைமுற்று. ஆதி - வடசொல். (௧௪)

௧௫. ஏவலுமனையவராயாருமெம்பிரான்
பூவடி வணங்கிமேபோதற்குன்னலும்
ஆவியுளாவியாமமலன்பாங்குறுந்
தேவர்கள்கம்மியற்கிதனைச்செப்புவான்.

(இ - ள்.) ஏவலும் - (இங்ஙனம்) கட்டளையிட்டவளவிலே, அனையவர் யாரும் - அவர்களெல்லாரும், எம்பிரான் பூ அடி வணங்கி - எமது தலைவனான முருகக்கடவுளுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரித்து, போதற்கு உன்னலும் - (போகுதற்குச்) செல்லக்கருதியவளவிலே,—ஆவியுள் ஆவி ஆம் அமலன் - உயிரினுள்ளும் உயிராகின்ற களங்கமற்ற அக்கடவுள்,—பாங்கு உறும் - தன் அருகிற் பொருந்திய, தேவர்கள் கம்மியற்கு - தேவர்களுடைய சிற்பியான விசுவகர்மனுக்கு, இதனை செப்புவான் - இக்கட்டளையைக் கூறுவான்; (எ - று.)—அக்கட்டளை இன்னதென்பதை, அடுத்தகவியிற் காண்க.

உடம்பினுள் உயிர் நின்று அதனைக்கொண்டு தொழில்நடத்துதல்போல, பரமாத்மாவாகிய கடவுள் ஜீவாத்மாவாகிய உயிரினுள்ளும் உயிராய் [அந்தராத்மாவாய்]த் தான் நின்று அதனைக்கொண்டு தொழில்நடத்துகின்றன னென்பது நூற்கொள்கையாதலால், 'ஆவியுளாவியா மமலன்' என்றார். அமலன் - மாசில்லாதவன்; ந + மலம் + அன் எனக் காண்க. இப்பெயர், கடவுள் தான் இயல்பிற் கர்மசம்பந்தமில்லாதவ னென்பதுமாத்திரமேயன்றித் தனக்குச்சரீரமாகவுள்ள சராசரங்களின் கர்மங்கள் தொடரப்பெறுதலு மில்லாதவன் என்ற பொருளையும் உட்கொண்டது. 'உயிரினுள்உயிராய்நிற்கிறான்' என்றவளவில், அவ்வுயிர்செய்யும் புண்ணியபாபரூபமான இருவினையின் சம்பந்தம் கடவுளுக்கு உண்டாகுமன்றோ? என்று எழுகின்ற சங்கையை நீக்குதற்கு, 'ஆவியுளாவியாம்' என்றதை அடுத்து 'அமலன்' என்று கூறினார். உயிரினுள்உயிராய்நிற்பவனுக்கு அவ்வுயிரின்வினை தொடர்தலில்லாமையை, உடம்பினுள்நிற்கும் உயிர்க்கு அவ்வுடம்பின்குணமான கருமை செம்மை குறுமை நெடுமை முதலியன பற்றாமை போலக் கொள்க.

ஏவலும், உன்னலும் - 'உம்' ஈற்று இறந்தகாலவினையெச்சங்கள்; பிற பொருளோடு விரைவையுங் குறிக்கும். 'எம்' என்ற தன்மைப்பன்மை, எல்லாவுயிர்களையும் உளப்படுத்தும். பிரான் - ப்ரபு எனனும் வடசொல்லின் சிதைவு என்பர். 'பாங்குறுந் தேவர்கள்கம்மியன்' என்றதனால், தேவர்களுடனே தேவதச்சனான விசுவகர்மா முருகக்கடவுளின்கட்டளையை எதிர்நோக்கிக்கொண்டு அருகிற்காத்துநின்றிருந்தன னென்பது விளங்கும். அனையவர் - அகரச்சுட்டடியாப்பிறந்த பெயர்; ன், ஐ - சாரியைகள். 'யார்' என்பதில், யாவினா - எஞ்சாமைகுறித்தது; உம்மை - முற்றுப்பொருளது. "பூவிற்குத் தாமரையே" என்றபடி எல்லாமலர்களுள்ளுந் தாமரை சிறத்தலால், அது அடைமொழிகொடாது வாளா 'பூ' எனப்பட்டது; "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்றார் பிறரும். திருவடிக்குத் தாமரைமலருவமை, செம்மை மென்மை அழகுகளில். பாங்குறுங் கம்மிய னெனக. கர்மம்-தொழில்: அதனைச் செய்பவன், கர்மீ; இவ்வடசொற்கள் - முறையே கம்மம், கம்மி என விகாரப்படும்: வடமொழிச்சிதைவாகிய 'கம்மி' என்பது, 'அன்' என்ற ஆண்பால்விகுதியை யேற்று 'கம்மியன்' என நின்றது; கர்மம் - இங்கே, சிற்பத்தொழில். (௧௫)

கச. மேதகுபெருந்திறல்வீரவாகுவை
யாதியர்தமக்கெலா மளிக்கும்பான்மையா
லேதமிலாதபல்லிரதநல்கெனு
வோதினனுலகெலாமுதவுந்தொன்மையோன்.

(இ - ள்) உலகு எலாம் உதவும் தொன்மையோன் - உலகங்களையெல்லாம் படைக்கும் பழமையான இயல்பையுடைய முருகக்கடவுள்,—(விசுவகருமனைநோக்கி),—'மேதகு-மேன்மைமதங்கிய,பெருந்திறல்-மிக்கவல்லமையையுடைய, வீரவாகுவை ஆதியாதமக்குஎலாம்-வீரவாகுவைமுதலாகவுடையவரெல்லார்க்கும், அளிக்கும் பான்மையால் - கொடுக்கத்தக்கவிதமாக, ஏதம் இலாத பல் இரதம் - குற்றமில்லாத பல தேர்களை, நல்கு-செய்துகொடுப்பாய்', எனு - என்று, ஓதினன் - கட்டளையிட்டருளினான்; (எ - று)

ஒப்புயர்வற்ற முழுமுதற்கடவுளாகியசிவபிரானுக்குஉரிய படைத்தல் முதலியதொழில்களெல்லாம் அவனது திருக்குமாரனும் அவனதுவடிவுமாகியமுருகனுக்கும் ஏற்கு மென்ற கொள்கையால்,'உலகெலாமுதவுந் தொன்மையோன்' என்றார். கீழ்க்கவியில் 'ஆவியுளாவியா மமலன்' என்றதும் இதுபற்றியே. அன்றி, கீழ்ப் பிரமனைச் சிறைசெய்தபொழுது அவனது படைத்தல்தொழிலைத் தானேஏற்றுக்கொண்டு நடத்தியமைபற்றி, உலகங்களையுதவும் முன்னோனென்றதாகவுங் கொள்ளலாம். "உயிரினுக் குயிராகியே பரஞ்சுடரொளியாய், வியன்மறைத்தொகைக் கிறதாய் விதிமுதலுரைக்குஞ், செயலினுக்கெலாமாதியாய வைகிய செவ்வே, ளயனெனப் படைக்கின்றது மற்புதமாமோ" என்ற அயனைச்சிறைபுரிபடலத்துச்செய்யுள், இங்கே அறியத்தக்கது. இனி, சுப்பிரமணியமூர்த்தியே யாவரினுஞ்சிறந்தமுதற்கடவு ளென்ற சித்தாந்தமும ஒன்றுஉண்டென வுணர்க; அது, கௌமார சமயமெனப்படும். மேல் சுரம்புகுபடலத்தில் "சராசரமயாவுந்தந்த சண்முகன்' எனபதுங் காண்க.

'உலகு' என்ற பலபொருளொருசொல், இங்கே இரட்டுறமொழிதலால், இடத்தையும் பிராணிவர்க்கத்தையும் ஒருங்கேஉணர்த்தும். 'வீரவாகுவை' என்றதில், ஐ - அசை யென்றலும் பொருந்தும். ஏதம் - சிறபக்குற்றம். ரதம் - வடசொல். அளிக்கும்பான்மையால் - கொடுக்கும்படி யென்ற வாறு. பான்மையால் நல்கு 'என இயையும்; அவரவர்தகுதிக்கேற்பத் தேர்களைநிருமிப்பா யென்றதாம். உலகமெல்லாவற்றையும்படைக்கும்வல்லமைவாய்ந்தகடவுள் இவ்வீரர்கட்குவேண்டியதேர்களைத் தானேபடையாமல் தெய்வத்தச்சனைநோக்கி 'நீ படை' என்றது, தனக்குக்குற்றேவல்செய்ய நிற்கின்றஅவனைப் பணிகொள்ளுங் கருணையா லென்க; இக்கருத்தை, 'ஓதின னுலகெலாமுதவுந்தொன்மையோன்' என்ற தொடரிற் குறிப்பித்தார். எலாம் - தொகுத்தல். உலகு-லோக மென்ற வடசொல்லின் விகாரம்; தனியே தமிழ்மொழி யென்பர் நச்சினார்க்கினியர். பல்லிரதம்-பல இரதம்.

கரு. அத்திறங் கேட்டதோ ரமரர் கம்மிய
னொத்ததோர் மாத்திரை யொடுங்கு முன்னரே
சித்திர வயப்பரி சீயங் கூளிக
ளித்திறம் பூண்டபல் லிரத நல்கினான்.

(இ - ள்.) அ திறம் கேட்டது-அவ்விதமான கட்டளையைக் கேட்டதன்மையையுடைய, ஓர் அமரர் கம்மியன்-ஒப்பற்ற தேவசிற்பி [விசுவகர்மா],— ஒத்தது ஓர் மாத்திரை ஒடுங்கும் முன்னரே-சரியான ஒருமாத்திரைப்பொழுதுகழிவதற்குமுன்னே,—சித்திரம் வய பரி சீயம் கூளிகள் இ திறம் பூண்ட பல் இரதம் நல்கினான்-அழகிய வலிமையையுடைய குதிரைகளும் சிங்கங்

ளும் பேய்களும் என்னும் இவ்வகைகள் பூட்டப்பட்ட பலதேர்களை நிருமித்தான்; (எ - று.)

கேட்டது-இறந்தகாலத்தொழிற்பெயர். இரண்டாம்வேற்றுமையுருபும் பயனுமுடன்தொக்க தொகை யாதலால், 'கேட்டது ஓர் அமரர் கம்மியன்' என்றது திணைவழுவன்றென்றும், 'கேட்டவோ ரமரர் கம்மியன்' என மூலத்தைத் திருத்தவேண்டுவதில்லை யென்றும் அறிக; இனி, திணைவழுவமைதி யெனினும் இழுக்காது; "முகத்திலொன்றதா வவ்வெழுத்ததுடையதோர் முருகன்" எனக் கீழ் அயனைச்சிறைபுரிபடலத்தில் வந்ததுங் காண்க; இங்ஙனமே இந்நூலிற் பலவிடங்களிலும் பயிலும். மாத்திரை மாத்ரா என்னும் வடசொல் திரிந்தது. ஒத்ததோர்மாத்திரை - மனிதர் இயல்பாக ஒருமுறை கண்ணிமைத்தற்குக் கொள்ளும் பொழுது; "இயல்பெழு மாந்த ரிமை நொடி மாத்திரை" என்பது காண்க. மாத்திரை யொடுங்குமுன்னரே - ஒரு மாத்திரைப் பொழுதி னுள்ளே யென்றபடி; இது, விரைவை விளக்கும் அதிசயோக்தி. முன்னர், ஆ - சாரியை. சித்திரம், சீயம் - சித்ரம், ஸிம்ஹம என்னும் வடசொற்களின் திரிபு. சித்திரம் என்பதற்கு - வியக்கத்தக்க என்றும் பொருள்கொள்ளலாம். வய - வலிமையுணர்த்தும் உரிச்சொல்; "வய வலியாகும்" என்பது, தொல்காப்பியம். வயம் எனப் பிரித்தால், வெற்றியென்று பொருளாம். பரி - (எறுபவனைப்) பரிப்பது எனக் காரணப்பெயர்; பரித்தல் - வகித்தல். (கரு)

வேறு.

கசு. அன்ன தேர்த்தொகை யதனை யெம்பிரான்
மின்னு காலவேல் வீர வாகுவும்
பின்ன ரெண்மரும் பிறருஞ் சாரத
மன்ன ருமபெற வழங்கி னனரோ

(இ - ள்.) எம்பிரான் - எமது தலைவனான முருகக்கடவுள்,—அன்ன தேர் தொகையதனை - அந்தத் தேர்களின தொகுதியை,—மின்னு காலன் வேல - விளங்குகிற யமன்போன்ற வேலாயுதத்தையுடைய, வீரவாகுவும்—, பின்னா எண்மரும் - (அவனது) தம்பியரான எட்டுப்பேரும், பிறரும - மற்றை லக்ஷம்வீரர்களும், சாரதர் மன்னரும - பூதகணத்தலைவர்களும், பெற - பெற்றுக்கொள்ளுமபடி, வழங்கினன் - (அவர்கட்குக்) கொடுத்தருளினன்.

காலவேல் - உவமத்தொகை. தவறாது கொல்லுதலும் கொடுமையும் பற்றி, யமனை உவமைகூறினா. இனி, 'காலவேல' என்பதற்கு - யமனது சூலாயுதம்போனற வே லென்றும பொருள்கொள்ளலாம். இந்த அடைமொழியை, வீரவாகு முதலிய அனைவர்க்குங் கூட்டுக. வேலந்தம ராதலால், இவர்கட்கெல்லாம் 'வேல்' அடைமொழியாக சிறுத்தப்பட்டது. பின்னர் - பின்பிறந்தவர்: இடைச்சொல்லடியாகப்பிறந்த பலர்பாற்பெயர். அன்ன - சுட்டடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; ன்-சாரியை. மற்றொரு 'ன்'-சந்தி. மன் - பெருமை; அதனையுடையவர், மன்னர். அரோ-ஈற்றசை.

இதுமுதல் ஐந்து கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் மாச்சீர்களும, மற்றையிரண்டும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (கசு)

கஎ. பாகர்தூண்டிடப்படருநதேர்கண்மேல்
வாகைசேர்தரும்வாகுவேமுத
லாகினோரடைந்தம்பொன்மால்வரைத
தோகைமைந்தனைத்தொழுதுபோற்றினர்.

(இ - ள்.) வாகை சேர்தரும் வாகுவே முதல் ஆகினோர் - வீரம்பொருந்திய தோள்களையுடையவனான வீரவாகு முதலானவர்கள்,—பாகர் தூண்டிட - சாரதிகள் செலுத்த, படரும் - செல்லுகின்ற, தேர்களமேல் - தேர்களின்மேல, அடைந்து - ஏறிவந்து அடைந்து,—அம் பொன் மால் வரை தோகை மைந்தனை - அழகிய சிறந்த பெரிய இமயமலையின மகளான உமாதேவியினது குமாரனாகிய சுப்பிரமணியனை, தொழுது போற்றினர் - வணங்கித் துதித்தார்கள்; (எ - று)

பாகு - தேர் யானை குதிரைகளைச் செலுத்துந் தொழில்; அதனையுடையவர், பாகர். வாகைசேர்தரும்வாகு = வீரவாகு. வாகை யென்னும் ஒருவகை மரத்தின் பெயர் - ஆகுபெயராய், அதன பூமாலையை அடையாளமாகத் தரித்தற்கு உரிய வெற்றியை உணர்த்தும்; அது, இங்கே, இலக்கணையாய, வெற்றிக்குக்காரணமான வீரத்தினமேல நின்றது. இமயம் மலையரசனுதலால, அதற்கு, 'அம பொன் மால்' என்ற அடைமொழிகள் கொடுக்கப்பட்டன. பொன்வரையென எடுத்தது. பொன்மயமான மலையென்றே கொள்ளினுமாம்; அப்பொழுது, மேருவின் தன்மையை இமயத்தின்மேலேற்றியது, உபசாரவழக்காம; அன்றியும், மேரு இமயம் மந்தரம் இம்மூன்றையும கவிகள் அபேதமாகவைத்து ஒன்றன்பெயரால் மற்றொன்றைக கூறும மரபை நூல்களிற் காணலாம். 'தோகை' என்ற மயிலிறகின்பெயர் - சினையாகுபெயராய், அதனையுடைய மயிலை யுணர்த்தி, பின்பு அது உவமையாகுபெயராய, மயிலபோலுஞ் சாயலையும நிறத்தையு முடைய மகளை யுணர்த்தியதனால், இருமடியாகுபெயர். வரைத்தோகை - பார்வதி, அம்பிகை மலைமகளானமை, கதைத்தொடர்ச்சியில விளக்கப்பட்டது. சேர்தரும் - தா - துணைவினை. வாகுவே, ஏ - அசை; உயர்வுசிறப்புமாம். ஆகினோர் என்ற பெயரில். ஆ - பகுதி, கு - சாரியை; 'ஆகு' - பகுதி யென்பாரு முளர். (கஎ)

கஅ. தொழுதுவள்ளலைச்சூழ்ந்துமும்முறை
விழுமிதாகியவிடைபெற்றேகினார்
பழுதினீத்தம்போர்பத்துநூறெனக்
குழுமிப்பாரிடங்குலவிச்செல்லவே.

(இ - ள்.) (இவ்வாறு அவ்வீரர்களனைவரும்),—வள்ளலை - வரையாது கொடுக்குந் தன்மையுடையவனான முருகக்கடவுளை, தொழுது - நமஸ்கரித்து, மு முறை சூழ்ந்து - மூன்றுமுறை பிரதக்ஷிணஞ்செய்துவந்து, விழுமிது ஆகிய விடை பெற்று - சிறப்புள்ளதான அநுமதியைப் பெற்றுக்கொண்டு, பாரிடம் - பூதகணங்கள், பழுது இல் நீத்தம் ஓர் பத்து நூறு என - குறைவற்ற ஓராயிரவெள்ளமென்னுந் தொகையாக, குழுமி - கூடி, குலவி செல்ல - சூழ்ந்துசெல்ல, ஏகினார் - சென்றார்கள்; (எ - று.)

வள்ளல் - வண்மை யென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்; பண்புப் பகுதி ஈறுபோய் 'வள்' என நின்றது: அல் - பெயர்விகுதி. நீத்தம் - நீந்தப்படுவது என வெள்ளத்திற்குக் காரணக்குறி; அம் - செயப்படுபொருள் விகுதி. அது - இங்கு, லக்ஷிதலக்ஷணையாய், சேனைப்பெருந்தொகையை யுணர்த்திற்று. சிவபிரானைச்சார்ந்த பிரமதகணங்களுக்கு 'பாரிஷதர்' என்று வடமொழியிற் பெயர் வழங்குகின்றது; அது, தமிழில் 'பாரிடம்' என விகாரப்பட்டதுபோலும். விழுமிது - சிறப்பை யுணர்த்தும் 'விழுமம்' என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்; பகுதியீற்று 'அம்' கெட்டு இகரச்சாரியைபெற்றது. விடை - விடுதல்; 'ஐ' விகுதி பெற்ற தொழிலாகுபெயர். பழுது - குற்றமுமாம். பத்துநூறு - பண்புத்தொகை. குழுமி, குழுமு - பகுதி. குலவி - உற்சாகங்கொண்டு எனினுமாம்.

௧௯. பாயபூதர்தம்படைக்குவேந்தரா
யேயினார்க்குவீறிலக்கத்தெண்மராய்
மேயினார்க்கெலாமவீரவாகுவோர்
நாயகமபெறீஇநடுவட்போயினான்.

(இ - ள்.) வீரவாகு—, பாய பூதர்தம் படைக்கு - பரவிய பூதகணங்களுக்கும், வேந்தர் ஆய் எயினார்க்கு - அக்கணத்தலைவர்களாயப் பொருந்தியவர்களுக்கும், வீறு இலக்கத்து எண்மர் ஆய் மேயினார்க்கு - ஒப்புயாவற்ற சிறப்பையுடைய லக்ஷத்தெட்டுப்பேராய்ப் பொருந்திய துணைவர்களுக்கும், எலாம் - ஆகியஎல்லார்க்கும், ஓர் நாயகம் பெறீஇ - ஒப்பற்ற தலைமையைப் பூண்டு, நடுவண் போயினான் - அவர்கள்நடுவிலே சென்றான்; (எ - று)

பாய என்பது தெரிநிலைப் பெயரெச்சத்தில், பா - பகுதி, ய் - இறந்தகாலவிடைநிலை. பூதர்தம்படை - பூதசேனை. பெறீஇ = பெற்று. சொல்லிசையளபெடை. படைக்கு, எயினார்க்கு, மேயினார்க்கு என்றவற்றில் எண்ணுமமைதொக்கது. பெயர்ச்செவ்வெண 'எலாம்' எனபதை, 'படைக்கு,' 'எயினார்க்கு', 'மேயினார்க்கு' என்ற மூன்றனோடுங் கூட்டியுரைத்தலுமாம். எல்லாமென்பது,இருதிணைக்குமபொது. எயினார்—எய-பகுதி,இன் -இறந்தகாலவிடைநிலை மேயினார்—மே-பகுதி,இன்-இடைநிலை,ய்-எழுத்துப்பேறு.

௨௦ அமர்விளைக்கமுந்தவனை யேவியே
தமர வேலையிற றானை சூழ்தர
விமைய வர்க்கிறை யேனை யோர்தொழக
குமர வேள்கடைக் கூழை யேகினான்

(இ - ள்.) அமர் விளைக்க - போரைத் தொடங்கி மிகுதியாகச்செய்யும்படி, முந்து-முன்னே, அவனை -அவ்வீரவாகுவை, ஏவி - (இங்ஙனம்) அனுப்பி, —குமரவேள்-முருகக்கடவுள்,—தமரம் வேலையின் தானை சூழ்தர-ஆரவாரத்தையுடைய கடலபோல மற்றைச்சேனைகள் தன்னைச் சூழ்ந்துவரவும்,இமையவர்க்கு இறை- தேவராஜனான இந்திரனும், ஏனையோர்-மற்றைத் தேவர்களும், தொழ-கைகூப்பிவரவும், கடை கூழை-பின்னணிச்சேனையின் புறத்தில, ஏகினான் - சென்றருளினான்; (எ-று.)

வேலை - ஆவீருஐயானவடசொல, வேலையின், இன்-ஐந்தனுருபு, ஒப்பு. சூழ்தர-சூழ; தா-துணைவினை. இமையவர் - இமையையுடையவா. என்றால், இமையில விசேஷமுடையவரென்றபடி; அதாவது-மூடாத கண்ணிமையையுடையவரென்றவாறு. இனி, இமையமலையில்வாழ்பவரென்றலுமொன்று. இமையாக்கண்ணையுடையவரென்று பொருள்கொண்டால், எதிர்மறைஆகாரம புணர்ந்து கெட்ட தெனவேண்டும். கூழை-பிற்படை; அதன்பின்புறம், கூழைக்கடை: அது, கடைக்கூழையென முன்பின்னாகத்தொக்கது, இலக்கணப்போலி. (௨0)

வேறு.

௨௧. பிற்பட வெம்பிரான் பெயர வேவலான்
முற்படு வீரனை முயங்கிப் பாரிடச்
சொற்படை படர்வன தூமந் தன்னொடு
சிற்பர னகையழல் புரத்துச் சென்றபோல்.

(இ - ள்.) சித பரன்-ஞானசொரூபியானவனும் (யாவரினும்) மேம்பட்டவனு மான சிவபிரானது, நகை-புன்சிரிப்பினின்று தோன்றிய, அழல்-தீ, தூமந்தன்னொடு-புகையுடனே, புரத்து சென்ற போல்-திரிபுரங்களின்மீது

(அவர்களையழிக்கச்) சென்றதுபோல,—எம்பிரான் பின் பட - பெயரா - எமது தலைவனை முருகக்கடவுள் பின்னேசெல்ல, ஏவலால் முன் படு வினை - (அவனது) கட்டளையினால் முன்னேசெல்லுகின்ற வீரவாகுவை, முயங்கி - சூழ்ந்து, சொல பாரிடம படை - புகழையுடைய பூதசேனைகள், படர்வன - சென்றனவாயின; (எ - று)

சென்றபோல படர்வன எனஇயையும். திரிபுரத்தையெதிர்த்துச் சிவபிரான் போர்க்குச்சென்றபொழுது அவனது புன்னகையினின்றுஉண்டான அக்கினி அப்பட்டணங்களையழிப்பதற்காக முன்னேசெல்ல அதனைப் புகை சூழ்ந்துசென்றாற்போன்றது, முருகக்கடவுள்பின்னேவர அவனதுகட்டளையால முன்னேசெல்லுகின்ற வீரவாகுவைப் பூதகணம்சூழ்ந்துசெல்வது என்பது கருத்தாம்; தற்குறிப்பேற்றவுவமையணி. சிவபிரான - அவனது குமாரனும் அவன்போலச் செந்நிறமுடையவனும் தவறாது மிகவிரைவிற் பகையழிக்கும் பேராற்றலுடையவனுமான முருகனுக்கும், சிவபிரானால் முன்னேசெலுத்தப்பட்ட கோபத்தீ-முருகனால் முன்னேசெலுத்தப்பட்டவனும் தவறாமற்பகையழிக்குந்தன்மையுடையவனும செந்நிறமுள்ளவனு மான வீரவாகுவுக்கும, அந்நெருப்பைச்சூழ்ந்த புகை - வீரவாகுவைச்சூழ்ந்த அடர்ந்த கரிய அவனது அங்கமான பூதசேனைக்கும் உவமையெனக் காண்க. சொல் - புகழாதலை, "சொன்மாணபமைந்தகுழு" எனச் சிந்தாமணியிலுங்காண்க. இனி, சொல் படை - வீரவாதமான சொற்களையுடைய சேனையுமாம. தூமம். சிதபரன், புரம் - வடசொற்கள். நகை - நகைத்தல. முதனிலைத்தொழிற்பெயர், நகுதல எனக்கொண்டால், 'ஐ' விகுதிபெற்றதொழிற்பெயராம். நகு - பகுதி. சென்ற சென்றது என்பதன் ஈறு தொகுத்தல். புரத்துச்சென்ற சிற்பரன் நகையழல் தன்னொடு தூமம்போல் என மொழிமாற்றிப் பொருள்கொள்ளுதல், உபமேயத்தோடு பொருந்தும.

திரிபுரமெரித்த கதை—தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து பிரமனிடம் பெருவரம்பெற்று மயனென்பவனால சுவர்க்கம பூமி பாதாளம என்னும் மூன்றிடங்களிலும முறையே பொன் வெள்ளி இரும்பினால் அரண்வகுத்து இயற்றப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய மூன்றுபட்டணங்களைப பெற்றுச் சிவபூசைசெய்துகொண்டு அச்சிவபக்தி மகிமையால் எவர்க்கும அழிக்கவொண்ணாதவராய் அத்தகைய மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம்நினைத்தஇடங்களிற் பறந்து சென்று, பலவிடங்களின்மேலும இருந்து அவ்வவ்விடங்களைப்பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மாயையினால் ஜிநாவதாரமும புத்தாவதாரமுஞ் செய்து பற்பலதீயவழிகளைக் கற்பித்து உபதேசித்து மயக்கி அவ்வசுரர்களைச் சிவத்துவேஷிகளாகச் செய்துவிட்டதன்பின்பு, தேவர்கள் பிரார்த்தனைப்படி சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களையும் நான்குகுதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை விலலாகவும், ஆதிசேஷனை வில் நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகியசிறகுஅமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும். மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசன்னத்தனாய்ச்சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து, அச்சிரிப்பினின்றுஎழுந்த நெருப்பினால் அவ்வசுரர்கள்பலரையும் பட்டணங்களோடு எரித்தருளினன் என்பதாம்.

இதுமுதல் ஐந்து கவிகள் - இப்படலத்தின் ஆறுங்கவி போன்ற கலிவிருத்தங்கள். (உக)

உஉ. அரிநிரைபூண்டதேரலகைபூண்ட
பரிநிரைபூண்டதேர்படைக்குளேகுவ
விரிகடல்வரைப்பினின்மேகராசியுங்
கிரியுறழ்கலங்களுங்கெழுமிச்செலவபோல்.

(இ - ள்.) மேக ராசியும் - மேகக்கூட்டங்களும், கிரி உறழ் கலங்களும - மலையையொத்த [மிகப்பெரிய] மரக்கலங்களும், விரி கடல் வரைப்பினில் - பரந்த கடலினெல்லையிலே, கெழுமி செலவ போல - நெருங்கிச் செல்வன போல,—அரி நிரை பூண்ட தேர-சிங்கங்களின்கூட்டம் பூட்டப்பெற்றுள்ள தேர்களும், அலகை பூண்ட தேர - பேய்கள பூட்டப்பெற்றுள்ள தேர்களும், பரி நிரை பூண்ட தேர - குதிரைகளின்கூட்டம் பூட்டப்பெற்றுள்ள தேர்களும், படைக்குள் ஏகுவ-அசசேனையினிடையிலே செல்வன; (எ-று.)

தற்குறிப்பேற்றவணி. சேனைக்குக் கடலும், தேர்களுக்கு மேகங்களும் மரக்கலங்களும் உவமை யெனக் காண்க. அளவிறந்தபரப்பும், அச்சந்தருதலும், ஆரவாரமும், அணியணியாகவருதலும்பற்றி, சேனை - கடலபோலும். அதனிடையேஊடறுத்துச்செல்லுதலும், விரைந்தகதியும், பெருவடிவமும் பற்றி, தேர்கள் மேகங்களையும் மரக்கலங்களையும போலும். செலவ-'அன்' சாரியைபெறாத பலவின்பாற்பெயர்; ஏகுவ - அஃறிணைமுற்று. அரி - ஹரி என்ற வடசொல்லின் விகாரம்; (யானைமுதலியபெருவிலங்குகளையும்)அழிப்பது என்பது காரணப்பொருள். ஹரித்தல் - அழித்தல். மேகராசி - வடமொழித்தொடர்; மேகராஜி என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டதெனக்கொண்டால், மேகங்களின் இடைவிடாதவரிசை யென்று பொருளாம். கெழுமி, கெழுமு பகுதி. (உஉ)

உங. இடையகலிரதமோடிரதந்தாக்கிய
படையொடுபடைவகைசெறிந்தபல்வகைக்
கொடியொடுகொடிநிரைதுதைந்தகூளிப
ரடுசமாபயின்றிடுமமைதிபோலவே

(இ - ள்.) கூளியா அடு சமா பயின்றிடும அமைதி போல - பூதகணங்கள் (பகையைக்) கொல்லவல்ல போரை மிகுதியாக நெருக்கிச்செய்கின்ற தன்மைபோல,—இடை அகல் இரதமோடு இரதம தாக்கிய-நடுவிடம விசாலமாகவுள்ள தேர்களோடு தேர்கள முட்டின; படையொடு படை வகை செறிந்த - ஆயுதவர்க்கங்களோடு ஆயுதவர்க்கங்கள் நெருங்கின; பல் வகை கொடியொடு கொடி நிரை துதைந்த - பலவகைப்பட்ட துவசவரிசைகளோடு துவசவரிசைகள் அடர்ந்தன; (எ - று.)

உவமையணி. அசசேனையில் தேர்களும ஆயுதங்களும கொடிகளும் மிகுதியாய் அடர்ந்ததற்கு, அங்குள்ள பூதங்களின் நடாச்சியையே உவமை கூறினர். கூளி - பூதம். கூளியர் - பூதர். இனி, கூளியர் - படைவீரருமாம். தாக்கிய, செறிந்த, துதைந்த - 'அன்'சாரியை பெறாத பலவின்பாலமுற்று. படைவகை - எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவன. (உங)

உச சங்கொடுபணைதுடிதடாரிகாகளம
பங்கமிறண்ணுமையாதிபல்லிய
மெங்கணுமியபினவெழுந்துபூழிபோய்ச்
செங்கமலத்தவன்பதத்தைசசெமமிற்றே.

(இ - ள்.) சங்கொடு - சங்கும், பணை - முரசும், துடி - உடுக்கையும், தடாரி - பேரிகையும், காகளம்-எக்காளமென்னும்ஊதுகுழலும், பங்கமஇல் தண்ணுமை-குறைவில்லாத மததளமும்,ஆதி-முதலான, பலஇயம்-பலவகை

வாத்தியங்கள், எங்கணும் - எல்லாவிடங்களிலும், இயம்பின - ஒலித்தன; பூழி - (அசசேனையின் கால்களால் எழுப்பப்பட்ட) புழுதி, எழுந்து போய் - கிளம்பிச்சென்று, செம் கமலத்தவன் பதத்தை செம்நிற்று-செந்தாமரைமலரில் தோன்றியவனான பிரமதேவனது உலகத்தையும் மூடியது; (எ - று.)

பிரமனது சத்தியலோகம்மேலேழுலகங்களுள்ளும்மேலிடத்ததாதலால், அதனை யெடுத்துக்கூறினார்; அதனால், அதன்கீழுள்ள மற்றையுலகங்களில் அடர்ந்துபரவியமை தானே விளங்கும் அருத்தாபத்தி. தொடர்புயர்வுநவிற்சியணி. சங்கு - ஶங்க மென்னும் வடசொல்லின் விகாரம். தண்ணுமை - ஓர்கட்பறையுமாம். பல்லியம் - கொட்டுவன ஊதுவன முதலியன. இயம்பு என்பது - எல்லாவற்றிற்கு முரிய பொதுவினையாம். எங்கண் - எக்கண் என்பதன் மெலித்தல். செய்திற்று, செம்மு - பகுதி, இன் - இறந்தகாலவிடைநிலை, று - ஒன்றன்பால்விகுதி. பங்கம், கமலம், பதம்-வடசொற்கள். செங்கமலம் - திருமாலின் நாபித்தாமரைமலர். பதம்-இடம். ஸ்தானம். 'செங்கமலத்தயன்பதத்தை' என்றும் பாடமுண்டு. (உச)

உரு சாற்றுமிவ் வியல்புறத் தானை வீரருஞ்
சீற்றவெம் பூதருஞ் செல்ல வாகையான்
கோற்றொழி லகற்றிய கோட்டு மாமுகன்
போற்றிய மாயமா புரியைச் சேர்ந்தனன்

(இ - ள்.) சாற்றும் இ இயல்பு உற - கீழ்ச்சொல்லப்பட்ட இத்தன்மைகள்பொருந்த, தானை வீரரும்-சேனைவீரர்களும், சீற்றம் வெம் பூதரும்-கோபத்தையுடைய கொடிய பூதகணங்களும், செலல - உடன்வர,—வாகையான்-வீரவாகு,—கோல் தொழில் அகற்றிய கோடு மா முகன் போற்றிய மாயமா புரியை சேர்ந்தனன் - செங்கோல்நடத்துந்தொழிலை யொழித்தவனும் தந்தங்களையுடைய யானையின் முக முள்ளவனுமாகிய தாரகாசுரன் அரசாளப்பெற்ற பெரிய மாயாபுரியை அடைந்தான்; (எ - று.)

வாகையான்-வீரமுடையவன். அரசனாற்செய்யப்படும் முறைமை செவ்விய [கோணுதலில்லாத]கோல்போலுதலால், அதற்கு, செங்கோலென்றும் கோலென்றும் பெயர் வழங்கும்; உவமையாகுபெயா வடநூலாரும்,தண்டமென்றார். கோல்தொழிலகற்றிய-கொடுங்கோன்மைசெலுத்துகின்ற என்றபடி. இது, கோட்டுமாமுகனுக்கு அடைமொழி. கோட்டு மா - தந்தங்களையுடைய மிருகம்; எனவே, யானையாயிற்று. காசியபமுனிவனும மாயையும் ஆண்யானைபெண்யானைவடிவங்கொண்டுகூடியகாலத்தில் யானைமுகமுடையவனாய்ப் பிறந்த மகன்,இவன்;"பேரு மும்மத மால்களிற்றுருக்கொடு பிடிமேற, சேருகின்றுழி மூன்றெனச் செல்லும் யாமத்தி, வீரிரண்டு வாளெயிற்றுடன் யானைமா முகத்ததுத்,தாரகாசுரன் தோன்றின னவுணர்கள் தழைப்ப" என மேல் அசுரர்தோற்றுபடலத்து வருஞ் செய்யுளை உணர்க 'மாயமாபுரி' என்பதில், மா என்றதை, அசையெனவுங் கொள்ளலாம்; "உலோகமாபாலன்" என்றவிடத்துப்போல. சீற்றம் - சீறு என்ற பகுதியின் தொழிற்பெயர்; அம் - விகுதி, றகரமெய் - விரித்தல்விகாரம்.

"என்னவிது நன்றெண விறைஞ்சி முருகேசன், றன்னைவிடைகொண்டினிய தம்பியர்க ளோடு,மின்னுகதிர்வேல னருள் வீரிரத மேறி, மன்னுபடையோ டவுணன் மாயநக ருற்றான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம்.

வேறு

உசு. சேர்ந்திடு மெல்லை பூதர் சேனைபோய் நகரம் புக்கு
நேர்ந்திடு மவுண ரோடு நின்றமர் விளைத்து நின்று

சேர்ந்தன ரதனைத் தூத ரோடித்தங் கோயில் புக்குச்
சார்ந்திடு திருவின் வைகுந் தாரகற் றொழுது சொல்வார்.

(இ - ள்.) சேர்ந்திடும் எல்லை - (இவ்வாறு) சேர்ந்தவளவிலே, பூதர் சேனை - பூதகணத்தார், போய் நகரம் புக்கு - முன்னேசென்று அம்மாயாபுரியினுட் பிரவேசித்து, நேர்ந்திடு அவுணரோடு நின்று அமர் விளைத்து நின்றார் - (அவ்விடத்தில்) நேர்பட்ட அசுரர்களுடனே வலியஎதிர்த்துநின்று போரை மிகுதியாகச்செய்துநின்றார்கள்; அதனை - நிகழ்ந்தஅச்செய்கையையெல்லாம், தூதர்-(அங்குள்ள தாரகனது) தூதுவர், ஓர்ந்தனர் - அறிந்து, ஓடி - விரைந்துசென்று, தம் கோயில் புக்கு - தங்களுடைய அரண்மனையினுட் பிரவேசித்து, சார்ந்திடு திருவின் வைகும் தாரகன் தொழுது - தன்னைச்சேர்ந்த செல்வச்சிறப்புடனே (அங்கு) அரசுவீற்றிருக்கின்ற தாரகாசுரனை நமஸ்கரித்து, சொல்வார் - (நடந்தசெய்தியைக்) கூறுபவரானார்கள்; (எ - று.)—அதனை, அடுத்தஇரண்டுகவிகளிற் காண்க.

'பூதர்சேனை' என்பதை, சேனைப்பூதர் எனமாற்றி, சேனையாகத்திரண்டுள்ள பூதர்களென்று பொருள்கூறி, அதனை'நின்றார்'என்ற முற்றுக்கு எழுவாயாகக் கொள்க. கோயில் - அரசனது இடம்; அல்லது, சிறப்பான இடம். இப்பொருள்களில், முறையே, வேற்றுமையும் அல்வழியுமாம். கோ + இல் = கோவில் என வகரவுடம்படுமெய்பெற்று வரற்பாலது யகரம்பெற்றுவந்தது, இலக்கணப்போலியாம். சார்ந்திடு திருவின் வைகும் - அருமையாக ஒருங்கு கூடிய சகலவிதமான செல்வவிபவத்திலே வீற்றிருக்கின்ற என்க. நின்றமர்-நின்ற அமர் என்பதன் தொகுத்தலாக் கொண்டு, நிலைபெற்ற போரென்றலும் ஒன்று. ஸேநா. தூதர் - வடசொற்கள். தாரகற்றொழுது - உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது; "உயர்திணையிடத்து விரிந்துந் தொக்கும்." தொக்கவிடத்து, உயர்திணைப்பெயரீற்று னகரமெய் றகரமாகத்திரிந்தது; "இயல்பின் விகாரம்."

இதுமுதல் மூன்றுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௨௬)

௨௭ எந்தைமற்றிதுகேணும்முன்னிமையவர்தொகையையிட்ட
வெந்துயர்ச்சிறையைநீக்கவிரிசடைக்கடவுண்மைந்தன்
கந்தனென்றொருவன்வந்தானவுணரைக்கடக்குமென்னு
வந்தரநெறிசெல்விண்ணோரறைந்திடக்கேட்டுமன்றே.

இதுவும், வருங்கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) எந்தை - எமதுதலைவனே! இது கேள் - (யாம்சொல்லும்) இதனைக்கேட்பாயாக:—நும் முன் - உமதுதமையனான சூரபதுமன், இமையவர் தொகையை இட்ட - தேவர்களது கூட்டத்திற்குச் செய்த, வெம் துயர் சிறையை - கொடிய துன்பத்துக்குஇடமான சிறைக்காவலை, நீக்க - ஒழித்தற்பொருட்டு, விரி சடை கடவுள் மைந்தன் - விரிந்தசடைமுடியையுடைய சிவபிரானது குமாரனாகிய, கந்தன் என்ற ஒருவன் - சுப்பிரமணியனென்ற ஒருத்தன், வந்தான் - தோன்றியுள்ளான். அவுணரை கடக்கும் - (அவன்) அசுரர்களை வென்றிடுவான், என்னு - என்று, அந்தரம் நெறி செல் விண்ணோர் அறைந்திட - ஆகாயமார்க்கத்திற் செல்லுகின்ற தேவர்கள் கூற, கேட்டும் - கேள்விப்பட்டோம்; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை. மற்று - அசை.

தலைவனைத் தந்தையென்றல், மரபுவழுவமைதி. ஐவகுரவரில் தந்தை போலவே அரசனும் ஒருவனாத லுணர்க; அவராவார் - "அரச னுவாத்தியான் தாய் தந்தை தம்முன்." அன்றியும், அன்னந்தந்தோறும் ஆபத்துக்

குதவினேனும் தந்தையரைவழிச் சேர்வர்; மற்றையோர் - பிறப்பித்தோன், கற்பித்தோன், மணமுடிப்பித்தோன். 'நும்' என்ற முன்னிலைப் பன்மை, சிவகுமரனையும் உளப்படுத்தும். 'முன்' என்பது - முன்னேபிறந்தவனைக் குறித்தலால், காலவாகுபெயர். இமையவர்தொகையை யிட்ட வெந்துயரச் சிறையை - தேவர்கள்தொகுதியைக் கொடியதுன்பத்திற்கிடமான சிறையி லிட்டதனை யென்க, அன்றி, தேவர்கள்தொகுதியை யடைவித்த கொடிய துன்பமாகிய சிறையையென உருவகமாகவுங்கொள்ளலாம். என்றொருவன் - ஈறுதொகுத்தல். அந்தரம் - வடசொல். கேட்டும் - தன்மைப்பன்மைமுற்று; இதில், 'டும்' விகுதி இறந்தகாலங்காட்டும் [நன்-பத-௩௨] கேட்டுமன்றே - கேள்விப்பட்டுள்ளோமன்றோ என அன்றேயென்பதைத் தேற்றமாகவுங் கொள்ளலாம். இனி, அன்றே - அந்நாளிலே யென்றுமாம்; சிலநாள்களுக்கு முன்னே யென்றபடி. சிவபிரானது சடைமுடி, கபர்த்தமெனப் பெயர்பெ றும் கடவுள் - (மனமொழிமெய்களைக்) கடந்துள்ளவன்; கட - பகுதி, உள - பெயர்விகுதி. விக்குள், பாய்த்துள். விளையுள் என்பவற்றிற்போல உள்-தொ ழிற்பெயர்விகுதி யென்றால், தொழிலாகுபெயரெனவேண்டும். ஒருவன் கட க்கும் - செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தது; [நன்-வினை-௨௩.] (௨௭)

௨௮. என்னிவர்மாற்றமென்னுயாங்கதெரிகுற்றேமாக
வன்னவரியம்பியாங்கேயாயிரத்திரட்டியென்னப்
பன்னூறுபூதவெள்ளமபடர்ந்திடக்குமரன்போந்தான்
முன்னுறுதூசிநந்தமுதுநகரலைத்ததென்றார்

(இ - ள்.) இவர் மாற்றம் - இந்தத்தேவர்களுடையவார்த்தை, என்-எத தன்மையதோ? என்னு-என்று, யாம்-நாங்கள், தெரிகுற்றேம் ஆக-ஆராய்ந் துகொண்டிருக்குமளவில, அன்னவர் இயம்பிய ஆங்கே-அத்தேவர்கள்சொ ன்னபடியே, ஆயிரத்து இரட்டி என்ன பன்னூறு பூத வெள்ளம படர்ந்திட- இரண்டாயிரமென்று சொல்லப்படுகின்றபூதங்களது வெள்ளங்கள் பரவிவர, குமரன் - ஓர் இளமகன், போந்தான் - வந்துசேர்ந்தான்; முன் உறு தூசி - முந்திவந்த (அவனது) சேனை, நம்தம் முது நகர் அலைத்தது - நமமுடைய பழமையான நகரத்தை அழிக்கத்தொடங்கிற்று, என்றார்-என்று (தூதர்கள் தாரகனுக்குச)செய்தி சொன்னார்கள்; (எ - று.)

'தெரிகுற்றேம்' என்ற இறந்தகாலமுற்றில், கு - சாரியை, உறு-துணை வினை. இயம்பியாங்கு - இயம்பியவாங்கு என்பதன் தொகுத்தல். தூசி-முந் துறுப்பொருபடை. இங்கே, 'முன்னுறு' என்ற அடைமொழி வந்ததனால், 'தூசி' என்றது, சேனையென்ற மாத்திரமாய் நின்றது. 'முதுநகர்' என்றத னால், வெகுகாலமாகவுள்ளஇந்நகரத்தில் இப்படிப்பட்டஅழிவு என்றும்நே ர்ந்ததில்லை யென்பது தோன்றும். (சீவகசிந்தாமணியில் "சுறவணிசூழ்கிட ங்காரெயின் மூதூர், நிறையணிகேட்கவுய்த்திட்டனர்பூசல்" என்றவிடத்து, நச்சினார்க்கினியர் 'மூதூரெனவே, இதுகேட்டறியா தென்பது கருத்து' என உரைத்தமை உணர்க) முன் ஒருகாலத்திலும் பகைவராலழிக்கப்படா திருந்த நகர மென்க; முது நகர்-பண்புத்தொகை. நந்தம்—தம் - சாரியை. இரட்டி - இரண்டாதலையுடையது; 'இரண்டு' என்ற பகுதியின் மென்றொ டர் வன்றொட ராயிற்று: இ - பெயர்விகுதி. (௨௮)

௨௯. என்றலும்வடவைத்தீயிலிழுதெனுமளக்கர்வீழத்
துன்றியவெழுச்சிமானததண்ணெனச்செற்றநதூண்ட
மின்றிகழரிமானேற்றுவியன்றவிசிருக்கைநீங்கிக்
குன்றுறழ்மகுடமண்டகோளகைதொடவெழுந்தான்.

(இ - ள்.) என்றலும் - என்று (தூதர்கள்) கூறியவளவிலே,—வடவைத்தீயில் - படபாமுகாக்கினியில், இழுது எனும் அளக்கர் - நெய்வடிவமாகவுள்ளகடல், வீழ - விழுமளவில், துன்றிய எழுச்சி-(அவ்வக்கினி)பொருந்திய மேற்கிளர்ச்சியை, மான - ஒக்கும்படி, செற்றம் - கோபம், துண்ணென தூண்ட-விரைவாக உண்டாகி எழும்ப,—மின் திகழ் அரிமான் ஏறு வியல் தவிசு இருக்கை நீங்கி-ஒளி விளங்குகின்ற ஆண்சிங்கம் தாங்குவதுபோலச் சித்திரிக்கப்பட்டுள்ள பெரிய ஆசனத்தில் வீற்றிருத்தலை விட்டு, குன்று உறழ் மகுடம் அண்டகோளகை தொட எழுந்தான்-மலையையொத்த[கப்பெரிதாய்த் துலங்கியுள்ள] (தனது) கிரீடம் அண்டகோளத்தின் மேல்முகட்டைத் தொடுமாறு எழுந்தான், (தாரகாசுரன்); (எ - று.)

இயல்பாகவே மிகப்பெரிதாகப்பற்றியெரியுந்தன்மையுள்ள படபாமுகாக்கினியில் மிகநெய்வெள்ளம் சொரிந்தால் அந்தஅக்கினி எவ்வளவு உக்கிரமாக ஜ்வலித்து எழுமோ, அவ்வளவு உக்கிரமாகப்பொங்கியெழுந்தது, தாரகனுக்கு இயற்கையாகவேயுள்ள கோபாக்கினி, இவ்வார்த்தையைக் கேட்டமாத்திரத்தி லென்க. வடவை - படபா என்னும் வடமொழியின் விகாரம்; இதற்கு - பெண் குதிரை யென்று பொருள்: கடலிடையேஒருபெண்குதிரையின்முகத்தில் தெய்வத்தன்மையுள்ள ஒருபெருந்தீ எப்பொழுதும் பொருந்தியுள்ள தென்றும், அது அக்கடல்நீரை மழைவெள்ளமமுதலியவற்றால் மிகவொட்டாதபடி அப்பொழுதப்பொழுது உறிஞ்சிநிற்பதென்றும, இத்தீ பிரளயகாலத்திற கடலினின்று பொங்கிவெளியெழுந்து உலகங்களை அழித்திடுமென்றும நூற்கொள்கை. மான, உறழ் - உவமவுருபுகள். அரிமானேற்றுத்தவிசு - சிங்காசனம். துண்ணென - விரைவுக்குறிப்பு. அரிமான் - சிங்கமாகிய விலங்கு என இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மான், ன் - சாரியை. ஏறு - ஆண்மைப்பெயா. வியல் - அகலமுணர்த்தும் உரிச்சொல். எழுச்சி, இருக்கை - தொழிற்பெயாகள்; முறையே சி, கை - விகுதி. மகுடம் - வடசொல். அண்டகோளகை - அண்டகோளகமென்ற வடசொல் ஈறுதிரிந்தது; உலகவுருண்டை யென்பது பொருள் செற்றம் - செறு என்ற பகுதியின் தொழிற்பெயர். 'மகுடமண்டகோளகைதொட வெழுந்தான்' என்றதனால், அவனது வடிவத்தின் உயாச்சிமிகுதி தோன்றும்; உயர்வுநவிற்சியணி. இனி, கோபத்தால் அவ்வளவுயரமாயெழும்பினு னென்று உரைப்பாருமுளர். (உக)

௩0. எழுந்துதன் மருங்கு நின்ற வொற்றரை நோக்கி யிந்தச்
செழுந்திரு நகர்மேல் வந்த சேனையை முளிபுற் கானிற்
கொழுந்தழல் புகுந்த தென்னக் கொல்வனந் தானை முற்று
முழுந்துருள் கின்ற முன்ன ரொல்லைதந் திடுதி ரென்றான்.

(இ - ள்.) எழுந்து -(அவ்வாறு சிங்காதனம்விட்டு) எழுந்து,—தன் மருங்கு நின்ற ஒற்றரை நோக்கி - தனதுபக்கத்திலே நின்றுள்ள ஒற்றர்களைப் பார்த்து, 'இந்த செழுந் திரு நகர்மேல் வந்த சேனையை - வளப்பம்மிக்க சிறந்த இந்த நகரத்தினமேற் போர்க்குவந்த சேனையை, முளி புல் கானில் கொழுந் தழல் புகுந்தது என்ன உலர்ந்த புற்களின் தொகுதியில் மிகக நெருப்புப் பற்றினாற்போல, கொல்வன் - எளிதில் அழித்திடுவேன்; நம் தானை முற்றும் - நமது சேனை முழுவதையும், உழுந்து உருள்கின்ற முன்னர் ஒல்லை தந்திடுதிர் - ஓர் உளுந்து ஒருமுறை உருளுங் காலவெல்லைக்கு முன்னமே மிகவிரைவாக அழைத்துக்கொண்டுவாருங்கள்,' என்றான் - என்று கட்டளையிட்டான்; (எ - று.)

'தாமரைக்காடு' என்றதில் 'காடு' என்பதற்குப்போல, 'முளிபுற்கானில்' என்பதில் 'கான்' என்பதற்கு - தொகுதி யென்று உரைக்கப்பட்

டது; இனி, உலர்ந்த புற்களையுடைய காட்டிற் பெருந்தீ பிரவேசித்தாற் போல என்றும் பொருள் கொள்ளலாம். 'புற்கான்' என்பதற்கு - அற்பமாகிய காடு என்றல் சிறப்பன்று. 'இந்த' என்பது - இகரச்சுட்டின் மரூஉ; பெயரெச்சமன்று: ஆனதுபற்றியே, அதன்முன் வருமொழிமுதல்வலி மிகுகின்றது. முளி புல் - வினைத்தொகை. கொல்வன் - தன்மையொருமை 'உழுந்துருள்கின்றமுன்னா' என்றது, விரைவைக்காட்டும். ஒல்லை - விரைவு குறிக்கும் இடைச்சொல். கான் - கானந மென்ற வடசொல்லின் விகாரம்.

வேறு.

௩௧ அன்னபணி முறைபுரிவா னொற்றுவர்கள் போயிடலு மவுணனின்ற, கொன்னுறுவேற் பரிசனரைக் கொடுவருதிரிரதமெனக் கூறலோடு, முன்னமொரு நொடிவரையிற் றந்திடலு மதனிடையே மொய்ம்பிற் புக்குப், பின்னாவரு மமைச்சர்கடந் தொகைபரவ மதர்ப்பினொடு பெயர்த லுற்றான்

(இ - ள்.) அன்ன பணி - அந்த ஏவியதொழிலை, முறை புரிவான் - சரியாய்ச் செய்வதற்காக, ஒற்றுவர்கள் போயிடலும் - ஒற்றர்கள் சென்றவளவிலே,— அவுணன் - தாரகாசுரன், நின்ற - (அங்கு) நின்ற, கொன் உறு வேல் பரிசனரை - அச்சந்தருந்தன்மை மிக்க வேலாயுதத்தையுடைய (தனது) ஏவலாளரைநோக்கி, இரதம் கொடுவருதிர் என கூறலோடும் - 'தேர்கொண்டுவாருங்கள்' என்றுகூறியவளவிலே,— அவர்கள், ஒருநொடி வரையின் முன்னம் தந்திடலும் - ஒருநொடிப்பொழுதிற்குமுன்னமே [மிகவிரைவிலே] தேர்கொணர்ந்தவுடனே,—(தாரகன்). அதனிடையே மொய்ம்பின் புக்கு - அத்தேரினிடையே வலிமையுடன் ஏறி, பின்னா வரும் அமைச்சர்கள்தம் தொகை பரவ - பின்னேவருகின்றமந்திரிமார்களின்கூட்டம் துதிக்க, மதர்ப்பினொடு - செருக்குடனே, பெயர்தல் உற்றான் - (போர்க்குச்) செல்லலாயினான்; (எ - று)

'கொன்' எனனும் இடைச்சொல் அச்சமென்னும்பொருள்தருவதாதலை, "அச்சம் பயமிலி காலம் பெருமையென், றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே" என்ற தொல்காப்பியத்தால் அறிக. பரிஜநா - வடசொல், சூழ்ந்திருக்குஞ் சனங்கள். புரிவான் - எதிர்காலவினையெச்சம், 'வான்' விகுதியே காலங்காட்டும். கொடு - கொண்டு என்றதன் தொகுத்தல். வருதிர் என்ற ஏவற்பன்மைமுற்றில், த - எழுத்துப்பேறு. நொடி வரை - இயல்பாக ஒருமுறை கைநொடித்தற்குக் கொள்ளும் பொழுது. அமைச்சர் - அமாத்யர் என்ற வடசொல்லின் சிதைவு, அருகிலுள்ளவரென்று பொருள்படும் 'உழையர்', 'உழையிருந்தார்' என்று மந்திரிகளுக்குத் தமிழிற் பெயர்கள் வழங்குதல் காண்க. பின்னர் - காலம்.

இதுமுதல் எட்டுக் கவிகள் - பெரும்பாலும் முதல்நான்குசீரும் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௩௯

௩௨. வீடுவான்போலுமினித்தாரகனென்றவன்சீர்த்திவிரைவில்வந்து, கூடியேபுரள்வதுவுமரற்றுவதுங்காப்பதுமாங்கொள்கைத்தென்ன, நீடுசாமரததொகுதிபலவிரட்டவெள்ளொலியனிமிர்ந்து வீசப், பீடுசோதவளமதிக்குடைநிழற்றவலம்புரிகள்பெரிதுமார்ப்ப,

இதுமுதல் ஆறுகவிகள் குளகம்; இவை - தாரகாசுரன் சேனையுடனே போர்க்கெழுந்த தன்மையை விவரிப்பன.

(இ - ள்.) 'இனி தாரகன் வீடுவான் போலும் - இனித் தாரகாசுரன் அழிந்திடுவான்போலும்,' என்று - என்றெண்ணி, அவன் சீர்த்தி - அவனது

பெரும்புகழ், விரைவில் வந்து - வேகமாய் ஓடிவந்து, கூடி - ஒருங்குசேர்ந்து, புரள்வதும் - (அவன்பக்கங்களிலே) புரளுவதும், அரற்றுவதும் - கதறியழுவதும், காப்பதும் - (அவனைப்) பாதுகாப்பதும், ஆம் - ஆகிய, கொள்கைத்து என்ன - தன்மைகளையுடையதாளுற்போல,— நீடு சாமரம் தொகுதி பல இரட்ட - நீண்ட சாமரைக்கூட்டங்கள்பல வீசவும்,— வெள் ஒலியல நிமிர்ந்து வீச - வெள்ளைவஸ்திரத்தாலாகிய ஒருவகையலங்காரத்துக்குக்கள் உயர்ந்துநின்று அசையவும்,— நீடு சோ தவளம் மதி குடை நிழற்ற - பெருமைபொருந்திய வெண்ணிறமான சந்திரமண்டலம்போன்ற ஒற்றை வெண்கொற்றக்குடை நிழலைச்செய்யவும்,— வலம்புரிகள் பெரிதும் ஆர்ப்ப - வலம்புரிச்சங்குகள் மிகவும் ஒலிக்கவும்,—(எ - று.)

இரட்ட, வீச, நிழற்ற, ஆர்ப்ப என்ற வினையெச்சங்கள், ௫௭ - ஆம் பாட்டில் வரும் 'எகியது' என்ற தொழிற்பெயரைக் கொண்டு முடியும்; அடுத்த நான்கு கவிகளிலுள்ள செயவெனெச்சங்களும் இப்படியே.

வெண்சாமரங்களும் வெள்ளாடைத்துகிற்குக்களும் பக்கங்களில் அசைதலை அவன்கீர்த்தி புரள்வதாகவும், வெண்சங்குகள் ஒலிப்பதை அவன்கீர்த்தி அரற்றுவதாகவும், வெண்குடை அவனுக்கு நிழல்செய்வதை அது அவனைப்பாதுகாக்கத்தொடங்கியதாகவும் கற்பித்து வருணித்தார்; தற்குறிப்பேற்றவணி. கீர்த்தியை வெண்ணிறத்ததாகக்கூறுதல், கவிமரபு.

வீடுதல் - உயிர்விடுதல். "சீர்த்தி மிகுபுகழ்" என்ற தொல்காப்பியச் சூத்திரம், இங்கு அறியத்தக்கது; இதனால், 'சீர்த்தி யென்பது - மிக்கபுகழைக் குறிப்பதோர் உரிச்சொல்லா மென்றும் புகழ்மாத்திரத்தைக்குறிக்கும் கீர்த்தியென்னும் வடசொல்லின் திரிபன் றென்றும் விளங்கும். 'காப்பது' என்றவிடத்து 'காப்பது' என்று பாடமோதின், மறைப்பது என்று பொருள்படும். புரள்வது, அரற்றுவது, காப்பது - தெரிநிலைவினையாலணையும்பெயர்கள். கொள்கைத்து - குறிப்புவினையாலணையும்பெயர். என்ன - உவமவுருபு. தவளம் - வடசொல். மதி - (பலராலும்) நன்குமதிக்கப்படுவது எனச் சந்திரனுக்குக் காரணக்குறி. பெரிது - ஒன்றன்பாற் குறிப்புமுற்றெச்ச வினையுரி. சாமரம் - வடமொழித் தத்திதாந்தநாமம்; சமர மென்னும் மானின் மயிரினால் செய்யப்பட்டதோர் இராசசின்னம். ஒலியலென்ற ஆடையின் பெயர் - இங்கு, அதனால் அமைந்ததோர் இராசசின்னத்துக்குக் கருவியாகுபெயர்; இனி, வெள்ஒலியல என்பதற்கு - வெள்ளைக்கொடிச்சீலைகள் என்பாரும் உளர். வலம்புரி - வலப்புறமாக [பிரதக்ஷிணமாக] சுட்சுழிந்திருப்பது; இது, இடம்புரிச்சங்கினும் ஆயிரமடங்கு சிறந்ததென்பதை "இப்பியாயிரஞ்சூழ்ந்த இடம்புரியென்றுகூறு, மொப்பில்சங்காயிரஞ்சூழும் வலம்புரியென்றோது, மப்படியதுவுஞ் சூழ்ந்தசலஞ்சலமாகு மற்றைத் தப்பிலாச்சலஞ்சலங்கள் சார்ந்தது பாஞ்சசந்யம்" என்ற நிகண்டு கொண்டு அறிக. போலும் - ஒப்பில்போலி. (௫௨)

௫௩. சுமத்தேநடம்புரியுங்கண்ணுதலோனெடாதசிலையென்ன மாலோன்,மாமத்தேயெனக்கிடந்தமுழுவயிரத்தண்டமொன்றுவயிரக்கண்டைத், தாமத்தேர்பெறுகின்றமடங்கல்பலவீர்த்துவருஞ்சகடத்திண்கார், சேமத்தேர்மிசைபபோதவேனையபல்படைக்கலமுஞ் செறிந்துநண்ண.

(இ - ள்.) சுமத்தே நடம் புரியும் - மயானத்திலே திருநடனஞ்செய்கின்ற, கண் நுதலோன் - நெருப்புக்கண்ணை நெற்றியிலுடையவனான பரமசிவன், எடாத - எடுத்துவளையாத, சிலை என்ன - வில்லாகிய மேருமலை போலவும், மாலோன் பா மத்தே என - திருமாலால் (திருப்பாற்

கடல்கடைந்தகாலத்துக் கொள்ளப்பட்ட பெரிய மத்தாகிய மந்தரமலை போலவும், கிடந்த - பொருந்தியுள்ள, மூழு வயிரம் தண்டம் ஒன்று பூர்ண வலிமையையுடையதொரு தண்டாயுதம்,—வயிரம் கண்டை தாமத்து - வச்சிர ரத்தினம் பதித்த மணிகளின் வரிசைகளையுடையதும், ஏர் பெறுகின்ற மடங்கல் பல ஈர்த்து வரும் - எழுச்சியைப்பெற்ற பல ஆண்சிங்கங்கள் இழுத்துவரப்பெற்றதும், சகடம் - சக்கரங்களையும், திண் கால் - வலிய காலகளையுமுடையதுமாகிய சேமம் சேர் - கை பாதுகாப்பமைந்ததொரு தேரின்மேல், போத - (ஏற்றப்பட்டுச்) செல்லவும்—ஏனைய பல படைக்கலமும் - மற்றைய பலஆயுதங்களும், செறிந்து நண்ண - (வெவ்வேறுதேர்களில்) நெருங்கிவரவும்.—(எ - று.)—போத, நண்ண, (௧௭) என்பது என இயையும்

இவனது ஆயுதங்களுட் சிறந்ததான பெரிய தண்டாயுதம் ஒருதேரில் வைக்கப்பட்டு உடன்வரவும், மற்றும் பலவகையாயுதங்களும் அவ்வாறே தொகுதியாய் உடன்வரவும் என்பது இதன் கருத்து. வலிமைபருமைகளில் அத்தண்டாயுதத்திற்கு மேருகிரியையும் மந்தரகிரியையும் உவமைகூறினார். மேருவை 'கண்ணுதலோன் எடாத சிலை' என்றது. சிவபிரான் மேருமலை வில்லின் உதவியைக்கொண்டேயன்றித் தனது ஆற்றலினாலேயே திரிபுரமெரித்திட்டனனாதலால் திரிபுரத்துஅசுரர்து தன்பங்களைப் பொறுக்க மாட்டாமல் தேவர்கள் சென்று சிவபிரானைச் சரணமடைகையில், அப்பெருமான் ஒருதிருவிளையாட்டாகத் தேவர்களை நோக்கி 'அவர்களோடு பெரும்போர் நடத்துதற்கு ஏற்ற கருவியொன்றும் எமக்கு இல்லை யாதலால், நீங்கள் தக்ககருவி அமைத்திடுங்கள்' என்றுசொல்ல, அக்கட்டளைப்படியே தேவர்கள் தேரும் வில்லும் நாணும் அம்பும் முதலிய கருவிகளாக அமைந்திட, சிவபெருமான் அவற்றையெல்லாம் உடன்கொண்டு சென்று போர் புரியப்புகுந்தனிகையில் தேவர்கள் தமதமது வலிமையை நினைத்துத் தமது துணைமையினாலேயே இப்பொழுது சிவபிரானுக்கு வெற்றிநிகழ்வதென்று அகங்கரிக்க, அதனையுணர்ந்த சினந்து அச்செருக்கையடக்கத் திருவுளங்கொண்ட ஸர்வசங்கரனான சங்கரபகவான் அவ்வாகருவிகளைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாமலே தான் ஒரு புன்சிரிப்புச் செய்தது அச்சிரிப்பின் அனலைக்கொண்டே அசுரனையும் பட்டணங்களோடு எரித்தழிக்கத்தொடங்கி விட அப்பொழுது காய்ப்பகைப்பட்ட தேவர்கள் உடனே வணங்கித் தம்மைக் கருவியாகக்கொண்டு பெருமைப்படுத்தவேண்டுமென்று பிரார்த்திக்க,பின்பு அக்கருவிகளையும் அருளால் உபயோகித்தனனென்ன வரலாறுகாண்க. இனி, சிவபிரான் கையில்வில்லாகவளைந்து எடுக்கப்பெற்றதொரு மேருமலையுள தாகுல் அதுபோல என்று மிக்கபெருமையைக்குறித்தற்குக்கூறிய இல்பொருளுவமையாகவுங் கொள்ளலாம். சிவபிரானெடுத்தபோது வளைந்த மேருமலை ஒருகாலும்வளையாதஇத்தண்டிற்கு உவமையாகாதென்பதுபற்றி,'கண்ணுதலோனெடாதசிலையென்ன'என உவமைகூறினரென்க. பருமை, அழித்தற்கரியவலிமை. தனக்குஇலக்காகும்பகைவரெவருமில்லாமையால்நெடுங்காலமாய் வைக்கப்பட்டஇடத்திலேயேகிடத்தல்என்பவற்றால்,தண்டாயுதம் மேருவையும்மந்தரத்தையும்போலும். அவ்வாறுனமிகுவலிமையுடையபெருந் தண்டையேற்றுதற்குஏற்ற வலிமையையுடையதே ரென்றற்கு,'சகடத்திண் காற் சேமத்தேர்' எனப்பட்டது அத்தேரில் அத்தண்டையேற்றினால் அதனையிழுத்தற்குவல்லவை வலிய பெரிய பல ஆண்சிங்கங்களே யாதலால், 'ஏர்பெறுகின்றமடங்கல்பலவீர்த்துவரும்' என்று விசேடித்தார். அத்தண்டமொன்றே அத்தேர்க்குப் பெரும்பாரமானதனால் மற்றையாயுதங்களை வேறுதேர்களிலேற்றின ரென்பது தோன்ற, 'ஏனைய பல் படைக்கலமுஞ் செறிந்துநண்ண' என்றனர்.

பாதுகாப்பாகச் சூழ்ந்துள்ள, மால் வரை என்ன - பெரிய குலபர்வதங்கள் போல, படைத் தலைவர் - சேனைத்தலைவர்கள், பல் தேரில் - பல தேர்களில், துவன்றி சூழ - நெருக்கிச்சூழ்ந்துவரவும், (எ - று.)—செல்ல, ஈண்ட, சூழ, (ஈஎ) எதியது என இயையும்.

பெருந்தேரமீதிலேறிவருகின்றதாரகனுக்கு-மேருமலையும், அவனைச்சுற்றிலும் தேர்களிலேறிநின்றுள்ள சேனைத்தலைவர்க்கு-மேருவைச்சுற்றிலுமுள்ள குலமலைகளும உவமை யெனக் காண்க. "ஆடல் வெம்பரி தோ யானை யனிகினித் தலைவா செம்பொற், கோடுயர் குன்றஞ் சூழ்ந்த குலகிரி யேழு மொத்தார்" என்ற வில்லிபுத்தூராரபாரதத்தொடு இதனை ஒப்பிடுக. குலபருவதங்கள் - கைலாசம, மந்தரம், இமயம், விந்தியம, நிஷதம், ஏம கூடம், நீலம் என ஏழு; கந்தமாதனங்கூட்டி எட்டெனவும்படும்.

ஏற்று, எல் பகுதி. ஏற்று - அக்கட்டளையை யேற்றுக்கொண்டு என்றலுமாம். கொற்றம் - (பகைவரைக்) கொன்றுஅடைவது என வெற்றிக்குக் காரணக்குறி; கொல் - பகுதி, அம் - விகுதி, து - சாரியை, மற்றவை - சந்தி. கரம் - கை: இங்கே துதிக்கை, அதனையுடையது கரீ என வடமொழிக் காரணக்குறி; அது, ஈயீறுஇகரமாய் 'கரி' என நின்றது. கருநிறத்தையுடையது கரி யெனத் தமிழ்வகையாற் காரணப்பொருள்கூறலாகாது; வடசொல்திரிபாதலால். கடல்-தொகுதிக்கு, உவமையாகுபெயர்; படைத்தொகைகளுட் சமுத்திரமென்றஒன்றுஇருத்தலால், அதனையேமொழிபெயர்த்து 'கடல' என்றன வென்னலாம். அது - வெள்ளத்தின எட்டிலொருபங்கு. யானைசசேனை சிறத்தலால் அதனை முன்னும். குதிரை தான் ஓர்அங்கமாதல்மாத்திரமேயன்றி மற்றோரங்கமானதேரை நடத்துதலுமாகிய சிறப்பையுடைமையால் அதனைத் தேரின்முன்னுமாக நிறுத்தினு ரென்க. கரி பரி தேர் - யானைகளும் குதிரைகளும் தேர்களும, இனத்தினெடு - தமக்குஇனமான காலாட்சேனையுடனே, வந்து ஈண்ட எனறுஉரைப்பினுமாம். குழவித் திங்கள் - பால சந்திரன். குழவி - இளமை யுடையது; குழ - இளமை உரிச்சொல்; பகுதி. இ - பெயர்விகுதி. பல + தேர = பஃறேர்: பலவென்பது பிறிதுவர அகரம்கெட தனிக்குறிலையடுத்துநின்றலகரம் தகரம்வரஆய்தமாயிற்று; வருமொழிமுதல் தகரம லகரத்தின்முன் றகரமாயிற்று. [நன - உயிர் - உ௦, மெய் - உ௩. ஈச.] இங்குள்ள ஆய்தம், குறுக்கமாம; [நன் - எழுத்து - சஉ.] அதன் மாத்திரை. கால்; [நன்-எழுத்து - சச.]

'குழவித்திங்கட்கற்றைவார்சடைக்கடவுள்'என்பதிற்பொருந்திய புராணகதை:—சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவினிமுதலியஇருபத்தேழுநக்ஷத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டுஅவர்களுள் உரோகிணியென்பவளிடத்து மிகவுங்காதல்கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங் கூடிவாழ்ந்திருக்க, மற்றைமகளிரது வருத்தத்தை நோக்கி முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்துகலைகளுங்குறைந்து மற்றைக்கலையொன்றையும் இழப்பதற்குமுன்னம் சிவபிரானைச சரணமடைய, அப்பெருமான் அருள்புரிந்து அவ்வொற்றைக்கலையைத் தன்தலையிலணிந்து மீண்டு கலைகள்வளர்ந்துவரும்படி அநுக்கிரகித்தனன் என்பதாம். இவ்வரலாற்றால், சிவபிரான் தன்னையடைந்தார்க்குக்குறைதீர்த்தருளுந்தன்மைய னென்பது விளங்கும்.

மேருமலையைக் கீழ்க்கவியில் 'கண்ணுதலோனெடாத சிலை' என்றதனுடு இக்கவியில் 'சடைக்கடவுள் வாங்கிய பொன்மால்வரை' என்றது. மாறுகொளக்கூறலாகாமையை, கீழ்க்கவியினுரையிற் காட்டிய வரலாற்று விவரத்தா லுணர்க. வருங்கவியில், திருமாலைச் சிவபிரான் அம்பாகக்கொண்டதாக் கூறுவதற்கும் இங்ஙனமே காண்க. (ஈச)

௩௫. மொய்யமர்செய்கோலமொடு முப்புரமேனடந்தருளு முக்கண்மூர்த்தி, பையரவின்றலைத்துஞ்சுங்கணை தூண்டமூண்டதழல்பதகராேனார், மெய்யுடலமுழுது நுங்கித்தலைக்கொள்ளப்பெருந் தூமமிசைக்கொண்டென்னச், செய்யமுடியவுணர்பெருங்கடலினிடையெழும்பூழிசேட்சென்றோங்க

(இ - ள்) மொய் அமர் செய் கோலமொடு - வலியபோரைச் செய்தற்கு உரிய கோலத்துடனே, முப்புரம்மேல் நடந்தருளும் - திரிபுரத்தின்மேல் எதிர்த்துச்சென்றருளிய. முக்கண் மூர்த்தி - மூன்றுதிருக்கண்களையுடைய சிவபிரான், பை அரவின் தலை துஞ்சும் கணை தூண்ட - படங்களையுடைய ஆதிசேஷனிடத்தே துயில்கொள்ளுகின்ற திருமாலாகிய அம்பைப் பிரயோகித்தவளவிலே, மூண்ட தழல் - (அதனினின்று) வெளியெழுந்த அக்கினி, பதகர் ஆனோர் மெய் உடலம் முழுதும் நுங்கி தலைக்கொள்ள - பாவிகளாகிய அவ்வசுரர்களது நிலையில்லாத உடம்பு முழுவதையும் உட்கொண்டு வளர, பெருந் தூமம் மிசை கொண்டு என்ன - (அவ்வக்கினியின்) மிக்கபுகை மேலோங்கி யெழுந்தாற்போல, செய்ய முடி அவுணர் பெருங் கடலினிடை எழும் பூழி - சிவந்த மயிர்முடியையுடைய அசுரர்களது பெருந்தொகுதியினிடையிலே (அவர்கள் கால்களாலெழுப்பப்பட்டு) மேலெழுந்த புழுதி, சேண் சென்று ஓங்க - வானத்திலெழுந்து செல்லவும்,—(எ - று.)—ஓங்க, (௩௭) எகியதுஎன இயையும்.

திரிபுரத்து அசுரர்மீது பற்றிய செந்தீயின் அடர்ந்தபுகை, செம்பட்டமயிரையுடைய இவ்வசுரர்களது தலைக்குமேலெழுந்த நெருங்கிய புழுதிக்கு உவமையெனக் காண்க. மூவுலகத்தார்க்கும் பலபெருந்தீங்குகள் செய்ததனாலும், மாயவடிவான திருமாலின் உபதேசத்தால் தங்கள் நல்லொழுக்கங்கெட்டுச் சிவத்துவேஷங் கொண்டதனாலும். திரிபுரத்தசுரர் 'பதகரானோர்' எனப்பட்டனர். பொய்யுடலை மெய்யுடலென்றது, மங்கலவழக்கு; இனி, மெய் உடல் - ஒருபொருட்பன்மொழி யென்பாருமுளர். அரவின்றலை— தலை - ஏழனுருபு. பதகர் - பாதக ரென்பதன் குறுக்கல். செய்ய - செம்மை யென்ற பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். உடலம், அம்- சாரியை. (௩௫)

௩௬. கார்க்குன்றமன்னதிறற்கரிமீதும்பரிமீதுங்கடிதிற்றூண்டுந், தேர்க்குன்றமதன்மீதும் வயவர்கடங்கரங்களினுஞ் செறிபதாகை, யார்க்கின்றதுயர்ந்தோங்கியசைகின்றம்பொன்னாட்டிற், றூர்க்கின்றபூழியினைத்துடைக்கின்றபரிசேபோற்றுவன்றித் தோன்ற.

(இ - ள்.) கார் குன்றம் அன்ன - கருநிறமுடைய மலையைப் போன்ற, திறல் கரிமீதும் - வலிமையையுடைய யானைகளின்மேலும், பரிமீதும் குதிரைகளின்மேலும், கடிதின் தூண்டும் - விரைவாகச் செலுத்தப்படுகின்ற, தேர் குன்றம் அதன்மீதும் - தேர்களாகிய மலைகளின்மேலும், வயவர்கள்தம் கரங்களினும் - காலாளவீரர்களுடைய கைகளிலும், செறி - அடர்த்தியாகப் பொருந்திய, பதாகை - பெருங்கொடிகள், ஆர்க்கின்றது உயர்ந்து ஓங்கி அசைகின்றது - (ஒன்றோடொன்று) மோதிக்கொண்டு மிகமேலெழுந்து அசைகின்ற தன்மை,—அம் பொன் நாட்டின் - அழகிய பொன்மயமான தேவலோகத்தின், எ மருங்கும் - எல்லாப்பக்கங்களிலும், தூர்க்கின்ற - நிரப்பப்படுகின்ற, பூழியினை - புழுதியை, துடைக்கின்ற பரிசே போல் - துடைக்கிற தன்மைபோல, துவன்றி தோன்ற - நிறைந்துதோன்றவும்,—(எ-று.)— 'எகியது' என அடுத்தகவியோடு இயையும்.

காலவகைச் சேனைகளிலும் மேலெடுக்கப்பட்டுள்ள மிகவுயர்ந்த கொடிகளின் சீலைகள் அசைகின்றது, கீழ்க்கூறியபடி சேனைகளாற் கிளப்பப்பட்டு மேலெழுந்த தேவலோகத்தைச்சார்ந்த புழுதிகளைத் துடைக்கின்ற தன்மைபோலிருந்ததென்று வருணித்தார். தற்குறிப்பேற்பவணி. "இவுளியின், குரதகட்டெழு கலகம் டணி கொடிசீலைதுகில்கொடு பொலர், தருகிலத்தவர் விழிதுடைப்பன சத சப்படி யிருந்ததே" என்ற வில்லிபுத்தூரார்பாரதச்செய்யுளோடு இதனை யொப்பிடுக.

கார் - கருமை யென்னும் பண்பு ஈறுபோய் ஆகிநின்று இடையுகரமுங் கெட்டது. 'காரகுன்றம்' என்பதற்கு - மேகங்கள் தவழப்பெற்ற மலை யென்றும், மேகமண்டலத்தையளாவி யுயர்ந்துள்ள மலை யென்றும், பருமையையுடைய மலை யென்றும் பொருள் கொள்ளலாம். குன்றம், அம் - சாரியை. கருமையும், பருமையும், வலிமையும், மதயருவியுடைமையும் பற்றி, களிக்குக் காரக்குன்றத்தை உவமைகூறினார். கடிது - கடுமை யென்னும் பண்பினடியாக அல்லது, கடியென்னும் உரிச்சொல்லினடியாகப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்றெச்சவினையுரி: இன் - சாரியை. தேர்க்குன்றம் - வலிமைபெருமைகளில் மலைபோன்ற தேர்கள்: முன்பின்னாகத் தொக்க உவமைத்தொகை; இதற்கு - தேராகிய மலை யென உருவகமாகக் கருத்துரைத்தலும் ஒன்று: மலைமீது கொடிநாட்டுதல் மரபு. குன்றம், பதாகை என்பன - சாதியொருமை யாதலால், 'குன்றமதன்மீது' என்றும், 'ஆர்க்கின்றது' என்றும் ஒருமைச்சொற்கள் தொடரவைத்துக் கூறினார். வய - வீரம்; அதனையுடையவா வயவரெனக் காரணக்குறி. பதாகை - பதாகா என்னும் வடசொல் திரிந்தது. 'ஆர்க்கின்றது' என்பதற்கு - ஒளிவீசி மின்னுகின்றதென்றும், ஒலிக்கின்றதென்றும், வரிசைப்பட அமைந்ததென்றும் பொருள்கொள்ளலாம். அசைகின்றது - நிகழ்காலத் தொழிற்பெயர். (௧௧)

௩௭. வாகையுளபல்லியமுமியம்பத்தனகர்நீங்கிமன்னர்மன்னனேகியதோர்படிநோக்கியுவரிமிசைக்கங்கைகள்வந்தெய்துமாபோற் சாகையுளபன்மரனும்பல்படையுங்குன்றுகளுந்தடக்கைநீந்திச் சேகுடையபெருஞ்சீற்றப்பூதர்படையார்த்தெதிர்ந்துசென்றதன்றே.

(இ - ள்.) வாகை உள - வெற்றிக்கு அறிகுறியாயுள்ள, பல் இயமும் - பலவகைவாத்தியங்களும், இயம்ப - முழங்கவும், மன்னர்மன்னன் - அரசர்கட்கு அரசனான தாரகாசுரன், தன் நகர் நீங்கி - தனது நகரத்தைவிட்டு, ஏகியது - (போர்க்குப்) புறப்பட்டுவந்ததாகிய, ஓர் படி - ஒரு தன்மையை, நோக்கி - பார்த்து,—சேகு உடைய பெருஞ் சீற்றம் பூதர் படை - வைரமமைந்த பெருங்கோபத்தையுடைய பூதகணத்து சேனையானது, சாகை உள பல் மரனும் பல படையும் குன்றுகளும் தட கை ஏந்தி - கிளைகளையுடைய பல மரங்களையும் பல ஆயுதங்களையும் (பல) மலைகளையும் பெரிய கைகளிலெடுத்துக்கொண்டு, உவரி மிசை கங்கைகள் வந்து எய்தும் ஆ போல் - கடலிற் பல கங்காநதிகள் வந்துசேரும் விதம்போல,—ஆர்த்து எதிர்ந்து சென்றது - ஆரவாரித்து (அவன்மேல்) எதிர்த்துச் சென்றது; (எ-று.)—அன்று, ஏ - ஈற்றசை; இதற்கு - அப்பொழுதேயென்றாவது, தேற்றமென்றாவது பொருள்கூறலுமாம்.

பெருஞ்சேனைத்தொகுதியோடுகூடிவந்த தாரகனுக்குக் கடலை உவமைகூறியதனால் அவன்சேனைப்பெருக்கமும், பூதர்சேனைகட்குக் கங்காநதிகளை உவமைகூறியதனால் இவற்றின்சுருக்கமுந் தோன்றும்; மேல் அசுரகாண்டத்து அரசுசெய்படலத்தில் "இவ்வகைமணஞ்செய்பின்றை யிருதுணைவரையுநோக்கி, மெய்வளம்பெறுநகட்குவிதிதனிமொழிநேசி, யவ்

விருகோடிவெள்ளமனிகமோடிருந்த னென்றது; தெவ்வரோனன்றோர் செல்லுமாறேவினனால்" என்பதனால், தாரகனைச்சார்ந்த அசுரசேனை இருகோடிவெள்ள மென விளங்கும் வீரவாகுவினுடன்சென்ற பூதசேனை ஈராயிரவெள்ள மென்பது, முன் கூறப்பட்டது. இதுவேயன்றி, கடலுவமை கூறியதில் அசுரர்சேனையின் இழிவும், கங்கையுவமைகூறியதிற் பூதசேனையின் உயர்வும் தோன்றுமாறு காண்க. கங்கைநதி பலகிளைகளாகப்பிரிந்து கடலிற் சேர்தலால், 'கங்கைகள்' என்ற பன்மை இல்பொருளுவமையாகாது உள்பொருளுவமையாம். உவரி-உவர்ப்புச்சுவையுடையது எனக் காரணக்குறி; உவர் - பகுதி, இ - பெயர்விகுதி. உள - உள்ள தொகுத்தல். மன்னர்மன்னன் ராஜராஜன். தட - பெருமையுணர்த்தும் உரிச்சொல். ஆ - ஆறு என்பதன் விகாரம். சாகை - ஶாகா என்னும் வடசொல் திரிந்தது. மான் - இறுதிப்போலி. 'பல்' என்பதைக் குன்றுகட்கும் கூட்டுக.

"ஒருதரித் தொற்றிட வுணர்த் தவுணர்மன்னன், செற்றமிக மூள வொருதேரின்மிசை யேறித், தூறு வனிகங்கள் புடைசுற்ற வெதிருற்றூறு மறுபூதரு மயற்கெதிர் புகுந்தார்" என்பது, கந்தபுராணச்சுருக்கம்.

௩௮. எல்லோருந் தொழுதகைய குமரனடி யிணைவழுத்தி யிகலவெம் பூதர், கல்லோடு மரத்தொடுங் கதையோடுங் கணிச்சியொடுங் கழுமுள் வீசு, வில்லோடுங் கணையோடும் வேலோடு நேமியொடு மிக்க வெல்லா, மல்லோடும் புரையுமனத் தவுணர்படை யெதிர்சிதறி யமர்செய் திட்டார்.

(இ - ள்.) இகல் வெம் பூதர் வலிமையையுடைய கொடியபூதர்கள்,— எல்லோரும் தொழு தகைய குமரன் அடி இணை வழுத்தி-யாவரும் வணங்கத்தக்க தன்மையையுடைய முருகக்கடவுளின் இரண்டுதிருவடிகளையும் துதித்து,--கல்லோடும் - கற்களோடும், மரத்தொடும் - மரங்களோடும், கதையோடும் - கதாயுதங்களோடும், கணிச்சியொடும் - மழுப்படைகளோடும், கழுமுள் - சூலாயுதங்களோடும், வீசு வில் ஓடும் கணையோடும் - விசைத்து தொழில்செய்கின்ற விற்களினின்று வேகமாய்ச்செல்லுகின்ற அம்புகளோடும், வேலோடும் - வேலாயுதங்களோடும், நேமியொடும் - சக்கராயுதங்களோடும், மிக்க எல்லாம் - மற்றும் மிகுதியாகவுள்ள எல்லா ஆயுதங்களையும், அல்லோடும் புரையும் மனத்து அவுணர் படை எதிர் சிதறி - இருளோடொத்த மனத்தையுடைய அசுரர்சேனைகளுக்கு எதிரிற் பிரயோகித்து, அமர் செய்திட்டார் - போரைச் செய்தார்கள்; (எ - று.)

பூதரெல்லோரும் என எடுத்து உரைத்தலுமாம். அஞ்ஞானவிருள் நிறைந்த மனமுடையவராதலால், 'அல்லோடும்புரையு மனத் தவுணர்' எனப்பட்டார்; இதனை, "அகங்குன்றி மூக்கிற் கரியார்" என்ற திருக்குறளோடு ஒப்பிடுக. 'வீச' என்ற பாடத்துக்கு - பூதர்கள் மரமுதலியவற்றை வீச, அவுணர்கள் கணைமுதலியவற்றை அப்படைக்கு எதிரிலே சிந்திப் போர் செய்தன ரென்க. வில் ஓடும் - ஐந்தாம்வேற்றுமைத்தொகை. ஓடும் கணை - பெயரெச்சத்தொகாநிலைத்தொடர். இனி, 'வில்லோடும்' என்பதை மூன்றும் வேற்றுமைவிரியாகக் கொண்டு உரைத்தல் சிறவாமையை யுணர்க. (௩௮)

வேறு.

௩௯. எண்ணுறு படைக ளிவ்வா றெதிர்தரீஇ யடரும் வேலை
விண்ணுறு தூளி யென்னும் விரிதரு புகையீச் செல்ல
மண்ணுறு குருதி யான வன்னியை மாற்று வார்போற்
கண்ணுறு மிமையோர் கண்கள் கடிப்புனல் கான்ற வன்றே.

(இ - ள்.) எண் உறு படைகள் - மதிக்கத்தக்க சேனைகள், இ ஆறு - இப்படி, எதிர் தழீஇ அடரும் வேலை - எதிர்த்துச் சென்று நெருக்குமபொழுது,—விண் உறு பூழி என்னும் விரிதரு புகை - ஆகாயத்தையளாவிய புழுதிகளாகிய மிக்குப்பரவும் புகை, மீ செல்ல - மேற்சென்றவளவிலே,—மண் உறு குருதி ஆன வன்னியை மாற்றுவார் போல - நிலவுலகத்திற் பரந்த இரத்தமாகிய நெருப்பை (மேலுலகத்திலுள்ள தேவர்கள்) அவிப்பவர் போல, கண் உறும் இமையோர் கண்கள் - (மேலிருந்து அப்போரை) நோக்கிய அத்தேவர்களது கண்கள், கடி புனல் கான்ற - மிக்க நீரைச் சொரிந்தன; (எ - று.)--அன்று, ஏ - ஈற்றசை.

இவ்வாறு இருதிறத்துச் சேனைகளும் ஒன்றோடொன்று எதிர்த்து போர்செய்து நெருக்குமளவில், இவற்றின் கால்களால் எழுப்பப்பட்ட புழுதி, புகைபோல மேலெழுந்துசென்று பரவி, அங்குநின்று போர்காண்கின்ற தேவர்களின் இமையாக்கண்களில் மிகப்படிந்தவளவில், அவர்கள் கண்கள் நீர்சொரிந்த தன்மை, அப்போரிலுண்டாகின்ற இரத்தப்பெருக்காகிய நெருப்பை யவித்தற்கு அவர்கள்மேலே நீர்சொரியலுற்றாற்போன்றது என்பதாம். உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணி; 'என்னும்', 'ஆன' என்றவை - உருவகவுருபாய்நின்றன. 'போல்' என்றது; இங்கே தற்குறிப்பேற்றவுருபு. நிறத்தோற்றம்பற்றி, பூழியும் குருதியும் - புகையும் நெருப்பு மெனப்பட்டன. இமையோர் - கண் இமையாதவர்: எதிர்மறைத் தெரிநிலைவினையாலணையும்பெயர்; எதிர்மறையாகாரம் புணர்ந்துகெட்டது விகுதி முதல் ஆகாரம் ஓகாரமாயிற்று; [நன் - பொது - உ.] இனி, இமையோர் - இமையையுடையவர்; என்றால் இமையில் விசேஷமுடையவர்: அதாவது மூடாத இமையையுடையவர் என்று பொருள்கொண்டால், உடன்பாட்டுக் குறிப்புவினையாலணையும்பெயராம். இங்கே தேவர்களை 'இமையோர்' என்றது, அவர்கள்கண்கள் தடையின்றி எளிதிற்புழுதி படிந்து வருந்தத்தக்கன என்பது தோன்ற; இது, ஸாபிப்பிராய விசேஷ்யம்; கருத்துடையடைகோளி நெருப்பு நன்றாகப் பற்றுவதன்முன் புகை மிக்கு எழுதலும் அங்ஙனம் பற்றியபின்பு புகையெழாமையும் போல, இரத்தவெள்ளம்பரவுதற்குமுன் புழுதியெழுதலும், அது பரவியபின் புழுதியெழாமையுமாகிய இயல்பையும், புகையெழுதல் நெருப்பைக்காணுதற்கு அறிகுறியாதல்போலப் புழுதியெழுதல் இரத்தப்பெருக்கு உண்டாகும்படியான போரின்நிகழ்ச்சியைக் காணுதற்கு அறிகுறியாதலாகிய தன்மையையும், புகை படிந்தவளவிற்போலப் புழுதிபட்டவளவிலும் கண்கள் நீர்சொரிதலாகிய இயற்கையையும், இங்குக்கூறிய வர்ணனைகளுக் காரணங்களாகக் கருதுக.

தழீஇ - தழுவி: சொல்லிசையளபெடை. விரிதரு, தா - துணைவினை. வன்னி - வஹ்நி என்னும் வடசொல்லின் திரிபு. கண்உறும் - ஒருசொல்தன்மைப்பட்டது. கடிப் புனல் - புதுமையான நீருமாம்; கடி - பலபொருள் குறிக்கும் ஓருரித்திரிசொல்: [நன் - உரி - ௧௯.] கான்ற - பலவின்பால் முற்று; கால் - பகுதி.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள் - இப்படலத்தின் ௨௯ - ஆம் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௫௯)

௩0. இரிந்திடலின்றிநேர்வந்தேற்றமர்புரிதலாலே
சொரிந்திடுகுருதிபொங்கத்தோளொடுசென்னிதுள்ளச்
சரிந்திடுங்குடர்கள்சிந்தத்தானவர்பல்லோர்மாயப்
பொருந்திறல்வயத்தான்மேலாம்பூதருஞ்சிலவர்பட்டார்.

(இ - ள்.) இரிந்திடல இன்றி - அஞ்சிப்பின்னிட்டோடுத லில்லாமல், நேர் வந்து ஏற்று அமர் புரிதலாலே - (இருதிறத்தாரும் ஒருவர்க்கொருவர்)

எதிராக வந்து எதிர்த்துப் போர்செய்ததனால்,— சொரிந்திடு குருதி பொங்க - பெருகுகின்ற இரத்தம் அதிகப்படும்படியாகவும், தோளொடு சென்னி துள்ள - தோள்களும் தலைகளும் துணிபட்டுத் துடித்துச் சிதறும்படியாக வும், சரிந்திடும் குடர்கள் சிந்த - சரிந்த குடல்கள் கீழே சிந்தும்படியாகவும், தானவர் பல்லோர் மாய - அசுரர்கள்பலர் இறக்க,—பொரும் திறல் வயத்தால் மேல் ஆம் பூதரும் - போர்செய்யும் வலிமையினாலும் வெற்றியினாலும் மேன்மைப்பட்டவர்களாகிய பூதர்களிலும், சிலவர் பட்டார்-சிலபேர் இறந்தார்கள்; (எ - று.)

குடர் - இறுதிப்போலி. பூதரிற் பலர் படாமற் சிலரே பட்டமைக்குக் காரணந் தோன்ற, 'பொருந்திறல் வயத்தான் மேலாம்' என்று விசேடித்தார்; கருத்துடையடைமொழியணி. உம்மை-இறந்தது தழுவிய எச்சத்தோடு உயர்வு சிறப்பு. தானவர் என்ற வடசொல் - (காசியபமுனிவரது மனைவியருள்) தநுவின் மக்க ளென்று பொருள்படும்; தத்திதாந்தநாமம். பல்லோர - பன்மை யென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர். புரிதலாலே, ஏ - அசை. பொங்க, துள்ள, சிந்த என்ற செயவெனெச்சங்கள் - காரியப் பொருளன வாதலால், எதிர்காலம். 'மாய' என்ற செயவெனெச்சம் - உடனிகழ்ச்சிப்பொருள தாதலால், நிகழ்காலம். பொருந் திறல் வயத்தால் என்பதற்கு - (அவ்வசுரர்கள்)போர்செய்த மிக்கவலிமையால என்று உரைத்து, 'மேலாம்பூதருஞ் சிலவர் பட்டார்' என்பதனோடு இயைத்தலும் ஒன்று. சிலவர், அ - சாரியை. பொருந்திறல்வயத்தான்மேல ஆம பூதர் என்று எடுத்து, போரில் மிக்க வலிமையையுடைய தாரகன்மேலெதிர்த்துவந்த பூதரெனினுமாம். புரிதலால், மாய, பட்டார் என இயையும். (௪௦)

௪௧. தேருடைதகெறிநதுபாய்மாத்திறத்தினைசசிதைத்துநீக்கி
யாருடைத்திகிரிச்சில்லியங்கையாலெடுத்துச்சுற்றிப்
போருடைத்திறலோர்தம்பாற்பொம்மெனநடாததுமபொற்பா
காருடைப்பூதாசில்லோாகண்ணனேபோன்றாரன்றே [ற்

(இ - ள்) தேர உடைத்து எறிந்து - (அசுரர்களேறிவந்த) தேர்களை உடைத்துப்போக்கி,—பாய் மா திறத்தினை சிதைத்து நீக்கி-பாய்ந்துவருகின்ற குதிரைகளின்வகைகளை அழித்தொழித்து,—ஆர் உடை திகிரி சில்லி அம் கையால எடுத்து சுற்றி - ஆரென்னும உறுப்பையுடைய தேர்ச்சக்கரங்களைத் தமது அகங்கைகளால் எடுத்துச சுழற்றி, போர் உடை திறலோர் தம்பால் பொம்மென நடாததும் - போர்செய்யுந்தன்மையையுடைய வலிய அசுரவீரர்களின்மேல விரைவாகச செலுத்துகின்ற, பொற்பால் - சிறந்த தன்மையால்,—கார் உடை பூதா சில்லோர்-கருநிறத்தையுடைய சிலபூதர்கள், கண்ணனே போன்றார - திருமாலின் திருவவதாரமான ஸ்ரீகிருஷ்ண பகவானையேயொத்தார்கள; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை.

கருநிறமுடைய கண்ணன் வண்டிவடிவமாய்வந்த சகடாசுரனை உதைத்தெறிந்ததனாலும், குதிரைவடிவமாய்வந்த கேசியென்னும் அசுரனைச் சிதைத்துநீக்கியதனாலும, சக்கராயுதத்தைக் கையிற்கொண்டு சுழற்றிப் பகைவர் மீது எறிதலாலும், அத்தன்மைகள் நிகழப் போர்செய்த கருநிறமுடைய பூதர்க்குக் கண்ணனை உவமைகூறினர். உவமையணி.

'மா'என்னும விலங்கின்பொதுப்பெயர்-'பாய்'என்ற அடைமொழியால், குதிரையையுணர்த்திற்று. ஆர் என்பது-"ஆரே கூர்மையு மாத்தியு மாகும், தேராழியகத்திற்செறி யுறுப்பு மாகும்" என்ற திவாகரத்தால் தேர்ச்சக்கரத்தின் அகவாய்க்கும்,"ஆர் கூர்மை யாத்தி தேரின் அஞ்சுருவாணிக்கும் பேர்" என்ற சூடாமணிநிகண்டினால் அஞ்சுருவாணிக்கும், "ஆர் கெழுகுறடு சூட்

டாழிபோன்று" என்ற சீவகசிந்தாமணியாலும் அதன் உரையாலும் தேர்ச்சக்கரத்தின் இடையிலேயுள்ள இலைகளுக்கும் பேரா மென்று தெரிகின்றது. திகிரியென்னுஞ் சக்கரத்தின் பெயர்-சினையாகுபெயராய், இங்கே, தேரையுணர்த்திற்று. இனி, திகிரிச் செல்வி - வட்டமாகிய சக்கரம் என்றலுமொன்று. அம் கை - அழகிய கை யெனல் சிறப்பன்று. பொம்மெனல் - விரைவுக்குறிப்பு; ஓர் ஒலிக்குறிப்புமாம். நடாத்தும - நடத்து மெனபதன் விகாரம். கண்ணன் - க்ருஷ்ணன் என்ற வடசொல்லின் சிதைவு; கருநிறமுடையவனென்றும், மற்றும் பலவாறாகவும் இதற்குப் பொருள்கூறப்படும்; ஏ - பிரிநிலையோடு, உயர்வுசிறப்பு; தேற்றமுமாம். பொற்பு - பொலிவு.

கண்ணன் தேருதைத்தெறிந்த கதை—நந்தகோபன்மனையில ஒரு வண்டியின்கீழ்ப்புறத்தில் தொட்டிலிற்பள்ளிகொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணன், ஒருகால் அச்சகடத்திற் கம்சனாலேவப்பட்ட அசுரனொருவன் வந்து ஆவேசித்துத் தன்மேல்விழுந்து தன்னைக்கொல்ல முயன்றதை அறிந்து, குழந்தையியற்கைப்படி பாலுக்கு அழுகின்ற பாவனையிலே தனது சிறியதிருவடிகளை மேலேதூக்கிஉதைத்தருள, அவ்வுதைபட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுடப்பட அழிந்த தென்பதாம.

கண்ணன் பாயிமா சிதைத்துநீக்கிய கதை—ஒருகால கம்சனாலேவப்பட்ட கேசியென்னும் அசுரன் குதிரையினுருவத்தோடு ஆயப்பாடிக்கு வந்து ஆயர்களை அஞ்சிக்கெடுக்கும்படி கனைத்துத்துரத்திக்கொண்டு கண்ணன் மேற் பாய்தற்குத் தொடங்க, கண்ணன், தன் துகையை நன்றாகப்பெருக்கி நீட்டி அம்மாயக்குதிரையின்வாயிற்கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப்பிளந்து அதனுடம்பையும் இருபிளவாகக்கிழித்து தள்ளினன் என்பதாம்

கண்ணன் ஆழியெடுத்துச்சுழற்றிஅசுரர்மேலெறிந்துஅழித்தல், பிரசித்தம். (௪௧)

௪௨. தேர்பரித்தெழுந்துமண்ணிற்செல்லுறாபவளச்செங்கால்
காரபரித்தன்னதோகைக்கவனவாம்புரவியீட்டம
போர்பரித்தொழுகுசீற்றபபூதர்கள்புடைத்துசசிந்திப
பார்பரித்திடவேசெய்தார்படிமகளிடும்பைதீர்ப்பார்.

(இ - ள்.) தேர் பரித்து எழுந்து-தேர்களை யிழுத்துக்கொண்டு புறப்பட்டு, மண்ணில் செல்லுறா-தரையின்மீது செல்லாத, பவளம் செம் கால் - பவழம்போலச் சிவந்த கால்களையும், கார் பரித்து அன்ன தோகை-மேகத்தை யெடுத்துக்கொண்டிருந்தாற்போன்ற [கருநிறமுள்ள] வாலையுமுடைய, கவனம் வாம் புரவி-விரைந்தநடையோடு தாவிச்செல்லுந்தன்மையுள்ள குதிரைகளின், ஈட்டம் - கூட்டத்தை, போர் பரித்து ஒழுகு சீற்றம் பூதர்கள் - யுத்தஞ்செய்தலை மேற்கொண்டு ஒழுகுகின்ற கோபமுள்ள பூதர்கள், புடைத்து சிந்தி - அடித்துத்தள்ளி, பார் பரித்திடவே செய்தார் - பூமி சுமக்கும்படியாகவே செய்து, படி மகள் இடும்பை தீர்ப்பார் - பூமிதேவியினது (பாரமிகுதியாலாகிய) துன்பத்தை யொழிப்பவரானார்கள்; (எ - று.)

பூதர்கள் குதிரைக்கூட்டத்தைக் கொன்றுதள்ளிப் பூமிசுமக்கச்செய்தே பூமியின்பாரத்தை நீக்கினார்கள் என்றது, முரண்விளைந்தழிவணி; வடநூலார், விரோதாபாஸாலங்காரம் என்பர்: இது, தண்டியலங்காரத்தில், விரோதாலங்காரமெனப்படும். பாவிகள்மிக்குச்செழித்திருத்தல் பூமிக்குப்பாரமும், அவர்கள்செழிப்பை யொழித்தல் பூமிபாரத்தை நிவிருத்திசெய்தலுமாகுதலால். அசுரர்குதிரைகளைக் கொன்று கீழேதள்ளிய பூதர் படிமகளிடும்பைதீர்ப்பவ ராவர். இதில், சொற்பொருளால் 'பார்பரித்திடவேசெய்

தார்' என்பதற்கும் 'படிமகளிடும்பை தீர்ப்பார்' என்பதற்கும் ஒன்றோடொன்று முரண்தோன்றி, கருத்தை நோக்குமிடத்து அம்முரண் அழியுமாறு காண்க. இனி, படிமகளிடும்பைதீர்ப்பார்பூதர்கள் புரவியீட்டம் புடைத்துச் சிதைப் பார்பரித்திடவேசெய்தார் என இயைத்து. ஒருகாரியத்தைச்செய்யத்தொடங்கி அதற்குவிரோதமாகியமற்றொருகாரியத்தைச் செய்தலாகிய தொடர்பின்மையணியாகக்கொள்ளுதலு மொன்று; தாளும் தரையிற்கால் பாவிச்செல்லாமல் தேரையும் தரையிற்படியாதபடி தாவிக்கொண்டு ஓடுதலால் தன்பாரத்தையும் பூமிக்குஇல்லாதபடி செய்துசென்ற குதிரைகளைப் பூதர்கள் அடித்துத்தள்ளி, அக்குதிரையுடலின் பாரம் சேர்ப்பாரம் என்னும் இவ்விரண்டினாலும் பூமிக்குப் பெருஞ்சுமையை உண்டாக்கியும், அப்பூதர்கள் அதனிடும்பைதீர்ப்பவரேயாயினரெனச் சமத்காரந்தோன்றக் கற்பனைகூறியமை காண்க.

'செல்லுறு' என்ற ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். 'புரவி'என்பதனைக் கொள்ளும்; 'கால்'என்பதனைக் கொண்டதாக்கலு மொன்று. 'மண்ணிற் செல்லுறுப் புரவி'என்றது, மிக்கவிரைவாற் கால்கள் கீழ்ப்படாதவண்ணமாகவே செல்கின்றதெனக் குதிரையின் வேகமிகுதியைக் குறித்ததாகக் கொள்ளலாம். "குருடை நிலையெனத் தோய்ந்துந் தோய்கிலா, வாருடை வனமுலைமகளிர் சிந்தைபோல், தாரொரோடுஞ் சதியொடுந் தாவுமாயினும், பாரிடைமிதிக்கில பரியின் பந்தியே" என்ற கம்பராமாயணத்தையும், "பாரிற் றேர்செலிற்பழிபெரிதுடைத்தென நாணிச், சோரும்வார்புயல்தலைக விண்புகுவன துரகம்"என்ற சிந்தாமணியையும், "வடிவுடைச் சில துரகத மரகத வண்ணமிக்கனவாகிப், படியினிற்சிறிதமைவுறமிதித்தில பவனவேகதிபோல, முடிவிலிப்படிநிசைவரககருதியே முனிவரனுயிர்க்கெல்லாம், அடிபடைத்தது படைத்திலதியற்றினுக் கயைவுகுறையாமல்" என்ற வில்லிபுத்தூரார்பாரதத்தையுங் காண்க. இனி, 'மண்ணிற் செல்லுறு'என்பதற்கு- தரைமீது கால்வைத்து நடவாமல் மேலெழுந்து ஆகாயமார்க்கமாய்ப் பறந்து செல்லுகின்ற என்று உரைப்பாரும் உளர்.

கால்கள் சியந்திருத்தலும், வால் கறுத்திருத்தலும், குதிரைநல்லிலக்கணங்களிற் சேர்ந்தவை யென்க. கவனம்- கமந மென்னும் வடசொல்லின் திரிபு. வாம - வாவு மென்னுஞ் செய்யுமெனெச்சத்தின் விகாரம்; [நன் - வினை - உஉ.] ஈட்டம்- ஈண்டு என்னும் பகுதியின் தொழிலாகுபெயர். பவளம் ப்ரவாள மென்ற வடசொல் சிதைந்தது.　　(௩௪.)

௩௫ வாலுடைக்களிற்றினீட்டம்வாரியேகரத்தாலெற்றிக்
　　காலுடைத்திகிரித்திண்டேர்கழல்களாலுருட்டிக்காமர்
　　பாலுடைப்புரவித்தானைபதங்களாலுழக்கிச்சென்றார்
　　வேலுடைத்தடக்கையண்ணல்விடுத்தருள்வீரவீரர்

(இ - ள்.) வேல் உடை தட கை அண்ணல் - வேலாயுதத்தையுடைய பெரிய கையையுடைய சிறந்த முருகக்கடவுள், விடுத்தருள் - (போகும்படி) ஏவியருளிய, வீர வீரர் - சிறந்த வீரர்களாகிய பூதர்கள்,—வால் உடை களிற்றின் ஈட்டம் - இலக்கணத்தூய்மையையுடைய யானைகளின் கூட்டத்தை, கரத்தால் வாரி எற்றி - கைகளால் எடுத்து வீசிக்கொண்டும்,—கால் உடை திகிரி திண் தேர் - கால்களையுடையவையும் சக்கரங்களமைந்தவையுமான வலிய தேர்களை, கழல்களால் உருட்டி - கால்களால் உதைத்து உருட்டித்தள்ளிக்கொண்டும்,—காமர் பால் உடை புரவி தானை - அழகிய வெண்ணிறமுடைய குதிரைச்சேனைகளை, பதங்களால் உழக்கி - காலடிகளால் மிதித்துத் துவைத்துக்கொண்டும், சென்றார் - (பகைவரையெதிர்த்துச்) சென்றார்கள்; (எ-று.)

வால்-மிகுதியும், பெருமையுமாம்; "வால் வெண்மை மிகுதி தூய்தாம்" என்ற சூடாமணிநிகண்டையும். "வெண்ணிறம் பெருமை தூய்தோகையும் வாலே" என்ற பிங்கலந்தையையுங் காண்க. இனி, (பகைவரை மேல்வீசியடித்துக்கொல்லும்) வால்வலிமையையுடைய களிறென்றுங் கொள்ளலாம்; உத்தமயானையிலக்கணத்தில் "காலினு நான்ற வொருதனிக் கையினும், வாலினு மருப்பினுங் கோறல் வல்லதாய்" என வருதல் காண்க. "அரும்பனைத்தடக்கையபராகத்திரமும் வாலெயி றைக்தினுங் கொல்ய" என்றார் சிந்தாமணியாரும் காலுடை-காற்றின்வேகத்தையுடைய என்னலுமாம். காமர் - காம மென்னும் வடசொல்லின் றிரிபு; விருப்ப மென்று பொருள்: விரும்பப்படும் அழகுக்கு இலக்கணை. சிறந்தனவாதலால், வெள்ளைக்குறிகளை யெடுத்துக் கூறினார். வீரவீரர்-வீரருள்ளும் வீரர்; இதனை 'ராசராசன்' என்றாற்போலக் கொள்க. இனி, வீரவீரரென்பதற்கு-வீரர்களாகிய வீரக னென்றுகொண்டு, வீரவாகுமுதல் வீரதீரனீறாகவுள்ள 'வீர' என்னும் அடைமொழி யடுக்கப்பட்ட ஒன்பதுவீர ரென்று உரைத்தல், சிறவாது. களிறு-யானையின் ஆண்மைப்பெயர்; "வேழக்குரித்தே விதந்து களிறென்றல்" என்பது தொல்காப்பியம்: (இதன் பெண்பால் - பிடி; "பிடியென் பெண்பெயர் யானைமேற்றே" என்றார் தொல்காப்பியனார்.) அண்ணல் - பெருமையிற்சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். உழக்கி, உழக்கு - பகுதி.

௪௪. வாருறுபுரசைபூண்டவன்களிற்றொருத்தல்யாவுஞ்
சூருறுநிலயவாகித்துஞ்சியதொகுதிசூழப்
பேருறுகுருதிநீத்தமபிறங்கழற்கதிர்காணாது
காருறலூர்கோடோன்றுங்காட்சியையொத்ததன்றே

(இ - ள்.) வார் உறு - நீட்சி மிக்க, புரசை-கழுத்திடுகயிற்றை, பூண்ட-தரித்துள்ள, வல் களிறு ஒருத்தல் யாவும் - (தாரகன்சேனையிலுள்ள) வலிய ஆண்யானைகளெல்லாம், சூர் உறு நிலைய ஆகி துஞ்சிய - (பூதகணங்களாற் புடைக்கப்பட்டுத்) துன்பமிக்க தன்மையையுடையனவாய் இறந்து விழுந்த, தொகுதி கூட்டங்கள், சூழ - சுற்றிலுமிருக்க, பேர் உறு - (அவற்றின் உடம்பினின்று இடையிலே) பெருகிய, குருதி நீத்தம் - இரத்தவெள்ளத்தின் காட்சி,—பிறங்கு அழல கதிர் காணாது - விளங்குகிற வெப்பமுள்ள கிரணங்களையுடைய சூரியனைக் காணவொண்ணாதபடி மறைத்துக்கொண்டு, கார் உறு ஊர் கோள் தோன்றும் - கருநிறம்பொருந்தச் செல்லுகிற இராகுவாகிய கிரகம் காணப்படுகின்ற, காட்சியை - தோற்றத்தை, ஒத்தது—.

இங்ஙனங்கூறினாரேனும், வட்டமாய்ப் பெருகிநிறைந்துள்ள சிவந்த இரத்தவெள்ளத்தைச் சுற்றிலுங் கரியயானையினுடம்புகள் இடைவிடாது விழுந்து கிடந்து அவ்விரத்தவட்டத்தை மறைத்திடுந் தன்மை, சிவந்த சூரியமண்டலத்தைக் காணவொண்ணாதபடி மறைத்திடுகின்ற கரிய இராகுவென்னுங் கிரகத்தைப் போன்ற தென்பது கருத்தாகக் கொள்க. இனி, இக்கருத்துக்கு ஏற்றபடி, குருதிநீத்தஞ் சூழும்படி வன்களிற்றொருத்தல் யாவுந் துஞ்சிய தொகுதி கதிர் காணாது கோள்தோன்றுங் காட்சியை யொத்தது என்றாவது, களிற்றொருத்தல்யாவும் துஞ்சியதொகுதி குருதி நீத்தஞ்சூழ்தலால கதிர்காணாது கோள்தோன்றுங் காட்சியை யொத்தது என்றாவது சொற்களைமாற்றி அந்வயித்து முடிப்பினும் அமையும். இக்கருத்தையுணர்தற்கு ஆதாரமாக "வெஞ்சரத்தினால் விசயன் வென்ற போர் மிகுகளத்தின்வாய் விசையொடற்றன, குஞ்சரத்தின் வீழ் கைகள் நாகமே குருதிவட்டமும் பரிதிவட்டமே" என்ற வில்லிபுத்தூரார் பாரதத்தை நோக்குக. இராகு கரிய தாதலை "இராகுக்கோள் கரும்பாம்பு" என்ற திவாகரத்தாலும் அறிக. ஊர்தல் - இங்கே, போதல்; "குன்றமார்

பரிந்து வெள்வேற் குடுமிமாமஞ்ஞை யூர்ந்து" என்ற சிந்தாமணிச்செய்யுளினுரையில் நச்சினார்க்கினியர் 'ஊர்தல - ஊண்டு, போதல்மேற்று; "வானூர் மதியம்" போல' என்றதை யுணர்க. இராகு, ஊர்ந்துசெல்லுந்தன்மையதான பாம்பின் வடிவமெனப்படுதலால், அதற்குஏற்ப 'ஊர் கோள்' எனப்பட்டது. அன்று, ஏ - ஈற்றசை.

இனி, செக்கிறமான இரத்தவெள்ளத்தைக் கருநிறமாய் மிக்க யானைப் பிணங்கள் சூழ்ந்தது, சிவந்த சூரியமண்டலத்தைக் காணவொண்ணாதபடி மறைத்துக்கொண்டு கருநிறம்பொருந்த ஒருபரிவேடம தோன்றிய காட்சியைப் போன்றது என்று உரைப்பாருமுளர். அது பொருந்துமேனும் உணர்க. அவ்வுரைக்கு, சூரியனைக் காணவொண்ணாதபடி கருநிறமாய்த் தோன்றுவதொரு பரிவேடம் இல்பொருளுவமையாதல் வேண்டும்; ஊர்ந்துகொள்ளுந் தன்மையதாதலின், பரிவேடத்துக்கு 'ஊர்கோள்' என்று பெயர்; ஊர்ந்துகொள்ளுதல் - சூழ்ந்துகொள்ளுதல். பரிவேஷம் - சந்திர சூரியரைச் சூழத் தோன்றும் வட்டம.

அன்றி, கதிர் காணாது கார் உற - சூரியன் காணப்பெறாதபடி மேகங்கள் மூடிக்கொள்ள, ஊர்கோள்தோன்றும்-பரிவேஷம்தோன்றுகின்றதென்று பதவுரைகூறி, மேகங்கள் எங்குஞ்சூழ்ந்திருக்க இடையிற் பரிவேடங்காணப்படுவதுபோல யானைகளினுடம்புகள் நாற்புறங்களிலுஞ் சூழ்ந்துகிடக்க அவற்றினிடையே இரத்தவெள்ளம் பெருகியதென்று கருத்துரைப்பாருமுளர்.

அன்றியும், கார் உற ஊர் கோள் தோன்றும் - கருநிறம்பொருந்த மேகங்கள் வந்துகூடிய வென்று உரைக்கவுந்தகும்; சிந்தாமணியில் "நாளொடு நடப்பது வழுக்கி மின்னொடோ, கோளொடு குளிர்மதி வந்து வீழ்ந்தென" என்றவிடத்து 'மின்னொடு ஊர் கோளொடு' என்பதற்கு நச்சினார்க்கினியர் 'மின்னொடு செல்கின்ற மேகத்துடனே' என்று பொழிப்புரையும், 'ஊர் கோள் - வினைத்தொகை; ஆகுபெயர்' என்று இலக்கணமும் கூறியது காண்க. கோள் - (நீரைக்) கொள்வது என மேகத்துக்கு முதனிலைதிரிந்த தொழிலாகுபெயராகிய காரணக்குறி.

வார் - உரிச்சொல். மதம்பிடித்தகாலத்தில் யானையின்மேல் ஏறியிருத்தற்கு ஓர் ஆதாரமாதற்பொருட்டு எப்பொழுதும் யானைக்கழுத்திற் கயிறு கட்டிவைத்தல், இயல்பு. 'வார் உறு புரசை' என்பதற்கு - தோலினால் அமைந்த கயிறென்றல் சிறப்பன்று. ஒருத்தல் - ஆண்பாற்பெயர்; இது யானைக்கு உரியதாதலை "வார்கோட் டியானையும் பன்றியு மன்ன" என்ற தொல்காப்பியத்தால் உணர்க. ஆண்யானையைக் குறிக்கும் 'களிறு' என்னும் பெயர், 'ஒருத்தல்' என்னும்பெயர் வந்துதொடர்ந்ததனால், யானையென்ற மாத்திரமாய் நின்றது; (தொல்காப்பியத்தில் "வேழக் குரித்தே விதந்து களிறென்றல்" என்ற சூத்திரத்தின் உரையில் 'விதந்து என்ற விதப்பினால், களிறென்பது சாதிப்பெயர்போலவும் நிற்கு மென்பது; அஃதாவது - யானையென்னுஞ் சாதிப்பெயரினைக் களிறென்னும்பெயர் வாது சிறப்பித்தால் "கடுங் களிற்றொருத்தல்" என்றும் ஆகு மென்பது' என்றது காண்க.) களிற்றொருத்தல் - களிறாகிய ஒருத்த லென இருபெயரொட்டுப்பண்புத்தொகையாக் கொள்க; களிற்றினது ஒருத்த லெனினும் இழுக்காது.

இரண்டாமடியில், சூர் - பூதங்களால், உறு - இடையூறுற்ற, நிலைய ஆகி - நிலைமையையுடையனவாய் என்றும் பொருள்கொள்ளலாம். சூர் - அச்சமும், நோயுமாம். "சூரென் கிளவி அச்சமுந் துன்பமும், பிணியுந் தெய்வப்பெயரு மாகும்" என்ற பிங்கலந்தையை யுணர்க.

களிற்றொருத்தல்யாவுந் துஞ்சிய தொகுதி யென்க. யா - அஃறிணைப் பன்மைவினாப்பெயர்; இங்கு எஞ்சாமைகுறித்தது: 'வ' விகுதிபுணர்ந்து கெட்டது. உம்மை - முற்றுப்பொருளது. நிலைய - பலவின்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர். துஞ்சுதல் - தூங்குதல்: இறத்தலைத் துஞ்சுத லென்பது - மங்கலவழக்கு; மீண்டும் எழுந்திடாத பெருந்தூக்க மென்க தொகுதி-'தி' விகுதி பெற்ற தொழிலாகுபெயர். பேர் - பெயர் என்னும் வினைப் பகுதியின் மரூஉ; இது 'உறு' என்னுந் துணைவினையோடு சேர்ந்து, பேருறு என வினைத்தொகையாய் நின்றது. பிறங்குசுழற்கதிர் - சூரியமண்டலத்துக்கு, அன்மொழித்தொகை. காட்சி - 'சி' விகுதி பெற்ற தொழிலாகுபெயர். உவமையணி. (௪௪)

௪௫ கண்ணெதிர்நின்றுபோர்செய்கார்கெழுமவுணர்பற்றித்
துண்ணெனபூதர்வீசத்துளங்கியகலன்களோடும்
விண்ணிடையிறந்துநொய்தின்வீழ்வதுவிசும்பிறற்பி
மண்ணிடைமின்னுவோடும்வருமுகில்போன்றதன்றே.

(இ - ள்.) கண் எதிர் நின்று போர் செய் - (தமது) கண்களினெதிரிலே நின்று போர்செய்கின்ற, கார் கெழும் அவுணர் - கருநிறம்மிக்க அசுரர்களை, பற்றி - பிடித்து, பூதர் - பூதவீரர்கள், துண்ணென - விரைவாக [அல்லது திடுக்கிடும்படி], வீச - (வானத்தில்) எறிய, (அதனால் அவ்வசுரர்கள்), விண்ணிடை இறந்து - ஆகாயத்திலேயே உயிர்நீங்கி, துளங்கிய கலன்களோடும் - அசைந்துவிளங்குகின்ற ஆபரணங்களுடனே, நொய்தின் வீழ்வது - விரைவாகப் பூமியில் விழுகிற தோற்றமானது,—விசும்பின் தப்பி - வானத்தினின்று தவறி, மின்னுவோடும் - மின்னலுடனே, மண்ணிடை வரும் - பூமியில் வந்துவிழுகின்ற, முகில் - மேகத்தை, போன்றது - ஒத்தது; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை.

பூதர்களால் எறியப்பட்ட கரியஅசுரர்களுடம்பு விளங்குகிறஆபரணங்களுடனே வானத்தினின்று பூமியில் விழுவது, கரியமேகம் மின்னலுடனே வானத்தினின்று பூமியில் விழுவது போன்றது என்பதாம். தற்குறிப்பேற்றவணி. மாயையால் மறைந்து போர்செய்யாத தொடங்காமை தோன்ற, 'கண்ணெதிர்நின்று போர்செய்' என்றார். கண் எதிர் - பிரதியக்ஷமாக. விசும்பின் - ஐந்தனுருபு, நீக்கம். மின்னுவது மின் எனக் காரணப்பெயர். மின்னு, உ - சாரியை; [நன் - மெய் - ௩௪.] 'மின்னு' என்பது முற்றியலுகரமாதலின், 'ஓடு' என்பதன் உயிர்வர உகரங்கெடாமல் பொதுவிதியால் வகரவுடம்படுமெய் பெற்று, 'மின்னுவோடு' என நின்றது. உம்மை - இசைநிறை. கலன் - அணிகலம். வீச, வீழ்வது,போன்றது என இயையும்.

௪௬ ஆயிரவெள்ளமாகுங்கணவருமாங்கணுள்ள
பாயிருங்குன்றமெல்லாமபன்முறைபறித்துவீசி
மாயிருநதுவர்தானைவரம்பிலபடுத்துநின்று
ரேயெனவுலகைச்சிந்துமிறுதிநாளெழிலிபோல்வார்

(இ - ள்.) ஆயிரம் வெள்ளம் ஆகும் கணவரும் - ஆயிரவெள்ளமென்னுந் தொகையையுடையரான பூதகணத்தவரெல்லாரும்,— ஆங்கண் உள்ள - அவ்விடத்திலிருக்கின்ற, பாய் இருங்குன்றம் எல்லாம் - பரவியுள்ளபெரிய மலைகளையெல்லாம், பல் முறை பறித்து வீசி - பலதரம் பிடுங்கி யெடுத்தெறிந்து, (அதனால்), வரம்பு இல மா இருந் துவர் தானை படுத்து நின்றார் - அளவற்றனவான மிகப்பெரிய அசுரசேனைகளை அழித்துநின்றவர்களாய், ஏயென உலகை சிந்தும் இறுதி நாள் எழிலி போல்வார் - விரைவாக உலகத்தையழிக்கின்ற யுகாந்தகாலத்து மேகங்களை யொப்பவரானார்கள்; (எ - று.)

குன்றுகளைப் பறித்து மேன்மேல்வீசி அசுரரையழிக்கின்ற கருத்தை யுள்ள பூதர்களுக்கு, கல்மழையை இடைவிடாது சொரிந்து உலகையழிக்கின்ற கற்பமுடிவுகாலத்துக் காளமேகம் உவமை யென்க.

ஆககண் - அகங்கண் என்பதன் சிதைவு. பாய்தல் - பரவுதல். மா - பெருமையுணர்த்துகின்ற 'மஹா' என்னும் வடசொல்லின் விகாரம். இரு - பெருமையுணர்த்துகின்ற 'இருமை' என்னும் பண்பினடி; மா இரு என்பன-ஒருபொருட்பன்மொழியாய்த் தொடர்ந்து, மிக்க அதிகத்தைக் குறித்தன. மா + இரு = மாவிரு எனப் பொதுவிதியால் ஆகாரத்தின்முன் உயிர் வர வகரவுடம்படுமெய்பெற்று வரற்பாலது 'மாயிரு' என யகரம் பெற்றது. உரிச்சொற்புணர்ச்சியாதலால்; [நன் - மெய் ௩௬] மா என்னும் நிலைமொழி பண்புணர்த்தும் உரிச்சொல்லாதல் காண்க. தானை வரம்பில - வரம்பில்லாதனவாகிய சேனைகளை யென மாறுக. இல - பலவின்பாற் பெயர் எயென - எ என்று ஒருமுறைசொல்லுமளவில்; இது, விரைவுக்குறிப்பாய் வழங்கும்; இரண்டுமாத்திரைப்பொழுதினுள்ளே யென்றபடி. இதனை "இம்மென்னுமுன்னே", "அம்மென்றால்" என்றாற்போலக் கொள்க எ + என - எயென யகரவுடம்படுமெய் தோன்றிற்று; "எழுன இவ்விருமையும், உயிர்வரி னுடம்படுமெய்யென்றாகும்" என்றார் நன்னூலார். இறுதிநாள் - பிரமனது பகற்பொழுதின் முடிவு அல்லது பிரமனது ஆயுள் முடிவாகிய ஊழிக்காலம். கனவர் - கன மென்ற வடசொல்லின்மேற் பிறந்த பலர்பாற்பெயர். எழிலி - (வானத்தில்) எழுதலை யுடையது; எழில் - 'இல்' விகுதிபெற்ற தொழிற்பெயர் அதன்மேல், இ - பெயர்விகுதி.

இனி, எழிலி யென்பதற்கு - காரணப்பொருளால். காற்றென்று உரைத்து, சர்வசங்காரகாலத்தில் ஆங்காங்குள்ள மலைகளையெல்லாம் பறித்து வீசி விரைவில் உலகையழிக்கின்ற பிரளயப்பெருங்காற்று இங்குப் பூதர்க்கு உவமை யென்றலும ஒன்று. (சக)

சஎ நிணங்கவர்ஞமலியோர்சாரஞெரேரெனக்குரைப்பப்புள்ளின்
கணங்களுமலகைதானுங்கறங்கிடக்ககனத்தோங்கிப்
பிணங்களினடுக்கலீண்டிப்பேரமர்விலக்கியார்க்கு
மணங்குறுநிலையவாகியடுத்தனநடுவணம்மா.

(இ - ள்.) நிணம் கவர் ஞமலி - (இறந்த பிராணிகளின்) உடற்கொழுப்பைப்(ப் புசித்தற்கு வாயினூறி) கவருகின்ற நாய்கள், ஓர் சார் - ஒருபக்கத்தில், ஞெரேரென குரைப்ப - ஞெரேரெனன்னும் ஓசைபடக் குரைக்கவும், புள்ளின் கணங்களும் அலகைதானும் - (பிணம்தின்னவந்த கழுகு முதலிய) பறவைகளின் கூட்டங்களும் பேய்க்கணமும், கறங்கிட - ஆரவாரிக்கவும், பிணங்களின் அடுக்கல் - பிணமலைகள், ஈண்டி - நெருங்கி, ககனத்து ஓங்கி - வானத்தளவும் உயர்ந்து, யார்க்கும் அணங்கு உறும் நிலைய ஆகி - யாவர்க்கும் அச்சமுண்டாம்படியான தன்மையுடையனவாய், பேர் அமர் விலக்கி - பெரிய போரைத் தடுத்து, நடுவண் அடுத்தன - இடையிலே பொருந்தின; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்: இங்கே, வியப்பு - பிணமிகுதி பற்றியது.

படுகளச்சிறப்புக்கூறியது, இச்செய்யுள்.

பூதகணத்துக்கும் அசுரசேனைக்கும் இடையில் இறந்துவிழுந்தபிராணிகளின்உடல்தொகுதி மலைபோலக்குவிந்துஉயர்ந்திருந்த தன்மை, இவ்விருதிறத்தார்க்கும் இடையில் ஒருமலை தோன்றிநின்று ஒருவரையொருவர் காணவொண்ணாதபடிசெய்து அவர்கள்போரை விலக்கலுற்றாற்போன்றதென்பதாம். தாம்தாம் கடவு ளென்னுங் கருத்துக்கொண்டு ஒருவர்க்

டொருவர் பகைமைபூண்டு போர்செய்த பிரமவிஷ்ணுக்களின் போரை விலக்கும்பொருட்டுப் பரமசிவன் அவ்விருவர்க்குமிடையில் ஓர் அனற்பிழம்பின் உருவமாய்த் தோன்றிநின்ற தன்மை, இங்கே நினைக்கத்தக்கது.

ஞமலி யென்பது - இசைச்சொல்லெனத் தொல்காப்பியநச்சினார்க்கினியத்தால் விளங்கும். ஞெரேலெனல் - அநுகரணவோசை: ஒலிக்குறிப்பு; அச்சக்குறிப்பும், விரைவுக்குறிப்புமாம். கறங்கிட - சூழ எனினுமாம். ககனம் - வடசொல். அடுக்கல் - கற்கள் ஒன்றன்மேலொன்று அடுக்காக அமையப்பெற்றது என மலைக்குக் காரணக்குறி; இங்கு அதுபோன்ற குவியலைக் குறித்தது. இச்செய்யுளில், 'பேரமர்விலக்கி' என்றதனால், தற்குறிப்பேற்றவணி தோன்றும். (௪௭)

௪௮ தரைத்தடஞ்சிலையதாகத்தறுகண்வெம்பூதரானோர்
வரைதுணையன்னதாளேவலிகெழுகுழவியாகத்
திரைத்திழிகுருதிநீராத்தீர்ந்திடுதிறலோர்யாக்கை
யரைத்தெனநடப்பவேற்றாரவுணருமடுபோர்செய்வார்

(இ - ள்.) தறுகண் வெம் பூதர் ஆனோர் - கொடுமையையுடைய பயங்கரரான பூதகணங்கள், தரை தட சிலை அது ஆக - பூமியே பெரிய அம்மிக்கல்லாகவும், வரை துணை அன்ன தாளே வலி கெழு குழவி ஆக - இரண்டு மலைகள் போன்ற [வலிய பெரிய] தங்கள்கால்களே வலிமைமிக்க குழவியாகவும், திரைத்து இழி குருதி நீர் ஆ - அலைமோதிக்கொண்டு பெருகுகின்ற இரத்தமே நீராகவும்(கொண்டு), தீர்ந்திடு திறலோர் யாக்கை அரைத்தென - இறந்துவிழ்ந்துகிடந்த அசுரவீரரது உடம்பை அரைத்தாற்போல, நடப்ப - (அதன்மேல்) நடக்க, வேற்றார் அவுணரும் - மற்றுமுள்ள அசுரர்களும், அடு போர் செய்வார் - (பகையை)அழிக்கும் போரைச் செய்வாராயினர்; (எ-று.)

பூதங்கள் அநேகஅசுரரை யழித்து இறந்துவிழ்ந்துகிடந்த அவர்களுடம்புகளைக் கால்களால் துவைத்துக்கொண்டே அவற்றின்மேல் நடந்துசெருவுக, வேறுமுள்ள அசுரர்கள் கொல்லுகைக்குப்போரைச் செய்யத்தொடங்கினர் என்பதாம். பூமி, கால், இரத்தம், மிதித்துத்துவைத்தல் என்பவற்றில், அம்மி, குழவி, நீர், அரைத்தல் என்பவற்றின் தன்மைகளை ஏற்றிக்கூறியதனால், உருவகவணி. இங்கே, யாக்கை, அரைக்கப்படுபொருளாம். நீர் பெய்து அரைத்தல், இயல்பு; ("காதல் நீரின், ஆவியை யுயிர்ப்பென்றோது மம்மியிட் டரைக்கின்றானை" என்றார் கம்பரும்.)

யாக்கை - (எலும்பு நரம்பு முதலியவற்றால்)யாக்கப்பட்டதெனக் காரணப்பெயர்; யா - பகுதி: யாத்தல் - கட்டுதல்; கு - சாரியை; ஐ - செயப்படுபொருள் விகுதி; இனி, 'கை' விகுதி பெற்ற தொழிலாகுபெயராகவும் இலக்கணங் கூறலாம். வேற்றார் - வேறாகவுள்ளவர்; 'வேறு' என்பதன்மேற் பிறந்த பலர்பாற்பெயர். வேல் தார் எனப் பிரித்து, வேற்படையையும் போர்மாலையையு முடைய என்றும், ஏற்றார் என்று எடுத்து, எதிர்த்து என்றும் உரைப்பினும் அமையும். அடு போர் - வினைத்தொகை. தறுகண் - அஞ்சத்தக்கனகண்டவிடத்தும் அஞ்சாமையுமாம். தரைத் தடம் சிலை அது ஆக என்றெடுத்து, பூமியினிடமே அம்மிக்கல்லாக என்று பதவுரைகூறலும் அமையும். 'தாளே' என்றதி லுள்ள பிரிநிலையேகாரத்தை 'தரை', 'குருதி' என்றவற்றோடுங் கூட்டுக. சிலை - கல்; இங்கு, இயைபுபற்றி, அம்மியைக் குறித்தது. அரைத்தற்கருவியாதற்கு ஏற்ப, 'வரைதுணையன்ன தாள்' என்று விசேடித்துக் கூறினர். குழவி - அரைத்தற்கருவி. அடுபோர் - மிஞ்சச் செய்தபோரினும் மிக்க போ ரென்றபடி. ஆ - ஆக: தொகுத்தல். (௪௮)

௪௯ தத்துறுபுரவித்திண்டேர்த்தானவர்நிகளத்தந்தி
பத்துநூறொன்றில்வீழப்பழுமரப்பணைகொண்டெற்றி
முத்தலையெஃகம்வீசிமுசலத்திற்புடைத்துமொய்ம்பாற்
குத்திநின்றுழக்கிப்பாய்ந்துகொன்றனர்பூதவீரர்

(இ - ள்.) பூத வீரர் - பூதசேனைவீரர்கள்.—தத்துறு புரவி திண் தேர் தானவர் - தாவிச்செல்லுகின்ற குதிரைகள் பூண்ட வலிய தேரையுடைய அசுரர்களது, நிகளம் தந்தி - சங்கிலியாற்கட்டத்தக்க மதயானைகள், ஒன்றில் பத்து நூறு வீழ - ஒவ்வோரடியிலும் ஆயிரக்கணக்காக ஒருங்கு கீழ் விழும்படி, பழு மரம் பணைகொண்டு எற்றி - ஆலமரக்கிளையைக்கொண்டு அடித்தும், முத் தலை எஃகம் வீசி - மூன்றுதலைகளையுடைய சூலாயுதத்தைச் செலுத்தியும், முசலத்தின் புடைத்து - இருப்புலக்கையால் தாக்கியும், மொய்ம்பால் குத்தி - கைகளாற் குத்தியும், நின்று உழக்கி - (மேலேறி) நின்று மிதித்துத்துவைத்தும், பாய்ந்து - (மேலே வேகமாகப்) பாய்ந்தும், கொன்றனர் - கொன்றார்கள்; (எ - று.)

தத்துறு, உறு - துணைவினை. தத்துதல் - தாவுதல், பாய்தல். பணைகொண்டு என்பதில், கொண்டு - மூன்றாம்வேற்றுமைச்சொல்லுருபு. முத்தலைஎஃகம் - முத்தலைவேல்; எனவே, சூலமாயிற்று. நிகளம். முசலம் - வடசொற்கள். நிகளம் - விலங்கு. தந்தி - தந்தீ என்னும் வடசொல் ஈறு இகரமானது; தந்தமுடையதென்று காரணப்பொருள். பத்துநூறு - பத்தாகிய நூறு எனப் பண்புத்தொகை; இங்கே, அநேகமென்ற பெருந்தொகையில் வந்தது. பழுமரம் - பழுத்தமரமெனப் பொருள்பட்டு, பழையதாய் நெடுங்காலம் நிற்பதான ஆலமரத்தைக் குறிக்கும்; இதற்கு 'தொன்மரம்' என்ற பெயரும் இருத்தல் காண்க. எஃகம், அம் - சாரியை. மொய்ம்பு - தோள்; இங்கே, இலக்கணையாய், கையைக் குறித்தது; "தோளூற்றோர்தெய்வம்" என்பதில் 'தோள்' என்பது போல. இனி, 'மொய்ம்பால்' என்பதற்கு - வலிமையோடு என்றும் உரைக்கலாம். (௪௯)

௫௰ விழுந்தனபடிவம்யாண்டும்விரிந்தனகவந்தமேன்மே
லெழுந்தனகுருதித்தாரையீர்த்தனசீதமாக
வழுந்தியவிறந்தோர்யாக்கையார்த்தனபறவைசெய்ய
கொழுந்தசைமிசைந்துநின்றுகுரவையாட்டயர்ந்தகூளி.

இது, பகைகளச்சிறப்பு.

(இ - ள்.) விழுந்தன - விழுந்திட்டனவாகிய, படிவம் - (பிராணிகளின்) உடம்புகள், யாண்டும் - எவ்விடங்களிலும், விரிந்தன - பரவியன; கவந்தம் - உடற்குறைகள், மேல் மேல் எழுந்தன - மேலேமேலே எழுந்து கூத்தாடின; குருதி தாரை - இரத்தப்பெருக்குக்கள், சீதம் ஆக - வெள்ளமாக, ஈர்த்தன - (அவற்றை) இழுத்தன; இறந்தோர் யாக்கை - இறந்தவரது உடம்புகள், அழுந்திய - (அவ்விரத்தவெள்ளத்தில்) மூழ்கின; பறவை - (அங்குப் பிணந்தின்னவந்த) பறவைகள், ஆர்த்தன - ஆரவாரித்தன; கூளி - பேய்கள், செய்ய கொழுந் தசை மிசைந்து நின்று - செந்நிறமுள்ள கொழுத்த இறைச்சிகளைப் புசித்து நின்று, குரவை ஆட்டு அயர்ந்த - (மகிழ்ச்சியால்) குரவைக் கூத்து ஆடின; (எ - று.)

தன்மைநவிற்சியணி. குரவை - கைகோத்தாடல்; "குரவைக்கூத்தே கைகோத்தாடல்" என்பதனால் அறிக. 'யாண்டும்' என்பதை எல்லாவற்றுக்கும் கூட்டுக. யாண்டு - யா என்னும் வினாவினடியாப்பிறந்து ஏழாம்வேற்றுமையிடப்பொருளுணர்நின்ற இடைச்சொல். கவந்தம் - கபந்த மென்ற

வடசொல்லின் திரிபு; இதற்கு - வடமொழிநிகண்டில், தொழிலுடன் கூடின தலையற்ற உட லென்று பொருள்கூறப்பட்டிருக்குமாறு அறிக. கோபாவேசத்தோடு விரைந்து போர்செய்து நின்ற வீரரது உடல்கள் பகைவரால் தலையறுபட்ட பின்பும் சிறிதுபொழுது கீழ்விழாது நின்றவாறே பதைபதைத்துக் கைகால்கள் துடிக்கு மியல்பை'கவந்தமேன்மேலெழுந்தன'எனக் குறித்தன ரென்க. இனி,"பேசொணாத வாயிரம்போ மடிந்தாற் பிறக்குங் கவந்தம்.பேசொணாத வாடும்.""ஆனையாயிரந் தேர்பதினாயிர மடர் பரி யொருகோடி, சேனைகாவல ராயிரம்பேர்படிற் செழுங்கவந்தமொன்றுமே", "அனேகமாயிரம்பேர்பட்க் கவந்தமொன்றுமே" என்றபடி சேனையில் அநேகம்பல அங்கங்கள் அழிந்தபொழுது ஒருகவந்தம் எழுந்தாடுமென்பதை இங்குக் குறித்ததாகவுங் கொள்ளலாம். அங்ஙனம் பலகவந்தங்கள் மேலும்மேலும் எழுந்து ஆடின வெனக.

பரப்பது, பறவை; ஐ - கருத்தாப்பொருள் விகுதி. [பரவை - கடல்.] தசை=சதை; எழுத்துநிலைமாறிய இலக்கணப்போலி. ஆட்டு - ஆடுதல்; ஆடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். அயர்ந்த - முற்று. அயர்தல் - செய்தல். விளையாடுதல். படிவம், கவந்தம், தாரை, யாக்கை, பறவை, கூளி என்பன - பால்பகா அஃறிணைப்பெயராதலால், பன்மைமுற்றுக் கொண்டன. 'செய்யகொழுந்தசைமிசைந்துநின்ற' என்பதை மத்திமதீபமாக 'பறவையார்த்தன' என்றதற்குங் கூட்டலாம். குருதித்தாரைகள் வெள்ளமாய்ப்பெருகி அழுந்திக்கிடந்த இறந்தோர்யாக்கைகளை யிழுத்தன வென்றுரைப்பாரு முளர் முந்தினபொருளில 'அழுந்திய' என்றது - பலவின்பால்முற்று; இவ்வுரையில், பெயரெச்சம். தாரை - தாரா என்ற வடசொல்லின் விகாரம்.

"தெண்டிரைகடைந்த விருசேனையு மெதிர்ந்தே, மண்படைசிந்தியமர் வல்லைபுரிபோதிற, சண்டகு தானவர்கள் சாரதர்க டமா, லெண்டிற விழுந்து தொலைவுற்றனாக ளன்றே" என்பது. கந்தபுராணச்சுருக்கம்.(௫0)

௫௧ கண்டனனிணையதன்மைதாரகன்கடியசீற்றங்
கொண்டனன்வையநீங்கிக்குவலயமிசைககுப்புற்றுத
தண்டமொன்றெடுததுபூதபபடையினைததரையில்வீட்டி
யண்டமுங்குலுங்கவார்த்திட்டடிகளாலுழககிச்சென்றான்

(இ - ள்.) இனைய தன்மை - இவ்வாறான தன்மையை, கண்டனன் - பார்த்து, தாரகன்—, கடிய சீற்றம் கொண்டனன் - கடுங்கோபமடைந்தவனாய், வையம் நீங்கி - (தனது) தேரை விட்டு, குவலயம்மிசை குப்புற்று - தரையிற் குதித்து, தண்டம் ஒன்று எடுத்து - ஒப்பற்ற (தனது) கதாயுதமொன்றைக் கையிலெடுத்து, (அதனால் அடித்து), பூதம் படையினை தரையில் வீட்டி - பூதசேனையைப் பூமியிலே விழும்படி தள்ளி, அண்டமும் குலுங்க ஆர்த்திட்டு - அண்டகோளமுழுவதும் நடுங்கும்படி ஆரவாரித்து, அடிகளால் உழக்கி - கால்களால் (அச்சேனையை)மிதித்துத்துவைத்துக் கொண்டு, சென்றான் - எதிர்த்துப்போயினான்; (எ - று.)

இனையதன்மை-பூதசேனையால் அசுரசேனை பெரும்பாலும்அழிந்தமை. குவலயம் - வடசொல; கு - பூமி, வலயம் - மண்டலம். வீட்டி-'வீழ்த்தி' என்பதன் மரூஉ. கடிய - கடுமையென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம. வையம - தேர். இசசொல்லுக்குப் பூமியென்றும் ஒருபொருளிருத்தலால், சொறபோக்கில் ஒருவகை முரண்தோன்றுமாறு'வையநீங்கிக் குவலயமிசைக்குப்புற்று' என சமத்காரமாகக்கூறினர். குப்புற்று,குப்புறு- பகுதி; அது.இடையே ஒற்றுஇரட்டி இறந்தகாலங் காட்டிற்று. தாா என்ற

வடசொல் - ஆவீறுயாயிற்று: அது - (பொருள்களைத்) தரிப்பது என்று பொருள்படும். (ருக)

ருஉ அல்லெனப்பட்டமேனியவுணர்க்கரசன்கையிற்
கல்லெனப்பட்டதண்டாற்புடைத்தலுமாகங்கள்சென்னி
பல்லெனப்பட்டசிந்திப்பாய்புனலொழுக்கிற்சாய்ந்த
புல்லெனப்பட்டவம்மாபூதர்தஞ்சேனையெல்லாம்.

(இ - ள்.) அல் எனப்பட்ட மேனி - ஒப்புமைபற்றி இருளென்று சொல்லப்படுகின்ற [மிகக்கரிய] உடம்பையுடைய, அவுணர்கட்கு அரசன் - அசுரர்கட்குத்தலைவனாகிய தாரகன், கையில் - தனகைப்பிடியில் எடுத்த, கல் எனப்பட்ட தண்டால் - மலையென்று சொல்லப்படுகின்ற [வலிய பெரிய] கதாயுதத்தால்,புடைத்தலும் - அடித்தவளவிலே,—பூதர்தம் சேனை எல்லாம் - பூதகணங்களெல்லாம்,—அகங்கள் சென்னி பல் எனப்பட்ட சிந்தி - கைகளும் தலைகளும் பற்களும் என்றுசொல்லப்பட்ட உறுப்புகள் சிதறுண்டு,—பாய் புனல் ஒழுக்கின் சாய்ந்த புல் எனப்பட்ட - விரைந்துவருகின்ற நீரோட்டத்தால் தலைசாய்ந்த புற்களென்று உவமை சொல்லும்படியாய்விட்டன; அம்மா - ஆச்சரியம்! (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல்; கீழ் மிக்கதிறமையோடு மிகப்பலஅசுர சேனையை எளிதிலழித்த பூதகணங்கள், தாரகாசுரனொருவன் தண்டு கொண்டு புடைத்தமாத்திரத்தில், நீரோட்டத்தில் தலைசாய்ந்த பசும்புற் கள்போலக் கீழ்விழுந்திட்டன என்று, அவ்வசுரனது திறமையை வியந்து கொண்டாடியவாறு. நீர்வெள்ளத்தில தலைசாய்ந்த பசும்புற்கள் அவ்வெள் ளம்தணிந்தபின் மீண்டுந் தலைநிமிர்ந்து எழுதல்போல, இப்பூதசேனைகளும் பின்பு எழுதலாலும், இவ்வுவமை ஏற்குமாறு காண்க. 'அம்மா' என்பதை 'அ மா' எனப்பிரித்து, இருசொல்லாக்கொண்டு, அந்தப் பெரிய என்று பூதகணத்துக்கு அடைமொழியாக்கலும் பொருந்தும்.

இப்பாட்டில் அடிதோறும் உள்ள 'எனப்பட்ட'என்னுஞ் சொற்களுள், முந்தின இரண்டும் - பெயரெச்சமும், மூன்றாவது - பலவின்பால்வினையா லணையும்பெயரும், நான்காவது - பலவின்பால முற்றுமாம் 'எனப்பட்டதம்மா' என்ற பாடத்துக்கு, சேனையைச் சாதியொருமையாகக் கொள்க. கல்லெனப்பட்ட - மலைபோன்ற என்றபடி. தண்டு-தண்ட மென்ற வடசொல்லின் விகாரம். ஒழுக்கு - ஒழுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

ருரு. பிடித்திடுவயிரத்தண்டம்பெருங்கடற்பூதவெள்ள
முடித்திடல்புகழோவன்றாற்றாரகமொய்ம்பின்மேலோ
னடித்திடுங்காலைகீண்டதம்புவியடிப்பானோங்கி
யெடுத்திடுங்காலைகீண்டதெண்டிசையண்டச்சூழல்

(இ - ள்.) தாரகன் மொய்ம்பின் மேலோன்-தாரகனென்கிற வலிமை யில் மேம்பட்டவனான அசுரன், பிடித்திடு வயிரம் தண்டம்-கையிலெடுத்த வைரம்பொருந்திய தண்டாயுதத்தால்,அடித்திடும் காலை-அடித்தகாலத்தில். அம்புவி-அழகிய பூலோகம், கீண்டது-பிளவுபட்டது; அடிப்பான் ஓங்கி எடுத்திடும் காலை - அடிக்கும்பொருட்டு உயரத்தூக்கியகாலத்தில், (அது மேற்படுதலால்), எண் திசை அண்டம் சூழல் - எட்டுத்திக்குக்களிலுமுள்ள அண்டத்தின் இடம்முழுவதும், கீண்டது - பிளவுபட்டது; (என்றால், அவ்வாயுதம்),பெருங் கடல் பூதம் வெள்ளம் முடித்திடல் - பெரியகடலபோல மிகப் பரந்துள்ள பூதகணங்களை அழித்தல்,புகழோ-ஒருகீர்த்தியாகுமோ? அன்று-ஆகாது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

அவன் கதையை உயர எடுத்தமாத்திரத்தில் அதுபட்டு அண்டகோளத்தின்மேலிடங்களும், அவன் கதையாலடிக்கும்பொழுது அதனதிர்ச்சியாற் பூலோகமும் பிளந்தன வென்றால், அது பூதகணங்களை யழித்தல் புகழ்ந்து கொண்டாடத்தக்கதோர் அரியசெயலாமோ' என்பதாம். இங்ஙனம் தாரகனது கதாயுதத்தின்சிறப்பைத் தண்டாபூபிகாநியாயத்தால் விளங்கவைத்ததனால், தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி; [காவ்யார்த்தாபத்தியலங்காரம்.]

"சிலவிகாரமா முயர்திணை" என்பதனால், தாரகனென்பதன் ஈற்று னகரம் கெட்டது. ஓங்கி - ஓங்க: எச்சத்திரிபு. 'புகழ்வோ', ஓ - எதிர்மறை; இதனால், புகழன்று என்பது பெறப்படவும், மீண்டும் 'அன்று' என்றது, வற்புறுத்தற்பொருட் டென்க; இதனை, "எளம்படவேண்டாதார் யார் யாருமில்லை", "முனிவர்சொற பொய்க்குமோ பொய்யாதே", "உண்டோ வுணர்ச்சி மற்றிலலாகும்" என்பனபோலக் கொள்க. வயிரம்-உறுதிமிகுதி; இனி, வயிரத்தண்டம - இந்திரனது வச்சிராயுதம்போன்ற கதாயுதமும், வச்சிராத்தினமயமான கதாயுதமுமாம். புவி - வடசொல்; இது, அந்தப்பாஷையில் ஏழாமவேற்றுமைவிரியாயினும, தமிழிற் பெயர்மாத்திரமாய்நின்று உருபுகளையெல்லாம் ஏற்கும். அடிப்பான் - 'பான்' விகுதிபெற்ற எதிர்கால வினையெச்சம். கீண்டது. கீள் - பகுதி. (௩௩)

௩௪. தாரிடங்கொண்டமார்பத்தாரகன்வயிரத்தண்டம்
போரிடங்கொண்டோர்சென்னிபுயமுரங்கரங்கள்சிந்திக்
காருடங்கண்டபாந்தட்கணமெனத்துடிப்பவீட்டிப்
பாரிடந்தன்னையெல்லாம்பாரிடமாக்கிற்றம்மா

(இ - ள்.) தார் இடம் கொண்ட மார்பம்-போர்மாலையைத் தன்னிடத்தேகொண்ட [தரித்த] மார்பையுடைய. தாரகன் - தாரகாசுரனது, வயிரம் தண்டம் - வைரம்பொருந்திய தண்டாயுதமானது;—போர் இடம் கொண்டோர் - யுத்தகளத்தை இடமாகக்கொண்டு நின்ற பூதர்களது, சென்னி - தலையையும, புயம் - தோள்களையும், உரம - மார்பையும், கரங்கள் - கைகளையும், சிந்தி - அடித்துச்சிதறி,—காருடம் கண்ட பாந்தள் கணம் எனத் துடிப்ப வீட்டி - கருடவடிவத்தைக் கண்ட பாம்புகளின் கூட்டம்போலத் (தன்னைக்கண்டவளவில அப்பூதகணங்கள்) துடிக்கும்படி வீழ்த்தி, பாரிடந்தன்னை எல்லாம் பார் இடம் ஆககிற்று-அப்பூதகணத்தையெல்லாம் தரையினிடத்திலேயாகும்படி செய்தது [கீழே தள்ளிற்று என்றபடி]; (எ - று.)— அம்மா - வியப்பிடைச்சொல்.

'பாரிடம்' என்பது - ஒருசொல்லாய்ப் பூதகணத்தையும், பார் இடம் எனப் பிரிந்து பூமியினிடத்தையுங் குறித்தலால,சமத்காரந்தோன்ற, 'பாரிடந்தன்னையெல்லாம் பாரிடமாக்கிற்று' என்றார். 'அம்மா' என்றது, இவ் வதிசயத்தை விளக்க வந்ததே. இதில்,மேல்நோக்காப் பார்க்குமிடத்து,பாரிடத்தைப்பாரிடமாக்கிற்று எனப் பொருத்தமில்லாத தொரு பொருள் தோன்றி அப்பொருள்முரண் 'பாரிடம்' என்பதன் சிலேடைக்கருத்தை நோக்குமிடத்து நீங்குதலால், இது, முரண்விளைந்தழிவணி [விரோதாபாஸாலங்காரம்.] இனி,முன்னமே பாரிடமென்று ஒருபெயர்பெற்றிருந்த பூதகணத்தை இப்பொழுது பாரினிடத்தில் தள்ளியதனால் பாரிடமென்னும் பெயராதாமபடி செய்தது தென நிருக்தியலங்காரத்தின்போக்குத் தோன்ற உரைகூறினும் அமையும்; (பெயர்ச்சொல்லுக்கு உறுப்பாற்றலால் மற்றொருபொருளைத் தந்துரைத்தல், நிருக்தியலங்காரத்தின் இலக்கணம்; அது, தமிழில் 'பிரிநிலைநவிற்சியணி' எனப்படும்.) இனி, நான்காமடிக்கு - போர்க்களத்தி

னிடம்முழுவதையும் பூதகணமயமாக்கிவிட்டது என்று உரைத்தலும் ஒன்று. 'பாரிடந்தன்னையெல்லாம் பாரிட மாக்கிற்று' என்ற தொடரில் தோய்பின்வருநிலை' என்னும் பொருளணியும், 'மடக்கு' [யமகம்] என்னுஞ் சொல்லணியும் இருத்தல் காண்லாம்.

புஜம், காருடம், கணம் - வடசொற்கள். உரம் - உரஸ் என்னும் வடசொல் திரிந்தது. காருடம் - கருடசம்பந்தமானது; தத்திராந்தாமம் கருடனைக் கண்ட பாம்பு அஞ்சி கடுங்கித் துடித்து அழிதல், பிரசித்தம். காருடம் - கருடாஸ்திரமென்றும் உரைக்கலாம். ஈட்டி எனப் பதம்பிரித்து, செய்து என உரைத்தலும் ஒன்று மார்பம, அம சாரியை (௩௪)

௩௫ அன்றரிவிடுத்தவாழியாரமாவணிந்ததீயோன்
கொன்றனனனிகமென்னுங்கொள்கையுமவன்மேற்செல்லும்
வன்றிறறம்பாலில்லாவண்ணமுமதித்துநோக்கி
நின்றிலர்பூதர்வேந்தர்நெஞ்சழிந்துடைந்துபோனார்

(இ-ள்.) அன்று - அக்காலத்தில் [முனபு ஒருகாலத்தில்], அரி விடுத்த - திருமால் செலுத்திய, ஆழி - சக்கராயுதத்தை, ஆரம் ஆ அணிந்த - மாலையாகத்தரித்திட்ட, தீயோன் - கொடியவனுன தாரகாசுரன், அனிகம் - (தங்கள) சேனைகளை, கொன்றனன் - அழித்துவிட்டான், என்னும் கொள்கையும் - என்ற செய்கையையும, அவன்மேல் செல்லும் வல்திறல - அவன்மேல் எதிர்த்துசசென்று போர்புரியத்தக்க மிக்கவலிமை, தம்பால் இல்லா வண்ணமும் - தமகளிடத்திலில்லாத தன்மையையும், மதித்து நோக்கி - ஆலோசித்துப்பார்த்து, பூதா வேந்தர் - பூதகணத்தலைவாகள், நெஞ்சு அழிந்து - மனவுறுதிகெட்டு, நின்றிலர் - அங்கு எதிர் நிற்கவும் மாட்டாதவராய், உடைந்து போனார் - தோற்றோடிப்போய் விட்டார்கள்; (எ - று)

தமது பெருஞ்சேனைமுழுவதையும் அவன் எளிதில் அழித்த திறமையை நோக்கி அதனலை அர்த்தமகாவீரனேடு எதிர்த்துப்போர்செய்யத்தக்க ஆற்றல் தமக்குஇல்லாமையை யுணர்ந்து அஞ்சிச் சிதறியோடினரென்க.

அன்றரிவிடுத்தவாழி யாரமாவணிந்த தீயோன்—"அதுதனைநோக்கி மாலு மாழியம்படையையுய்த்தான்," "ஓரிமையொடுங்குமுன்னருலகெலாந் தொலைக்குந்தன்மைப், போரயினேமிதானும் புராரிதன்வரத்தாற்சென்று, தாரகவசுரன்கண்டந்தன்னை வந்தணுகிச செம்பொ, ஞரமதாயிற்றம்மா தவத்தினுமாக்கமுண்டோ" என்ற மேல் அசுரகாண்டத்தில் திக்குவிசயப் படலத்தில் வருதல் காண்க. அரி - ஹரி. (அசுரர்முதலிய பகைவர்களை) அழிப்பவன், அல்லது (தனது அடியார்களின் துன்பங்களை) அழிப்பவன். அழிப்பது ஆழி யெனக்காரணக்குறி; வட்டவடிவுடையதென்றும் இதற்குப் பொருள்கூறலாம். வல், திறல் - ஒருபொருட்பன்மொழி. ஹாரம், அநீகம் என்னும் வடசொற்கள், திரிந்தன. கொள்கை - எண்ணமுமாம். நெஞ்சு - இங்கே, மனத்தின் தைரியத்துக்கு, ஆகுபெயராம். (௩௫)

௩௬ திண்கணநிரையின்வேந்தர்சிந்துழிசசீற்றந்தூண்ட
வெண்கணமாகியுள்ளவிலக்கருஞ்சிலைகாலூன்றி
மண்கணைமுழுவம்விம்மவயிரெழுந்திசைப்பவாங்கி
யொண்கணைமாரிதூவியவுணனையொல்லைசூழ்ந்தார்

(இ - ள்.) (இவ்வாறு), திண் கணம் நிரையின் வேந்தர் - வலிய பூதகணங்களின் தலைவர்கள், சிந்து உழி - சிதறிப்போனவளவில்,—சீற்றம் தூண்ட-

கோபம் மிக்குச்செலுத்த, எண் கணம் ஆகி உள்ள இலக்கரும் - மதிக்கத்தக்க கூட்டமாயுள்ள லக்ஷம்வீரர்களும், சிலை கால் ஊன்றி - வில்லைக் கழுத்திற்பிடித்துக் கையிலெடுத்து, மண் கலை முழவம் விம்ம - மார்ச்சனைமண் பூசிய திரண்டபேரிகைகள் முழங்கவும், ஆயிர் எழுந்து இசைப்ப-ஊதுகொம்புகள் மிக்கவொலிக்கவும், பாகில் - (அயவில்லை) வளைத்து, ஒள் கணை மாரி தூவி - ஒளியுள்ள அம்புகளை மழைபோலச்சொரிந்துகொண்டு, அவுணனை - அந்தாரகாசுரனை, ஒல்லை சூழ்ந்தார் - விரைவிற் சுற்றிக்கொண்டார்கள்; (எ - று.)

இலக்கம்வீரர் - முருகக்கடவுளின் தம்பிமார். கணம் - பூதம், தொகுதி. சிலை கால் ஊன்றுதல் - வில்லின் தண்டத்தைக் கையிற்பிடித்தல். மண் - அடிக்குமிடத்தைப் பண்படுத்தல்; இனி, இதற்கு - முழவின்வாயவாரென்றும் பொருளுண்டு. முழா என்னும் குறியதன் கீழ் ஆ, குறுகி, 'அம்' சாரியை பெற்று, முழவம் என நின்றது. முழவமென்னும் மத்தளத்தின் பெயர், இங்கே, வாத்தியப்பொதுவாய் நின்றது. விம்ம. விம்மு - பகுதி. கணை மாரி - பாணவர்ஷம். சிலையின் கால் - தனுர்த்தண்டம். சிலை காலூன்றி வாங்கி என இயைத்து, வில்லின் இருகோடிகளுள் ஒருகோடியைக் கால்விரலாலூன்றி மற்றொருகோடியைக் கையாற்பிடித்திழுத்து வளைத்து எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. எண்கணமாகியுள்ள என்பது, எட்டு வகுப்பாகப் பிரிந்துள்ள என்றும் பொருள்படும். ஒல்லை - விரைவுணர்த்தும் இடைச்சொல்.

"வாரணமுகத் தவுணர்மன்ன னிதுகண்டே, தேரினு மிறங்கி யொரு திண்கதை பிடித்தே, பாரிடர்கள் பாரிடை பதைப்புற வதைப்ப, வேருற மிலக்கரு மெதிர்ந்து சமர்செய்தார்" என்பது, கந்தபுராணச்சுருக்கம். ()

௫௭. சூழ்ந்தனர் துரந்தவாளி தோன்முகத் தவுணன்யாக்கை
போழ்ந்தில வூறுதேனும் புணர்த்தில புன்மையாகித்
தாழ்ந்திடு நீரபின் மேலோ னொருமகன் றலைமை தாங்கி
வாழ்ந்தவர் தமக்குச் சொல்லுஞ் சொல்லென வறிது மீண்ட.

(இ - ள்.) சூழ்ந்தனர் - (இவ்வாறு இலக்கம்வீரர்கள்) சூழ்ந்துகொண்டு, துரந்த - பிரயோகித்த, வாளி - அம்புகள்,—தோல் முகத்து அவுணன் யாக்கை - யானைமுகத்தையுடைய அந்தத்தாரகாசுரனது உடம்பை, போழ்ந்தில - பிளக்கமாட்டாதனவாய், ஊறு தான் எனும் புணர்த்தில - சிறிதுதழும்பு படுத்தலேனுஞ் செய்யமாட்டாதனவாய், புன்மை ஆகி - எளிமைப்பட்டு,— தாழ்ந்திடு நீரபின் மேலோன் ஒரு மகன் - இழிந்ததன்மையதான வறுமையில் மிக்கவனான ஒருமனிதன், தலைமை தாங்கி வாழ்ந்தவர்தமக்கு - (செல்வம்முதலியவற்றால்) தலைமை பூண்டு வாழ்வடைந்திருக்கின்றவர்களுக்கு, சொல்லும் - சொல்லுகின்ற, சொல் என - சொற்கள்போல, வறிது மீண்ட - (சிறிதும் பயன்பெறாது) வீணே திரும்பின; (எ - று.)

வறியவர்சொல் செல்வரிடத்துச் சென்று சிறிதும் பயன்பெறாமையாகிய உலகவியல்பு, பிரசித்தம்; "நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார், சொற்பொருள் சோர்வு படும்" என்ற திருக்குறளையுங் காண்க: 'ஏழைசொல் அம்பல மேறாது' என்பது, பழமொழி. வறிஞர்கூறியசொல் நன்மொழியாயினும் செல்வரிடஞ்செல்லாமைபோல, இலக்கரேவியஅம்புகள் கூரியனவாயினும் தவவலிமையாற்பெற்ற வரபலத்தாலாகிய சரீரபலத்தையுடைய தாரகனது உடம்பிற் செல்லமாட்டாவாயின வென்க. போழ்ந்தில, புணர்த்தில - எதிர்மறை யிறந்தகாலப் பலவின்பால் முற்றெச்சங்கள். ஊறுபுணர்த்தல் - பட்ட அடையாளந் தோன்றச் செய்தல். எல்லாப்

பொருள்களும் நிரம்பியிருத்தலைக்குறிக்கின்ற 'நிரப்பு' என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். எதிர்மறையிலக்கணையால், செல்வஞ் சிறிதுமில்லாமையைக் குறிக்குமென இலக்கணங் காண்க: புன்மையாகி மீண்ட என இயையும். மீண்ட - முற்று. புன்மையாகித் தாழ்ந்திடு நிரப்பின்மேலோன் என இயைத்து, அற்பத்தன்மைகொண்டு தாழ்வுகொண்ட வறுமைமிக்கானென்றும் பொருள்கொள்ளலாம். உவமையணி. (ருஎ)

ருஅ தரைபடப்புகழ்வைத்துள்ள தாரகன் றடமார்பத்தைப்
புரைபடச்செய்திடாது பொள்ளெனப்பட்டுமீண்டு
நிரைபடத்திறலோருய்த்த நெடுங்கணையான வெல்லாம்
வரைபடச்சிதறுங்கல்லின்மாரிபோலான வன்றே

(இ - ள்) திறலோர் - வலிமையையுடையவர்களான லக்ஷ்மவீரர்கள், நிரை பட - வரிசையாக, உய்த்த - மேன்மேற்செலுத்திய, நெடுங் கணை ஆன எல்லாம் - நீண்ட அம்புகள் யாவும்,—தரை பட புகழ் வைத்துள்ள தாரகன் தட மார்பத்தை - உலகமுழுவதும் பரவும்படி கீர்த்தியைச் சம்பாதித்து நிலைநிறுத்தியுள்ள தாரகாசுரனது பெரிய மார்பை, புரை பட செய்திடாது - துளையாகும்படி செய்யமாட்டாமல், பொள்ளென பட்டு மீண்டு - விரைவாக (அவனுடம்பிலே) பட்டு உடனே திரும்பி, வரை பட சிதறும் கல்லின் மாரி போல ஆன - மலையின்மீதுபட்டு அதனால் சிதறுகின்ற கல்மழையைப்போலாயின; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

மற்றைய இடங்களிற் பெய்தால் அவ்விடங்களை யழிக்கவல்ல கல்மழை மலையின்மேற்பெய்தால் அம்மலையை யாதொரு பாடுஞ் செய்யமாட்டாது சிதறியொழிதல்போல, மற்றையோர்மீது பட்டமாத்திரத்தில் அவருடலைத் துளைக்கவல்ல இலக்ஷ்மவீரரது கூரிய அம்புகள் தாரகனது வலியமார்பைத் துளைத்துச் சிறிதும் ஊறுபடுத்தமாட்டாமல் அதன்மேற்பட்டமாத்திரத்தில் தடைப்பட்டு மீண்டிட்டன என்பதாம். உவமையணி. (வில்லிபுத்தூரார்பாரதத்துப் பதினான்காம்போர்ச்சருக்கத்தில் "விசயனறனது திருமகக்கணையனந்த நிலையொன்றின் முனைமிசை விட்டனன் விடுத்தபொழுதத்து வீரன், மாமணிக்கவசமெனுங்குடமொன்றி யொருமால்வரைப்புயலினுண்டுளிவிழுந்தபரி, சாமெனத் தலைமழுங்கி யவையொன்றுமவனுக்குமுற்றில வசைந்திலனசஞ்சலனே" என்றதை, இங்கு ஒப்புநோக்குக.) கல்லின் மாரி - சிலாவர்ஷம்.

'தரைபடப்புகழ்வைத்துள்ள' என்பதற்கு - உலகமழியும்படி கீர்த்தி பெற்றுள்ள என்றும் உரைக்கலாம். இங்கே, 'புகழ்' என்றது, கொடுமையாலும் யாவரையும் எதிர்த்து அழித்தலாலுமாகிய பிரசித்திமாத்திரத்தைக் குறிக்கும். பொள்ளெனல்-விரைவுக்குறிப்பு. 'கணையான' என்பதில், 'ஆன' என்பது-பலவின்பாற்பெயராய், முதல்வேற்றுமைச் சொல்லுருபாம். 'மாரி போலான' என்றதில், ஆன - முற்று. (ருஅ)

ருகூ. விடுகணைமாரியாவுமீண்டிடவெகுண்டுவிண்ணோர்
படைமுறைவழங்கிநிற்பப்பதகன்மேலவைகளெய்தா
வுடையதமவலியுஞ்சிந்தியொல்லெனமறிந்துசெல்லக்
கடவுளர்தனைநோக்கிக்கரங்குலைத்திரங்கலுற்றார்.

(இ - ள்.) (இலக்ஷ்மவீரர்கள்), விடு கணை மாரி யாவும - தாம் பிரயோகித்த அம்புமழைகளெல்லாம், மீண்டிட - (அவனுடம்பில் ஊறுசெய்யாமல்) திரும்பிவிட, (அதுகண்டு), வெகுண்டு-கோபங்கொண்டு, விண்ணோர் படை-தெய்வப்படைக்கலங்களை [தேவாஸ்திரங்களை], முறை வழங்கி நிற்ப - ஒன்றன்பின்ஒன்றாக வரிசைப்படப் பிரயோகிக்க, அவைகள் - அந்தத் தெய்வா

ஸ்திரங்களும், பதகன்மேல் - பாவத்தொழிலுடையவனான அவ்வசுரன் மீது, எய்தா - பாய்ந்துசெல்லமாட்டாமல், உடைய தம் வலியும் சிந்தி - தாம் உடையனவான வலிமைகளும் அழிந்து, ஒல்லென - விரைவாக, மறிந்து செல்ல - திரும்பிவந்திட, கடவுளர் - (அந்தந்தஅஸ்திரத்திற்குஉரியவர்களான) தேவர்கள், அதனை நோக்கி - அத்தன்மையைப்பார்த்து, கரம் குலைத்து இரங்கல் உற்றார் - கைகளைப்பிசைந்துகொண்டு வருத்தமடைந்தார்கள்.

எய்தா என்பது - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சமாகவாவது, பலவின்பால் எதிர்மறைமுற்றெச்சமாகவாவது கொள்ளத்தக்கது; உடன்பாட்டிறந்தகாலவினையெச்சமாக்கி, எய்தி யென்று உரைப்பாருமுளர். கரங்குலைத்து - கைநடுங்கி யெனினுமாம். மழைபோல மிகுதியாகசசொரிந்ததனால், 'கணைமாரி' எனப்பட்டது; உருவகம். தம் பக்கத்தவரான இலக்கம வீரர்களின் படைக்கலங்கள் பயன்படாமையைச் சிந்தித்த தேவர்கள் கைகுலைத்து இரங்கினர். 'உடைய தம்வலியுஞ் சிந்தி' என்றவிடத்து, உம்மை - பகைவனது வலிமையைச் சிந்தாமையை விளக்கிநின்றது. உடைய - குறிப்புப்பெயரெச்சம்; ஆறும்வேற்றுமைச்சொல்லுருபாக்கி, தம்முடைய என மாறுதலுமாம். (௫௯)

௬0 மற்றதுகாலைதன்னில்வலியினான்வயிரத்தண்டஞ்
சுற்றினன்றற்சூழ்கின்றசுடாமணிக்கடுமான்றேர்க
ளொற்றினன்புழைக்கைநீட்டியிலக்கர்தந்தொகையும்வாரிப்
பொற்றனுவோடும்வீழப்புணரியின்மீதுவிட்டான்.

(இ - ள்.) அதுகாலைதன்னில் - அப்பொழுது,—வலியினான் - வலிமையையுடையவனான தாரகாசுரன்—வயிரம் தண்டம் சுற்றினன் - வைரம் பொருந்திய தனது தண்டாயுதத்தைச் சுழற்றி, தன் சூழ்கின்ற சுடர் மணி கடு மான் தேர்கள் - தன்னைச்சூழ்ந்திருக்கின்றவையும் ஒளியுள்ளஇரத்தினங்கள்பதிக்கப்பெற்றவையும் விரைந்தகுதிரைகள்பூட்டியவையுமான (இலக்கம் வீரரது) தேர்களை, ஒற்றினன் - தாக்கி,—புழை கை நீட்டி - துளையையுடைய (தனது) துதிக்கையை நீட்டி, இலக்கர்தம் தொகையும் வாரி - இலக்கவீரர்கூட்டமுழுவதையும் ஒருசேர எடுத்து, பொன் தனுவோடும் வீழ - (அவரவர் கையிற்பிடித்த) அழகிய வில்லுடனே விழும்படி, புணரியின்மீது விட்டான் - கடலிலெறிந்தான்; (எ - று.)—மற்று - அசை.

கடு - கடுமை யென்னும் பண்பினடி; 'கடி' என்னும் உரிச்சொல்திரிபென்றலும் உண்டு. தாரகாசுரன் யானைமுகத்தவனாதலால், 'புழைக்கை' கூறப்பட்டது. தனு - தநுஸ் என்ற வடசொல்லின் விகாரம். புணரி - (நதிகளோடு) புணர்வதெனக் காரணப்பெயர்; நதிகளாகிய பெண்களுக்குக் கடலைக் கணவனென்றல்,மரபு. இதனை, 'நதிபதி' என்னும் கடலின்பெயராலும் உணர்க. புணர்-பகுதி, இ-கருத்தாப்பொருள்விகுதி. தற்சூழ்கின்ற. சுடர்மணி, கடுமான் என்ற மூன்றும் - தேர்க்கு அடைமொழிகள். வலியினான்-வலிமையினால் எனினுமாம்; இங்ஙனங்கொண்டால், இச்செய்யுளுக்கு எழுவாய் வருவித்தல்வேண்டும். முந்தினபொருளில், 'வலியினான்' என்பது - பெயர்; இப்பொருளில், மூன்றும்வேற்றுமைவிரி. மான், ன்-சாரியை; "ஆ மா கோ னவ்வணையவும் பெறுமே." (௬0)

௬௧ துளும்பியவுளக்கர்தன்னிற்சூழுறநின்றதெங்கின்
வளம்படுபழுக்காய்வர்க்கமாருதமெறியச்சிந்திக்
குளம்புகுதன்மையென்னவீழ்தருகொற்றவீர
ரிளம்பிறைபுரையும்வில்லோடெழுந்தொருபுடையிற்போனார்.

(இ - ள்.) சூழுற நின்ற - சுற்றிலும் நிற்கின்ற, தெங்கின் - தென்னை மரங்களின், வளம் படு பழுக்காய் வர்க்கம் - செழிப்பமைந்த முதிர்ந்த காய்களின் தொகுதி, மாருதம் எறிய - காற்றுவீசுதலால், சிந்தி - உதிர்ந்துசிதறி, குளம் புகு தன்மை என்ன - குளத்தில் விழுகின்ற தன்மைபோல, துளும்பிய அளக்கர்தன்னில் - அலைவீசப்பெற்ற கடலில், வீழ்தரு - விழுந்த, கொற்றம் வீரர் - வெற்றியையுடைய இலக்கவீரர்கள், இளம் பிறை புரையும் வில்லோடு - இளம்பிறைச்சந்திரனையொத்த [வளைந்த] (தம்தம்) வில்லுடனே, எழுந்து - (அக்கடலினின்று) எழுந்து, ஒருபுடையில் போனார் - ஒருபக்கத்தில் விலகிச் சென்றார்கள்; (எ - று.)

ஒருகுளத்தைச்சுற்றிலுமுள்ள தென்னைமரங்களில் முற்றிய காய்களை காற்றுவீசுதலால் உதிர்ந்து அக்குளத்தில் விழுவதுபோல, தேர்களிலிருந்த இலக்கம்வீரர்கள் அத்தாரகாசுரன் தங்கையாலெடுத்துவீசுதலாற் கடலில்விழுந்தன ரென்பதாம். உவமையணி. தென்னைமரங்கள் - தேர்களுக்கும், அவற்றின் முதிர்ந்தகாய்கள் - அத்தேர்களிலுள்ள சிறந்தவீரர்களுக்கும், காற்று - தாரகாசுரனுக்கும், அதுவீசுதல - அவன் தங்கையாலெடுத்து வீசுதற்கும, குளம் - கடலுக்கும உவமை யெனக் காண்க. அளக்கர்தன்னில் வீழ்தரு என இயையும். சூழுற நின்ற - ஒருகுளத்தைச்சுற்றிலும் கரையில் மிகுதியாக வளர்ந்துநின்ற. பழுக்காய - பழுத்தலையுடையகாய் என இரண்டனுருபும்பயனுந்தொக்கதொகை. பழு = பழுத்தல்; முதனிலைத்தொழிற்பெயர் யாக்கம. மாருதம் - வடசொற்கள 'அளக்கா'என்ற சொல்லுக்கு - அளக்கஅரு என்றதன் விகார மெனக்கொண்டு, அளத்தற்குஅரியது என்று காரணப்பொருள் கூறலாம். இங்கே 'கொற்றவீரர்' என்றது, முன்பு பல போர்களில் வெற்றியையுடையராயிருந்த வீர ரென்றபடி; இகழ்ச்சியுமாம்.

௬௨ கொற்றவி லுழவன் வீரகோளரி யதனைநோக்கிச்
செற்றமொடேகிச்செவ்வேள் சேவடிமனத்துட்கொண்டு
பற்றிய தனுவைவாங்கிப்பகழி நூறுய்த்துத்தீயோன்
பொற்றடமுவலி தள்ளிப்புணரியுநாணவார்த்தான்

(இ - ள்.) (அவ்வாறானவளவில்), கொற்றம் வில் உழவன் - வெற்றியையுடைய வில்லின்வீரனான, வீர கோளரி - வீரகேசரியென்பவன், — அதனை நோக்கி - (இலக்கவீரர் கடலில் விழுந்து எழுந்துசென்ற) அத்தன்மையைப் பார்த்து, செற்றமொடு ஏகி - கோபத்தோடு சென்று, செவ் வேள் சே அடி மனத்துள் கொண்டு - செந்நிறமுடைய முருகக்கடவுளின் சிவந்த திருவடிகளை மனத்திலேதியானித்துக்கொண்டு, பற்றிய தனுவை வாங்கி - (தான கையில்) எடுத்த வில்லை வளைத்து, பகழி நூறு உய்த்து - நூறு பாணங்களைப் பிரயோகித்து, தீயோன் - கொடியவனான அத்தாரகாசுரனது, பொன் தட முவலி தள்ளி - பொன்மயமான பெரிய கிரீடத்தைக் கீழேதள்ளி, புணரியும் நாண ஆர்த்தான் - கடலும் (தனதொலி இப்பெருமுழக்கத்துக்கு ஈடாக மாட்டாமையால்) வெட்கமடையும்படி (தனதுபெருமிதந்தோன்ற) ஆரவாரஞ்செய்தான்; (எ - று.)

வீரகேசரி - நவவீரரில் ஒருவன். கோளரி - வலிமையையுடைய சிங்கம்; (மற்றைய விலங்குகளை) உயிர்கொள்ளுந்தன்மையையுடைய சிங்க மெனினுமாம். 'கோளரி' என்பது, கேசரியென்பதன் பரியாயமாய் நின்றது. வீர கோளரி - மிருகங்களுட் சிங்கம்போல, வீரர்களுள் தலைமையாயிருப்பவ னென்று பொருள்படும்: பகைவீரர்களாகிய வலிய யானைகளுக்குச சிங்கம் போல எளிதில் அழிவு செய்பவ னென்றும் பொருள் கொள்ளலாம்; வில் லுழவன் - வில்லாகிய கலப்பையைக்கொண்டு பகைவருடலாகிய நிலத்தை

உழுது போராகிய விதையை விதைத்து வெற்றியாகிய பயனை விளைப்பவனெனக: விற்போரையே தொழிலாகவுடையவ னென்றும், விற்போரில் தேர்ச்சியுடையவ னென்றுங் கருத்து. "வில்லேருழவர்" என்ற திருக்குறளில் 'உருவகவிசேடம்' என்றனர் பரிமேலழகர். முருகக்கடவுளின் திருவடிகளை மனத்திற்கொண்டது, தான் வெற்றிபெறுதற்பொருட்டு அக்கடவுளின் திருவருளைப்பெறவேண்டி யென்க. செம்மை + அடி - சேவடி. பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு முன்னின்ற மகரமெய் வகரமாத்திரிந்தது; இவ்வகரத்தை "ஏழ னிவ்விருமையும், உயிர்வரி னுடம்படுமெய் யென்றாகும்" என்றதனால் வந்த உடம்படுமெய் யெனினும் இழுக்காது. பாதஞ் சிவந்திருத்தல், உத்தமவிலக்கணம். புணரியும் என்ற உம்மை - உயர்வுசிறப்பு. நூறு-அநேக மென்ற மாத்திரமாய் நின்றது மவுலி மௌலியென்னும வடசொல்லின் விகாரம்; இது-தலையின்பெயர், கிரீடத்துக்கு இடவாகுபெயராம்: 'முடி' என்ற தமிழ்ச்சொற் போல.

"போரினி லெதிர்ந்தழி புழைக்கைகொடு சுற்றி, வாரியி னெறிந்தன னெழுந்து பினும்வந்தோர். ஒருவலு கோளரி யெதிர்ந்து சினை நூற, கோர வவுணன்றன மகுடத்தை விழவெய்தான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம்.

௬௩. ஆர்த்திடு மோதை கேளா வண்டர்க ளனையன் மீது
தூர்த்தனர் மலரின் மாரி தோன்முக னதனைக் காணா
வேர்த்தனன் மான முற்றான் வீரகே சரிமே லங்கைத்
தார்த்தடந் தண்ட முய்த்துத் தனதுமான் றேரிற் சென்றான்

(இ-ள்.) ஆர்த்திடும் - (இவ்வண்ணம் வீரகேசரி) ஆரவாரஞ்செய்த, ஓதை - ஓசையை, கேளா - கேட்டு, அண்டர்கள் - தேவர்கள், அனையன்மீது - அவ் வீரகேசரியின்மேல், மலரின் மாரி - பூமழையை, தூர்த்தனர் - மிகுதியாகச் சொரிந்து நிறைத்தார்கள்; தோல் முகன் - யானைமுகமுடையவனான தாரகாசுரன், அதனை காணா - அதைக்கண்டு, மானம் உற்றான் - கோபமடைந்து, வேர்த்தனன் - (அதனால்) உடம்புவியர்த்து, அம் கை தார் தட தண்டம வீரகேசரிமேல் உய்த்து - அழகிய தன்கையிற் பொருந்திய வெற்றிமாலையைத் தரித்த பெரிய தண்டாயுதத்தை அந்த வீரகேசரியின்மேல் வீசியெறிந்து, (பின்பு), தனது மான் தேரில் சென்றான் - குதிரைகள்பூட்டிய தனது தேரின்மேலேறிச் சென்றான்; (எ - று.)

தேவர்கள் புஷ்பவர்ஷஞ்சொரிந்தது, தங்கள்பகைவனான தாரகாசுரனை மகுடபங்கப்படுத்திய வீரகேசரியினது பராக்கிரமத்தை நோக்கி உண்டான மகிழ்ச்சியினாலென்க. கேளா, காணா-உடன்பாட்டெச்சங்கள்; இறந்தகாலம். கீழ் ௬௧-ஆஞ்செய்யுளில் "வையநீங்கிக் குவலயமிசைக் குப்புற்று" என்று தாரகன் தேரைவிட்டுத் தரையிற்குதித்தமை கூறினாராதலால், மீண்டும் அவன் தேரிலேறியமையை இங்கு 'தனதுமான்றேரிற் சென்றான்' என்றதனாற் குறித்தனர். அண்டம் - வானம். அதிற்சஞ்சரிப்பவர் அண்டர் எனத் தேவர்க்குக் காரணக்குறி. மானம் - வெட்கமுமாம். இனி, 'வேர்த்தனன் மானமுற்றான்' என்பதற்கு - கோபங்கொண்டு ஒரு விமானத்தின்மேலேறியவனாய் என்றும், கோபித்துத் தானென்னும்அபிமானங்கொண்டவனாய் என்றும் உரைப்பாரும் உளர். மானமுற்றான் வீரகேசரி யெனச்சேர்த்து, விமானத்தின்மீது ஏறியுள்ளவனாகிய வீரகேசரி யெனப் பொருள்கொள்வர். ஒருசாரார். (௬௩)

வேறு.

௬௪. சென்றோர் மாமுடி புனைவுழித் தண்டமத் திறலோன்
மன்றன் மார்பகம் படுதலும் வீழ்ந்தனன் மயங்கி

வென்றி மொய்ம்புடை யாண்டகை யதுகண்டு வெகுண்டு
குன்ற மன்னதோட் டாரக னொடுபொரக் குறித்தான்.

(இ - ள்.) சென்று - (இவ்வாறு தாரகன் தேரிலேறிச்) சென்று, ஓர் மா முடி புனைவுழி - வேறொரு பெரிய கிரீடத்தைத் தரித்துக்கொள்ளுகையில்,— தண்டம் - (அவன்வீசியெறிந்த) கதாயுதம், அதிரலோன் - பராக்கிரமசாலியான அவ்வீரகேசரியினது, மன்றல் மார்பு அகம் - (தரித்தபூமாலைகள் பூசிய சந்தனம் எனப்பவற்றின்) நறுமணத்தையுடைய மார்பில், படுதலும் - தாக்கிய வளவிலே, மயங்கி வீழ்ந்தனன் - (வீரகேசரி) மயக்கமடைந்து கீழ்விழுந்தனனாக,— வென்றி மொய்ம்பு உடை ஆண் தகை - வெற்றியையுடைய தோள்களையுடையவனான வீரவாகு, அது கண்டு - அதனைப் பார்த்து, வெகுண்டு - கோபங்கொண்டு, குன்றம் அன்ன தோள் தாரகனொடு பொர குறித்தான் - மலைபோன்ற தோள்களையுடைய தாரகாசுரனோடு போர்செய்யக் கருதினான்; (எ - று.)

ஒன்று என்பதன் விகாரமாகிய 'ஓர்' என்பது, உகரம் பெறாமலும் முதல் நீளாமலும் நின்றது. ஆண்தகை - ஆண்மைக்குணமுடையவன்; பண்புத்தொகையன்மொழி. தகை - தகுதி, சற்குணம்; இது - தொழிலடியாய்ப் பிறந்த தாயினும், பொருளாற் பண்புப்பெயர். 'வீரவாகு' என்ற பெயரின் பொருளை 'வென்றிமொய்ம்புடை யாண்டகை' எனத் தொடரால் விளக்கினர். 'மார்பகம்' என்றதில் 'அகம்' என்றது - ஏழாம்வேற்றுமையுருபு; "உள் அகம் புறம் இல இடப்பொருளுருபே" என்றனர் நன்னூலார்.

"சென்னிமுடி வீழ்தலு மொர்திண்கதை யெறிந்தே. பொன்னிரதமிசை புகுந்தன னெதிர்ந்தான், மன்னுகதை பட்டிட மயங்குவ துகண்டே, தன்னுவிறல்கொண்டு வளர்தோளின னெதிர்ந்தான்" என்பது கந்தபுராணச்சுருக்கம்.

இக்கவி, இப்படலத்தின் முதற்கவி போன்ற கலிநிலைத்துறை. (௧௭)

வேறு.

கூறு குறித்தேவிறற் புயன்றாரகக் கொடியோனெதிர் குறுகி,
வெறித்தேன்மலர்த் தொடைதூங்குதன் விறற்கார்முகங் குனியாப்,
பொறித்தேயுறு கனல்வாளிகள் பொழிந்தேயவன் புறத்திற், செறி
த்தேயுற வளைத்தானொரு சிலைதானவர் தலைவன்.

(இ - ள்.) குறித்து - (அதனை) கருதி, விறற்புயன் - வீரவாகு, தாரகன் கொடியோன் எதிர் குறுகி - தாரகனாகிய கொடியவனது எதிரிற் சமீபித்து, வெறி தேன் மலர் தொடை தூங்கு தன் விறல் கார்முகம் குனியா - நறுமணத்தையுந் தேனையுமுடைய மலர்களாலாகிய (வெற்றி)மாலை தொங்கியசையப்பெற்ற தனது வலிமையையுடைய வில்லை வளைத்து, பொறித்தே உறு கனல் வாளிகள் பொழிந்து - பொறிவீசிக்கொண்டே ஓங்கியெழுகின்ற நெருப்புப் போன்ற [கொடிய] அம்புகளைச் சொரிந்து, அவன் புறத்தில் செறித்து - அத்தாரகாசுரனுடம்பில் நிறைத்து, உற - நெருங்க,— தானவர் தலைவன் - அசுரராசனான தாரகனும், ஒரு சிலை வளைத்தான் - ஒரு வில்லை வளைத்தான்; (எ - று.)

விறற் புயன் - வீரத்தையுடைய தோள்களையுடையான். தொடை - தொடுக்கப்படுவது என மாலைக்குக் காரணக்குறி; ஐ - செயப்படுபொருள் விகுதி. கார்முகம் - வடசொல்; தொழில்செய்தலிற் சிறந்த தென்பது காரணப்பொருள்: கர்மம் - தொழில். செறித்து - அழுத்தி யெனினுமாம். 'பொறித்தே' என்பதில், ஏகாரம் - இடைவிடாமை குறித்தது. 'குறித்தே' என்றதில், ஏகாரம் - அசை; 'பொழிந்தே' என்பதிலும் அது. 'செறித்தே'

என்பதில், ஏகாரம்-தேற்றம். குனியா - உடன்பாட்டெச்சம். 'புரம்' என்ற வடசொல் உடம்பையுணர்த்துதலை 'புரந்தரன்' என்றவிடத்திலுங் காண்க.

இதுமுதல் ஆறு கவிகள் - பெரும்பாலும் நான்காஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் மாங்கனிச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள்.

௬௩, ௬௪, ௬௫ - இச்செய்யுள்கள் அந்தாதித்தொடையாக அமைந்திருத்தல், கருதத்தக்கது; இது, பொருள்தொடர்நிலையினிடையே வந்த சொல்தொடர்நிலை. தண்டியலங்காரத்தில் "பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர்நிலை" என்றவிடத்தில் "வகை' என்ற மிகையால், மூன்றாவது பொருளினாலுஞ் சொல்லினாலுந் தொடர்வதுமுண்டெனக் கொள்க' என்றமை காண்க. (௬௫)

௬௬. பொழிந்தான்சரமழைநம்மவன்புரமேலதுபொழுதி
னிழிந்தான்சிலையுயர்ந்தான்கணையீரேழுதொட்டிறுப்ப
வழிந்தாயெனையெதிர்ந்தாயிதற்கையமிலையென்று
மொழிந்தானொருசூலந்தனைமொய்ம்பிற்செலவுய்த்தான்

(இ - ள்.) (இங்ஙனம் வில்வளைத்த தாரகன்), நம்மவன் புரம்மேல்-நமது தலைவனாகிய வீரவாகுவினுடம்பின்மேல், சரம் மழை பொழிந்தான்-பாணவர்ஷத்தைச் சொரிந்தான்; அதுபொழுதின் - அச்சமயத்தில், உயர்ந்தான் - மேம்பாடுடையவனான வீரவாகு, ஈரேழு கணை தொட்டு - பதினான்கு பாணங்களைப் பிரயோகித்து, இழிந்தான் சிலை இறுப்ப - இழிவான தன்மையுடையவனான அவ்வசுரனது வில்லைத் துணிக்க, (அத்தாரகன் வீரவாகுவை நோக்கி), 'எனை எதிர்ந்தாய்-என்னை யெதிர்த்தவனான நீ, அழிந்தாய் - நிச்சயமாக அழிந்திட்டாய்; இதற்கு ஐயம் இலை - (அங்ஙனம்அழிகிற) இத்தன்மைக்குச் சந்தேகமில்லை,' என்று மொழிந்தான் - என்று வீரவாகுதுஞ் சொல்லி, ஒரு சூலந்தனை - ஒரு சூலாயுதத்தை, மொய்ம்பின் செல - (வீரவாகுவின்மேல்) வலிமையோடு பாயும்படி, உய்த்தான் - பிரயோகித்தான்.

கவி, தமது சுப்பிரமணியபக்தியால், அவன்தம்பியான வீரவாகுவை 'நம்மவன்' என்று தமதுஅபிமானந்தோன்றக் கூறினார். அழிந்தாய் - விரைவுந்தெளிவும்பற்றி எதிர்காலம் இறந்தகாலமான வழுவமைதி; [நன்-பொது-௩௩.] 'மொய்ம்பிற் செல' என்பதற்கு - தோளின்மேற் பாய என்று உரைத்தல் பொருந்தாது; அடுத்தகவியில் 'மார்புற' என வருதலால். ஐயம்மிலை, மகரம் - விரித்தல். மொய்ம்பு - வீரவாகுவுக்கு ஒருபெயருமாம். இழிந்தான், உயர்ந்தான் - வினையாலணையும்பெயர்கள். இரண்டாமடியில் 'இழிந்தான்சிலையுயர்ந்தான்கணை' என்றவிடத்தது தொடைமுரண் காண்க. ஈரேழு - பண்புத்தொகை. தொட்டு, தொடு - பகுதி. எனை எதிர்ந்தாய் அழிந்தாய் - நீ என்னைஎதிர்த்தாயாதலால் அழிந்தாய் என்றபடி. எனை - தொகுத்தல்.

"வச்செதிர் புகுந்த திறல்வாகுமிசை வெய்யன், சுந்தரவிறற்கொளொரு சூலம தகைத்தா, னுர்தெழி லுரத்தினிடை யுற்றிடலு மீசன், மைந்தனிளையோன் மிகு வருத்தமொடு நின்றான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம்.

௬௭. பொருமூவிலைவேலங்கவன்பொன்மார்புறப்பொருமிப்
பெருமோகமொடேநின்றிடப்பின்னங்கதுகாணு
வுருமேறெனவதிர்தாரகனுடனேயவன்றுணையாய்
வருமூவருமொருநால்வருமாறுற்றமரிழைத்தார்.

(இ - ள்.) பொரு - போரிற்சிறந்த, மூ இலை வேல் - மூன்று இலைவடிவமான நுனிகளையுடைய அசுரசூலாயுதம், அங்கு-அப்பொழுது, அவன் பொன்

மார்பு உற - அவ்வீரவாகுவினது அழகிய மார்பிலே பாய்ந்ததனால், (அவன்), பொருமி - வருந்தி, பெரு மோகமொடே நின்றிட - மிக்க மயக்கத்தோடு (சிறிதுபொழுது செயலற்று) நிற்க,—பின் - பின்பு, அங்கு அது காணூ - அவ்விடத்து நடந்த அத்தன்மையைக் கண்டு, உரும் ஏறு என அதிர் - (தனது செருக்குத்தோன்றப்) பேரிடிபோலக் கர்ச்சிக்கின்ற, தாரகனுடனே—, அவன் துணை ஆய் வரும் மூவரும் ஒரு நால்வரும் - அவ்வீரவாகுவினது உடன்பிறந்தவராயுள்ள எழுபேரும், மாறு உற்று-மாறுபாடுகொண்டு, அமர் இழைத்தார் - போர்செய்தார்கள்; (எ - று.)

பொன்மார்பு - பொன்னாலாகிய ஆரம்முதலிய ஆபரணங்களைத் தரித்த மார்புமாம்; பொன் - கருவியாகுபெயர். 'அவன் துணையாய்வரும் மூவருமொரு நால்வரும்' என்றது, அவனது தம்பியர் எட்டுப்பேருள் கீழ் மயங்கி விழுந்த வீரகேசரியொழிந்த எழுவரையு மென்க. பின் - உடனே யென்றபடி. ஏறு - ஆண்மைப்பெயர். சிறந்ததையும் பெரியதையும் ஆணென்னும் மரபுபற்றி, 'உருமேறு' என்றார். காணூ - உடன்பாடு. பொருமி, பொருமு- பகுதி. மோஹம் - வடசொல். மூவர், நால்வர் - எண்ணடியாப்பிறந்த பெயர்கள். (கூஎ)

கூஅ. அமர்செய்திடுமெழுவீருமவுணன்றனக்குடையக்
குமரன்பதந்தலைக்கொண்டிடுங்கோமானதுகாணூ
வெமராமற்றிவரெல்லோர்களுமிரிந்தார்பொருதென்னூச்
சமராமுற்றிடவருதாரகத்தகுவன்முனமடைந்தான்.

(இ - ள்.) அமர் செயதிடுமெ எழு வீரரும்-(இவ்வாறு) போர்செய்த எழு வீரர்களும், அவுணன்தனக்கு உடைய - அத்தாரகாசுரனுக்குத் தோற்க,— குமரன பதம் தலை கொண்டிடும் கோமான் - முருகக்கடவுளின் திருவடிகளைத் தலைமேற்கொண்டு வணங்குந்தன்மையுள்ள தலைவனான வீரவாகு, அது காணூ - அதனைக் கண்டு, எமர் இவர் எல்லோர்களும் பொருது இரிந்தார் என்னூ - 'எம்மவராகிய இவர்களெல்லாரும் (இவ்வசுரனோடு) போர்செய்து தோற்றொழிந்தார்களே!' என்று சிந்தித்து, சமர் முற்றிட வரு தாரகன் தகுவன் முனம் அடைந்தான் - போரைமுடிக்கும்படி வந்திருக்கின்ற அத்தாரகாசுரனெதிரில் (மீண்டுந் தான்) சேர்ந்தான்; (எ - று.)—மற்று - அசை; வினைமாற்றுமாம்.

'குமரன்பதந்தலைக்கொண்டிடும்' என்ற அடைமொழி, வீரவாகுவினது சுப்பிரமணியபக்தியை விளக்கும். கோமான் - இலக்ஷத்து சுப்பிரமணியசேனைக்குத் தலைவனுமானவன்; இதில், மான்-ஆண்பாற்பெயர்விகுதி. 'சமர் முற்றிட வரும்' என்பதற்கு-போரில அழியவருகிற என்றும் பொருள்கொள்ளலாம். எமர்-யாம் என்பதனடியாப் பிறந்த பலர்பாற் கிளைப்பெயர். முன் - இடமுன். முனம் - தொகுத்தல். (கூஅ)

கூகூ. ஒருகார்முகமிருகால்வளைவுறவேகுனித்துகுதே
னருகாதொழுகியதன்மையினவிர்நாணொலியெடுப்பத்
திருகாநெடுவரையானவுந்தெருமந்தனவவுண
ரிருகாதையுநனிபொத்தினரேங்குற்றனரிரிவார்.

(இ - ள்.) (இங்ஙனந் தாரகனெதிரிற்சேர்ந்த வீரவாகு), ஒரு கார்முகம்- (தனது) ஒப்பற்றதொரு வில்லை, இரு கால் வளைவு உற - இரண்டுகோடியும் வளையும்படி, குனித்து - வளைத்து, உகு தேன் அருகாது ஒழுகிய தன்மையின் அவிர் நாண் ஒலி எடுப்ப-(மலர்களினின்று அல்லது கூட்டினின்று) வெளிப்படுகின்றதேன் இடைவிடாமல் தாரையாகப்பெருகுகிற தன்மைபோல விளங்குகின்ற நாணியை யேற்றி அதனைக் கைவிரலால்தெறித்து ஓசையை

யெழுப்ப,—(அவ்வோசைமிகுதியினதிர்ச்சியால்), நிருகா நெடு வரை ஆன வும் தெருமந்தன - இயல்பில்அசைதலில்லாத பெரியமலைகளும் சுழன்றன; அவுணர் - அசுரர்கள், (அம்முழக்கத்தைக் கேட்கமாட்டாமல), இரு காதை யும் கனி பொத்தினர்-தம்தமது இரண்டுகாதுகளையும் நன்றாகக் கைகளால் மூடிக்கொண்டு, எக்குற்றனர் - நிலைப்படைந்தவர்களாய், இரிவார்-அஞ்சி யோடுபவரானார்கள்; (எ - று.)

அருகாத-குறைந்து நீங்காமல். இடைவிடாது தேனொழுகுந் தாரை வில்நாணுக்கு, வடிவத்தில் உவமம். தன்மையின், இன்-ஐந்தனுருபு. ஒப்புப் பொருள். தெருமந்தன, தெருமா - பகுதி, குறுகியது - விகாரம். தெரு மரல் - சுழலுதல். கனி - மிகுதியுணர்த்தும் விசேடித்த உரிச்சொல். எக குற்றனர், உறு - துணைவினை. நிருகா - நிருகாத: ஈறுகெட்டஎதிர்மறைப் பெயரெச்சம். அசலமென்ற பெயரின் பொருள் விளங்க, 'நிருகா வரை' என்றார். இனி, 'நிருகா' என்பதை உடன்பாட்டுவினையெச்சமாக்கொ ண்டு, திரும்பி [நிலைபெயர்ந்து] என வுரைப்பினுமாம் 'ஆன' முதல்வேற்று மைசொல்லுருபு. (சுகூ)

எO. நாண்கொண்டிடு மொலிகேட்டலு நடுங்காவெரு வுற்றார்
பூண்கொண்டிடு சிலைவாங்கலு மகிழ்வுற்றிடு புலவோர்
சேண்கொண்டிடு முகில்வேண்டின ரதுவந்திடச் சிறந்தே
மாண்கொண்டத னுருமுச்செல மயங்கித்தளர் வதுபோல்.

(இ-ள்.) சேண் கொண்டிடும் முகில் வேண்டினர் - வானத்தை இடமா கக்கொண்ட மேகத்தின் வருகையை (மழையின் பொருட்டு) விரும்பின சன ங்கள், அது வந்திட சிறந்து மாண் கொண்டு-அம்மேகம் வந்தபொழுது மிகு தியாக மகிழ்ச்சியடைந்து, அதன் உருமு செல மயங்கி தளர்வது போல் - அம்மேகத்தின் இடி வெளிப்பட்டவளவிலே திகைத்துத் தளர்ச்சியடைதல் போல,—பூண் கொண்டிடு சிலை வாங்கலும் மகிழ்வு உற்றிடு புலவோர் - கட்டமைந்த வில்லை (வீரவாகு) வளைத்தவளவில் மகிழ்ச்சியை மிகுதியாக அடைந்த தேவர்கள், நாண் கொண்டிடும் ஒலி கேட்டலும் நடுங்கா வெருவுற் றார் - அவ்விலலின்நாணிசெய்த ஓசையைக் கேட்டமாத்திரத்தில் நடுநடுங் கிப் பயப்பட்டார்கள்; (எ - று.)

உலகத்தின்தாபத்தை யடக்குதற்பொருட்டு மேகத்தின் வரவை வெகு காலமாய் எதிர்பார்த்துநின்ற அனைவரும்மேகம்வந்தவளவில் அதனைக்கண்டு மகிழ்ச்சியுற்ற மனிதர்கள் அதன்இடிமுழக்கத்தைக் கேட்டமாத்திரத்திலே அச்சங்கொள்ளுதல்போல, அசுரர்களது உபத்திரவத்தை நீக்குபவனது வரு கையை வெகுகாலமாய் எதிர்பார்த்துநின்ற அனைவரும் வீரவாகு வந்து வில வளைத்தவளவில் அதனைக்கண்டு மகிழ்ச்சியுற்ற தேவர்கள் அவ்வில்லின் நாணொலியைக் கேட்டமாத்திரத்திலே அச்சங்கொண்டனர் என்பதாம். உவமையணி.

உபமேயத்தில் 'சிலைவாங்கலும்' என்றதற்கு ஏற்ப, உபமானமாகிய மேகத்திலும் இந்திரவில் உண்மை காண்க; வில் வளைதல் அம்புமழைக்குக் காரணமாதல்போல, இந்திரவில்லின்தோற்றமும் மழைக்கு நிமித்தமாகு மாறுஉணர்க. உள்ளமும் உடம்பும்நடுங்குதல், அச்சக்குறிப்பு. புலவர் - அறி வுடையவர்;புலம் அல்லது புலமை-அறிவு: தேவர்க்கு அறிவுவிசேடித்திருத்த லால், 'விபுதர்' என்று வடமொழியில் ஒருபெயர் வழங்குதலும் உணர்க. புலவர் -புலவோர் எனச சிறப்பன்மை ரகரவீற்று அயல் அகரம் ஓகாரமாயி ற்று. சேண் - பெருமையுமாம். மேகத்தின்பெருமை. பிரசித்தம். மாண் - மாண்பு என்னும் பண்பின் அடி; பெருமையைக்குறிக்கின்ற இது, சந்தர்ப்

பத்தால், மகிழ்ச்சியை யுணர்த்திற்று. உருமு, உ - சாரியை; [ஈன் - மெய் - உ0.] ஈகோகா - உடன்பாட்டெச்சம் வெருவுற்றார் - வெருவினார்; உற - துணைவினை. வேண்டினர் - வினையாலணையும்பெயர். செல - செல்ல: தொகுத்தல்.

வேறு.

௭௧. மேதாவியர்கள் பரவுந்திறல் வீர வாகு
மாதாருவன்ன சிலைதன்னை வளைத்து வாகைத்
தாதார் பிணையல புனை தாரகன் றன்னை நோக்கித்
தீதா மழல்போல வெகுண்டே யிது செப்பு கின்றான்.

(இ - ள்.) மேதாவியர்கள் பரவும் - அறிவுடையவர்கள் துதிக்கும்படியான, திறல் - வல்லமையையுடைய, வீரவாகு—, மா தாரு அன்ன சிலை தன்னை வளைத்து - பெரியமரம்போன்ற வில்லை வளைத்து (க் கையிற்பிடித்துக்கொண்டு), வாகை தாது ஆர் பிணையல் புனை தாரகன்தன்னை நோக்கி - வாகையென்னும் மரத்தின்மலர்களாலாகிய பூந்தாது நிறைந்த மாலையைத் தரித்த தாரகாசுரனைப் பார்த்து, தீது ஆம் அழல் போல் வெகுண்டு - கொடியதான அக்கினிபோலக் கோபங்கொண்டு, இது செப்புகின்றான் - இவ் வார்த்தையைக் கூறுகின்றான்; (எ - று.)—அவ்வார்த்தையை, அடுத்தகவியிற் காண்க.

மேதாவீ எனனும் வடசொல்லுக்கு - அறிவுடையானென்று பொருள்; மேதா - அறிவு. தாரு - வடசொல். வாகைப்பூமாலை, வெற்றிக்கு அறிகுறி; ("வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம் வட்கார்மேற் செல்வது வஞ்சியாம்—உட்கா தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்தல் நொச்சி அதுவளைத்த லாகு முழிஞை—அதிரப் பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர் செருவென்றது வாகையாம்" என்பதனால், இன்ன இன்ன பூமாலை வீரர்கள் இன்ன இன்ன சமயத்தில் தரிக்கற்கு உரிய தென்பதை யுணர்க.) தாது - மகரந்தப்பொடி. பிணையல் - தொடுத்தல் தொழிற்பெயர்; தொடுக்கப்பட்டமாலைக்கு ஆகுபெயராம் 'பிணையல்' என்பதற்கு - 'மலர்நெருங்கு மார்பின்மாலை' என்று பொருளுரைத்திருக்கின்றனர் நச்சினார்க்கினியர். முருகக்கடவுளால் செலுத்தப்பட்ட வீரர்களுள் வீரவாகுவொருவனொழிந்த அனைவரையும் வென்ற திறல்பற்றி 'வாகைத்தாதார்பிணையல்புனை தாரகன்' என்றும், அவ்வெற்றிநிலை கண்டதனால் வீரவாகு பெருங்கோபங்கொண்டன னென்பார், 'தீதாமழல்போல்வெகுண்டு' என்றும் கூறினர். 'வாகை' என்ற மரத்தின்பெயர் - இங்கு, அதன்மலர்க்கு முதலாகுபெயராம்.

இதுமுதல் ஆறு கவிகள் - ஒன்று நான்கு ஐந்தாஞ் சீர்கள் தேமாச்சீர்களும், இரண்டாஞ்சீர் புளிமாச்சீரும், மூன்றாஞ்சீர் புளிமாங்கனிச்சீருமாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (௭௧)

௭௨. பொன்றாவலிகொண்டமராடியபூதர்தம்மை
வன்றாழ்சிலைகொண்டிடுவீரரைவன்மைதன்னால்
வென்றாமெனவுன்னினைபோலும்விரைந்துநின்னைக்
கொன்றாவியுண்பனெனனுங்கொடியோனுரைப்பான்

(இ - ள்.) 'பொன்றா வலி கொண்டு அமர் ஆடிய பூதர்தம்மை - அழியாத வல்லமையை யுடையவராய்ப் போரையுக்கிரமாகச்செய்த பூதகணங்களையும், வல் தாழ் சிலை கொண்டிடு வீரரை - வலிய வளைந்த வில்லை யேந்திய இலக்கத்தெட்டுவீரர்களையும், வன்மைதன்னால் வென்றாம் - (நமது) வலிமையினாற் சயித்திட்டோம்', என - என்று, உன்னினை போலும் - (செருக்காக) நினைத்தாய்போலும்; (இனி நான்), விரைந்து நின்னை கொன்று ஆவி உண்பன் -

விரைவில் உன்னைக்கொன்று உயிர்குடிப்பேன்,' எனலும் - என்று (வீரவாகு வீரவார்த்தை) கூறியவளவிலே,—கொடியோன் - கொடுமையையுடையவனான தாரகாசுரனும், உரைப்பான் - (அதற்கு) எதிர்கூறுவான்; (எ - று.)—அதனை அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

வலிமையால் யாவரையும் வென்றிட்டோமென்றெண்ணி எனதுமுன்னிலையிலுஞ் செருக்குக்கொள்ளாதே: அவர்கள்போலல்லன் யான்; இப்பொழுதே உன்னைக் கொன்று தீர்ப்பேன் என்று வீரவாகு கூறினனென்பதாம். ஆவி யுண்பன் - உயிரையொழிப்பேனென்றபடி; உண்ணப்படாதது உண்ணப்படுவதுபோலச் சொல்லப்பட்டது. மரபுவழுவமைதி, "உண்டற்குரிய வல்லாப் பொருளை, யுண்டன போலக் கூறலு மரபே" என்ற தொல்காப்பியத்தைக் காண்க. 'வென்றும்' என்றது, செருக்கினால் தன்னைத் தானே உயர்த்துக்கூறுந் தன்மைப்பன்மை. உண்பன் - தன்மையொருமை. (௭௨)

௭௩. மாயன்றனைவென்றவனேமியைமாசில்கண்டத்
தேயும்படியேபுனைந்தேன்வலியெண்ணுறாதே
நீயிங்கடுவாமெனக்கூறினைநீடுமாற்றஞ்
சீயந்தனையுநரிவெல்வதுதிண்ணமாமோ.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) மாயன்தனை வென்று - திருமாலைசசயித்து, அவன் நேமியை - அவனது சக்கராயுதத்தை, மாசு இல் கண்டத்து - குற்றமில்லாத கழுத்தில், ஏயும் படியே - பொருந்தும்படியாகவே, புனைந்தேன் - ஆபரணமாகத்தரித்த எனது, வலி - வலிமையை, எண்ணுறாதே - சிறிதும்மதிக்காமலே, நீ—, இங்கு - இவ்விடத்தில் [அல்லது இப்பொழுது], அடுவாம் என - கொல்வோமென்று, நீடு மாற்றம் - பெரிய வார்த்தையை, கூறினை - சொன்னாய்; சீயந்தனையும் நரி வெல்வது திண்ணம் ஆமோ - சிங்கத்தை நரி சயிப்பதும் நிச்சயமாகுமோ? [ஆகாதே]; (எ - று.)

யானைமுதலிய பெருவிலங்குகளையெல்லாம் வெல்வதாகிய சிங்கத்தை நரியால் ஒருகாலும் வெல்லமுடியாமைபோல, அசுரர்களையழித்தலால் தைத்யாரியென்று ஒருபெயர்பெற்ற திருமாலையும் வென்ற என்னை உன்னால் ஒருகாலும் வெல்லமுடியாதென்றபடி. ஈற்றடியிற்கூறிய உபமானந் தானே உபமேயத்தை விளக்கியது, பிறிதுமொழிதல் என்னும் அணியின் பாற்படும். தேவர்களில் தலைமைபெற்றவனும் அசுரர்களை யழித்தலில் வல்லவனும் அளவிடற்கரிய பெருமாயையையுடையவனுமான திருமாலை எளிதிற்சயித்திட்ட என்னை எளிய நீயோ வெல்லத்தகுவாய்? என்று தனது பெருமிதந் தோன்றக் கூறினான். மாசில் கண்டம் - நல்லிலக்கணமமைந்த கழுத்து. புனைந்தேன் - பெயர். எண்ணுறாது - ஒருபொருளாக எண்ணாமல்; இந்த எதிர்மறைவினையெச்சத்தில், உறு - துணைவினை. ஏகாரம்-துணிவைவிளக்கும். நீடு மாற்றம் - உனது வலிமைநிலையின் எல்லையினும் மிகஅதிகமாகவுள்ள வார்த்தை யென்றவாறு; பெருவலிபடைத்துள்ளார் பேசுதற்கேற்ற வார்த்தை யென்க. 'சீயந்தனையும்' என்ற உம்மை, பிரித்துக்கூட்டப்பட்டது; அவ்வும்மை, இயலாதகாரியமென்பதை வற்புறுத்திற்று. திண்ணம் - திண் என்னும் பகுதி 'அம்' என்னும் விகுதி பெற்ற பண்புப்பெயர். ஈற்றுஓகாரம் - எதிர்மறை. (௭௩)

௭௪. சாருங்குறள்வெம்படையாவையுஞ்சாய்ந்தவிர
ராருந்தொலைவுற்றனர்நீயுமயர்ந்துநின்றாய்

வீரம்புகல்வாய்விளிகின்றவிளக்கநேர்வாய்
பாரென்வலியாலுனதாவிபடுப்பனென்றான்.

(இ - ள்.) சாரும - (உன்னுடன்வந்து என்னை) நெருங்கிய, வெங்குறள் படை யாவையும் - கொடிய பூதகணங்களெல்லாம், சாய்ந்த - அழிந்திட்டன; வீரர் ஆரும் - (உன்னுடன்வந்த) வீரர்களெல்லாரும், தொலைவு உற்றனர்-தோல்வியை யடைந்தார்கள்; நீயும அயர்ந்து நின்றாய் - நீயும் (சிறிது பொழுது முன்னே என்சூலத்தால்) சோர்வடைந்து நின்றாய்; (அங்ஙனமிருந்தும்), வீரம் புகல்வாய் - வீரவார்த்தைகளைச் சொல்லுகின்ற நீ, விளிகின்ற விளக்கம் நேர்வாய்-அவிகிற தீபம் போல்வாய்; என் வலியால் உனது ஆவி படுப்பன் பார் - எனது வலிமையால் உன்னுடையஉயிரை யழிப்பேன் பார், என்றான்-என்று (வீரவாகுவை நோக்கி வீரவாதம்)கூறினான், (தாரகன்).

விளக்கு அவிகிறசமயத்தில் சுடர்மிகுதியாய்எரிதல்போல, நீயும் அழிகிறசமயத்தில் செருக்குக்காட்டுகின்றாய் என்பான், 'வீரம்புகல்வாய் விளிகின்ற விளக்கம் நேர்வாய்' என்றான். குறள் - குறு என்னும் பகுதி 'அள்' என்னும் விகுதிபெற்ற பண்புப்பெயர்; குறுமையையுணர்த்துகிற இது, இயல்பிற குறுகிய வடிவமுடைய பூதத்துக்கு, பண்பாகுபெயராம். சாய்ந்த - முற்று. ஆர் - யாரென்பதன் மரூஉ. புகல்வாய - பெயர். விளக்கம் - (பொருள்களை) விளங்கச் செய்வது; அம் - கருத்தாப்பொருள்விகுதி. 'பார்' என்றது, துணிவை விளக்கும். என்றும்அழியாமல் நித்தியமாய் நிற்குந் தன்மையுடைய உயிர்க்கு அழிவென்பது, உடம்பினின்று நீங்குதலே யாகும். படுப்பன - தன்மையொருமை. (௭௪)

௭௫. என்னுந்துணையிற்சரமாயிரமேந்தலுய்ப்பத்
தன்னங்கையிலோர்சிலைவாங்கினன்றாரகப்பேர்
மன்னன்கடிதுகணையாயிரமாறுதாண்டிச்
சின்னம்புரிந்துகணைநூறுசெலுத்தினனால்.

(இ - ள்) என்னும் துணையில் - என்று (தாரகன் வீரவாதங்)கூறுமளவில், ஏந்தல் - சிறந்தஆண்மகனான வீரவாகு, சரம ஆயிரம் - ஆயிரம்அம்புகளை, உய்ப்ப - பிரயோகிக்க, தாரகன பேர் மன்னன - தாரகனென்னும் பெயரையுடைய பிரசித்திபெற்ற அவ்வசுரராசனும், தன் அம் கையில் ஓர் சிலை வாங்கினன் - தனது அழகியகையில் ஒருவில்லையெடுத்து வளைத்து, கடிது - விரைவாக, கணை ஆயிரம் - ஆயிரம் அம்புகளை, மாறு தாண்டி - (அவற்றிற்கு) எதிராகப் பிரயோகித்து, சின்னம் புரிந்து - (தனது ஆயிரம் அம்புகளால் அந்த ஆயிரம் அம்புகளையும்) துண்டாக்கித்தள்ளி, நூறு கணை செலுத்தினன் - (பின்பு) நூறுஅம்புகளை (வீரவாகுவின்மீதும்) பிரயோகித்தான்; (எ - று.)

ஆல் - ஈற்றசை. சின்னம்- வடசொல். கடிது - வீரவாகுதொடுத்தஅம்புகள் தன்மேல் வருதற்குமுன்னே யென்றபடி. ஏந்தல் - ஆண்பாற்சிறப்புப் பெயர்; இதறகு, தொழிலாகுபெயரென இலக்கணங் கூறலு முண்டு.

"மொய்ம்புடைய வாகு மிருமோகமொடு நின் றேழ், தம்பிய ரெதிர்த்திடைவ தானது தெரிந்தே, வெம்பதகன்முன் பனுக வெய்யனு மெதிர்த்தா, னம்புமழை சிந்தி யிருவோரு மமர்செய்தார்" என்பது, கந்தபுராணச்சுருக்கம். (௭௫)

௭௬. எவ்வக் கொடியோன் றொடுவாளியை யேந்தல் காணு
வவ்வக் கணைகள் விடுத்தேயவை முற்று மாற்றக்

கைவிற் கொருவ னிவனுகுமிக் காளை தன்னைத்
தெய்வப் படையான் முடிப்பேனெனச் சிந்தை செய்தான்.

(இ - ள்.) எஃகம் கொடியோன் - குற்றம்நிறைந்த கொடியவனான தாரகன், தொடு - பிரயோகித்த, வாளியை - அம்புகளை, காணு - கண்டு, எந்தல் - வீரவாகு, அ அ கணைகள் விடுத்தே - அவ்வவற்றிற்கு ஏற்ற அம்புகளை எதிரிற்செலுத்தி, அவை முற்றும் மாற - அந்த அம்புகளையெல்லாம் (சிறிதும் பயனிலவாம்படி) தடுக்க, (அதுகண்ட தாரகன்), 'இவன்—, கைவிற்கு - கையிலேந்திய வில்லின்திறத்தில், ஒருவன் ஆகும் - ஒப்பற்றவனுவான்: (ஆகலால், இவனோடு விற்போர் செய்யாமல்), இ காளைதன்னை - இந்தஇளவீரனை, தெய்வம் படையால் முடிப்பேன் - தெய்வத்தன்மையையுடைய அஸ்திரங்களால் அழிப்பேன்', என - என்று, சிந்தை செய்தான் - எண்ணினான்; (எ - று.)

வீரவாகுவினது விற்போர்த்திறத்தைக் கண்டு வியந்து தாரகன் 'இவனை விற்போரில் வெல்லமுடியாது; ஆதலால், தேவாஸ்திரங்களைக் கொண்டு அழித்திடுவேன்' என்று எண்ணினனென்பதாம். விற்கு - உருபுமயக்கம். காளை - இளவெருது; நடை வலிமை பெருமிதத்தோற்றம் என்னும் இவற்றால் வீரனுக்கு உவமம்; இது - உவமையாகுபெயராய், சிறந்த ஆண்மகனைக் குறிக்கும். தைவம் - வடசொல். தெய்வப்படை - மந்திரசக்தியமைந்தது. சாதாரணமான ஆயுதங்களால் இவனையழித்த லரிதென்றுகொண்டு, தெய்வப்படையால்முடிப்பே னென்று சிந்தித்தனன். தொடு வாளி - வினைத்தொகை.

"பொற்சகட மீதிவுறு புல்ல னதுபோதின், விற்சமர்புரிந் திவனை வெல்வதரி தென்றே; கற்பொருவு தோளுடைய காளைமிசை செல்ல, விற்குலவு மும்பர்கள் விறற்படைகள் விட்டான்" என்பது, கந்தபுராணச் சுருக்கம். (எக)

வேறு.

எனவெங்க னற்படை தார கன்விட வீர வாகுவெ குண்டுபின்
செங்க னற்படை யேவி யன்னது சிந்த வேவரு ணப்படை
யங்க ணுய்த்திட வவுணர் கோமக னடுபு னற்கிறை படையினைத்
துங்க முற்றிய வீர னுய்த்தது துண்ட மாம்வகை கண்டனன்.

(இ - ள்.) (இங்ஙனம் எண்ணி), தாரகன்—, வெம் கனல் படை - கொடிய ஆக்கினேயாஸ்திரத்தை, விட - பிரயோகிக்க,—வீரவாகு—, வெகுண்டு - (அதுகண்டு) கோபித்து, பின் - உடனே, செம் கனல் படை எவி - (தானும்) சிவந்த ஆக்கினேயாஸ்திரத்தையே (எதிராகப்) பிரயோகித்து, அன்னது சிந்தவே - அந்தத்தாரகனேவிய அஸ்திரத்தை அழித்திடவே,—அங்கண் - அப்பொழுது, அவுணர் கோமகன் - அசுரராசனான அத்தாரகன், வருணப் படை - வாருணாஸ்திரத்தை, உய்த்திட - பிரயோகிக்க, துங்கம் முற்றிய வீரன்-உயர்வு மிக்க வீரவாகுவும், அடு புனற்கு இறை படையினை - (பகையை)அழிக்கவல்ல வாருணாஸ்திரத்தையே, உய்த்து - (எதிராகப்) பிரயோகித்து, அது துண்டம் ஆம் வகை கண்டனன் - அந்தஅஸ்திரம் துண்டுகளாகும்படி செய்தான்; (எ - று.)

கனற்படை - அக்கினியைத் தெய்வமாகவுடையதும், நெருப்புமயமானதுமான அஸ்திரம். வருணப்படை - வருணனைத் தெய்வமாகவுடையதும், நீர்மயமானதுமான அஸ்திரம். கோமகன் - தலைவனுகிய ஆடவனென இருபெயரொட்டு. புனற்குஇறை - நீர்க்குக்கடவுளானவருணன்: அவனது படையென்க. இங்கே, 'கண்டனன்' என்பதில், காணுதல் - செய்தலென்

னும்பொருளது. அது தண்டமாம்வகைகண்டனன் - அதனைத் தணித்தன னென்றபடி. கனலுக்கு வெம்மையும், செம்மையும் இயற்கையடைமொழி. அடு படையென இயையும். 'அடு' என்பதைப் புனலுக்கு அடைமொழி யாக்கி, (பிரளயகாலத்தில் உலகத்தை) அழிப்பதான சமுத்திரத்திற்குத்தலைவனாகிய வருணனென்றலு மொன்று. 'ஆர்யகை' என்றவிடத்து, மகரமெய் வகரத்தின்பின்வந்ததனால், மகரக்குறுக்கம்; [நன - எழுத்து-சக.] இதற்கு மாத்திரை, கால்; [நன் - எழுத்து - கசு.]

இதுமுதல் ஆறு கவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (எஎ)

எஅ. இரவிதன்படையவுணன்விட்டனனிவனுமப்படையேவியே
விரைவிலன்னதுதொலைவுகண்டனன்வீரமேதகுதாரக
னுரமிகுந்ததனியூதைவெம்படையுந்தினனதுகந்தவே [டா
ளருண்மிகுந்ததனியடியன்மாற்றினனனையதொல்படைதனைவி

(இ - ள்.) (பிறகு), அவுணன் - தாரகாசுரன், இரவிதன் படை விட்டனன் - சூரியாஸ்திரத்தைப் பிரயோகித்தான்: இவனும் - வீரவாகுவும், அ படை ஏவியே - அந்தச்சூரியாஸ்திரத்தையே (தானும் எதிரிற்) பிரயோகித்து, விரைவில் - விரைவாக, அன்னது தொலைவு கண்டனன் - (அசுரனேவிய) அந்த அஸ்திரத்தை அழிவுசெய்தான்; (பின்பு), வீரம்மேதகு தாரகன் - பராக்கிரமம் மிக்க தாரகாசுரன், உரம் மிகும்-வலிமை மிக்க, தனி-ஒப்பற்ற, வெம் - கொடிய, ஊதை படை-வாயவ்யாஸ்திரத்தை, உந்தினன் - பிரயோகித்தான்: அது - அதனை,—கந்தவேள் அருள் மிகும் தனிஅடியன் - முருகக்கடவுளின் கருணையை மிகுதியாகப்பெற்றுள்ள ஒப்பற்றஅடியவனான வீரவாகு, அனைய தொல் படைதனை விடா - தொன்றுதொட்டுவருகின்ற அந்த வாயவ்யாஸ்திரத்தையே (தானும் எதிரிற்) பிரயோகித்து, மாற்றினன் - அழித்தான்; (எ - று.)—அது மாற்றினன் என இயையும்.

இரவிப்படை - சூரியனைத் தெய்வமாகவுடையதும், வெயில்மயமானதுமான அஸ்திரம். ஊதைப்படை - வாயுவைத்தெய்வமாகவுடையதும், காற்றுமயமானதுமான அஸ்திரம். ஊதை - காற்று. தொல் படை - பழமையாய்க் குருசிஷ்யக்கிரமத்திலே பரம்பரையாகவருகின்ற அஸ்திரம்; பண்புத்தொகை. ரவி - வடசொல். விடா - உடன்பாட்டெச்சம். (எஅ)

எகூ. அனிலவெம்படைவீறழிந்திடவவுணர்கோமகனம்புயன்
றனதுதொல்படையேவினனதுதணிவில்செற்றமொடேகலும்
வனைகருங்கழல்வீரவாகுவுமற்றவன்படைதூண்டியே
நினையுமுன்னதுதொலைவுசெய்தனனிகரில்வானவர்புகழவே.

(இ - ள்.) வெம் அனிலம் படை - (தான் பிரயோகித்த) கொடிய வாயவ்யாஸ்திரம், வீறு அழிந்திட - வலிமைகெட, (அதுகண்டு), அவுணர்கோமகன் - அசுரராஜனான தாரகன், அம்புயன்தனது தொல் படை - பழமையான பிரமாஸ்திரத்தை, ஏவினன் - பிரயோகித்தான்: அது - அந்த அஸ்திரம், தணிவு இல் செற்றமொடு - அடங்காத உக்கிரத்துடனே, ஏகலும் - வருதலும்,—வனை கருங் கழல் வீரவாகுவும் - அணிந்த பெரிய வீரக்கழலையுடைய வீரவாகுவும்,—நினையும் முன் - (ஒன்றை மனத்தினால்) நினைக்கும்பொழுதுக்குமுன்னே [மிகவிரைவில],—அயன் படை தூண்டியே - அந்தப்பிரமாஸ்திரத்தையே பிரயோகித்து, நிகர் இல் வானவர் புகழ - ஒப்பில்லாத தேவர்கள் துதிக்கும்படி, அது தொலைவு செய்தனன் - அந்தத்தாரகனேவிய அஸ்திரத்தை அழித்தல்செய்தான்; (எ - று.)—மற்று - வினைமாற்று.

அநிலன்-வாயு: வடசொல். அம்புயன்-தாமரைமலரில் தோன்றியவன்; அம்புஜம் - வடசொல்: நீரிற் பிறப்பது. அம்புயன்படை - பிரமனைத்தெய்வமாகவுடையதும்,பகையைஎளிதிற்கொல்வதுமான அஸ்திரம். நினையும்முன் - யாதாயினுமொன்றை ஒருகால் நினைத்தற்கு வேண்டுஞ் சிறுபொழுதினளவினுள்ளே யென்றபடி. (எக)

அ0. ஆயதன்மைகள்கண்டுதாரகனற்புதத்தினனாகியே
மேயவானவர்படைகள்யாவையும்வீரன்மற்றிவன்வென்றனன்
மாயநீர்மையினிங்கிவன்றிறல்வன்மைகொள்ளுதுமினியெனத்
தீயபுந்தியிலினையவாறுதெரிந்துசிந்தனைசெய்துமேல்.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) ஆய தன்மைகள் கண்டு - அன்னமாகிய தன்மைகளையெல்லாம் பார்த்து. தாரகன்—,அற்புதத்தினன் ஆகி - ஆச்சரியமுடையவனாய், 'மேய வானவர் படைகள் யாவையும் - (நம்மிடத்திற்) பொருந்திய தேவாஸ்திரங்களெல்லாவற்றையும், வீரன் இவன் வென்றனன் - இந்த வீரன சயித்திட்டான்; இனி - இனிமேல், மாயம் நீர்மையின் - (நமது) மாயையின்தன்மையால், இங்கு - இவ்விடத்தில், இவன் - இவனது, திறல் வன்மை-கொடிய வல்லமையை, கொள்ளுதும் - வெல்வோம்', என - என்று, இனைய ஆறு - இந்தப்படி, தீய புந்தியில் - (தனது) கொடிய மனத்தில். தெரிந்து - ஆலோசித்து, சிந்தனை செய்து-எண்ணி. மேல் - பின்பு, (எ - று.)—'நவின்று' என வருக கவியோடு தொடரும். மற்று - வினைமாற்று.

திறல் வன்மை - ஒருபொருட்பன்மொழி. அற்புதம், புந்தி - அத்புதம், புத்தியென்னும் வடசொற்களின் விகாரம். கொள்ளுதல் - தன்வசப்படுத்துதல். கொள்ளுதும் - தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று; உ - சாரியை. இங்கு, செருக்கினாலாகிய உயர்வுப்பன்மை; அன்றியும், ஒவ்வொருவரும் தம்மைப்பற்றித் தாம் நினைக்கும்பொழுது பன்மையாகவே நினைத்தல் பெரும்பாலும் இயல்பு: இதனை நினைத்துக்காண்க. 'இனி'என்பது-எதிர்காலங்குறிப்பதோரிடைசசொல். நீர்மையின், இன் - மூன்றனுருபு, எது. (அ0)

அக. தொல்லைமாயையின்விஞ்சைதன்னைநவின்றுளங்கொடுதுண்
மல்லன்மேவருதாரகாசுரன்வடிவமெண்ணிலதாங்கியே[ணென
யெல்லைதீர்தருபடைவழங்கினனெங்குமாகியிருட்குழா
மொல்லைவந்துபரந்தபோலவனொருவனின்றமர்புரியவே

(இ - ள்.) மல்லல் மேவரு தாரகாசுரன் - வலிமைவளம் பொருந்திய அத்தாரகாசுரன், தொல்லை மாயையின் விஞ்சைதன்னை - பழமையான மாயைக்குஉரிய மந்திரத்தை, நவின்று - வாயினாற்கூறி, உளம் கொடு-மனத்தினாற் சிந்தித்து, (அதன்வல்லமையால்), துண்ணென - திடீரென்று, எண் இல வடிவம் தாங்கியே - அளவில்லாதனவாகிய உருவங்களைக் கொண்டு, எல்லை தீர்தரு படை வழங்கினன் - அளவில்லாத ஆயுதங்களைப் பிரயோகித்து,—இருள் குழாம் ஒல்லை வந்து பரந்த போல்-இருட்கூட்டங்கள் விரைவாகவந்து பரவியனபோல, எங்கும் அவன் ஒருவன் ஆகி நின்று-எவ்விடங்களிலும் தானொருவனேயாய்நின்று, அமர் புரிய-போர்செய்ய,—(எ-று.)— 'அதுகண்டு வானுளோர் கலங்கிஏங்கினர்' என அடுத்த கவியில் முடியும்.

மாயவிஞ்சை - மாயவித்தை. விஞ்சை - வித்யா என்னும் வடசொல்லின் சிதைவு; வித்யை, வித்தை, விச்சை, விஞ்சை எனக் காண்க. நவின்று உளங்கொள்ளுதல் - ஜபித்தல். கொடு - கொண்டு. "மல்லல் வளனே" என்ற தொல்காப்பியத்தால், மல்லல் என்பது - வளப்பமுணர்த்துவதோர்

உரிச்சொல்லெனத் தெரிகிறது. மல்லல் - இங்கே, செல்வவளமுமாம். இல - பெயர். பரந்த - பலவின்பாற்பெயர்; பரந்தது என்பதன் தொகுத்தலாகக் கொண் ம் உரைக்கலாம். நவின்று. நவில்-பகுதி. இல-பலவின்பாற்பெயர். நீர்தரு, ா - நிணைவினை. வழங்கினன் - முற்றெச்சம். தாரகன் கருநிற முடையவனாதலால், அவன் பலவடிவமாய்நின்றதற்கு இருட்குழாம்பரவுதல் உவமை கூறப்பட்டது. (அக)

அஉ. கண்டு மற்றது வானு ளோர்கள்க லங்கி யேங்கினர் முன்னரே, விண்டு நீளிடை நின்ற பூதர்வெ ருண்டு பின்னரு மோடினர், மண்டு பேரமர் செய்த யர்ந்திடு மான வீரரு மச்சமேற், கொண்டு நின்றனர் முறுவல் செய்தனர் குணலை யிட்டன ரவுணரே.

(இ - ள்.) அது கண்டு - அதனைப் பார்த்து, வான் உளோர்கள் - தேவர்கள், கலங்கி - மனங்கலங்கி, ஏங்கினர் - திகைத்தார்கள்; முன்னரே விண்டு நீள் இடை நின்ற பூதர் - இதற்குமுன்னமே (போர்க்களத்தை) விட்டுநீங்கி நெடுந்தூரத்திற்போய்நின்ற பூதகணத்தலைவர்கள், (இப்பொழுது), வெருண்டு - மிக அஞ்சி, பின்னரும் ஓடினர் - இன்னும் அப்பால் ஓடினார்கள்; மண்டு பேர் அமர் செய்து அயர்ந்திடும் - (முன்பு) நெருங்கிய மிக்கபோரைசெய்து சோர்வடைந்த, மானம் வீரரும் - (இயற்கையிற்) பெருமையையுடைய இலக்கத்தெட்டுவீரர்களும், அச்சம் மேல் கொண்டு நின்றனர் - பயத்தை முன்னினும் மிகுதியாகக்கொண்டு நின்றார்கள்; அவுணர் - அசுரர்கள், முறுவல் செய்தனர் - (மகிழ்ச்சியாற்) புன்சிரிப்புச்செய்து, குணலை இட்டனர் - (களிப்பால்) கொக்கரித்தார்கள்; (எ - று.)

குணலை - ஆர்த்தலும், வீராவேசத்தாற் கொக்கரித்தலும், கைதட்டிக் கூவுதலுமாம்; இது, குணலையென்றும், குணலையென்றும் வழங்கும். 'அது கண்டு' என்பதை, ஒவ்வொரு வாக்கியத்துக்கும் கூட்டுக. விண்டு, விள் - பகுதி. முன்னரே, ஏ - தேற்றம். விண்டு-நிலைகுலைந்து எனினுமாம். 'முன்னரே விண்டு நீளிடைநின்ற பூதர்' என்றது, கீழ் (கூ) - ஆங் கவியிற்கூறிய பூதவேந்தரை. அச்சம் - தொழிற்பெயர். மற்று - அசை. (அஉ)

வேறு.

அங. தார கப்பெய ரவுணர்கோன் மாயையின் சமரு
மாரு மச்சுறு கின்றது மாடன்மொய்ம் புடையோன்
பேர ழற்பொறி கதுவுற நோக்கியே பிறங்கும்
வீர பத்திர னெடும்படை யெடுத்தனன் விடுவான்

(இ - ள்.) தாரகன் பெயர் அவுணர் கோன் - தாரகனென்னும் பெயரையுடைய அசுரராசனது, மாயையின் சமரும் - மாயையாற்செய்யும் போரையும், ஆரும் அச்சுறுகின்றதும் - (அதுகண்டு தன்னினத்தவர்) எல்லாரும் அச்சமடைகின்றதையும், ஆடல் மொய்ம்பு உடையோன் - போர்த்திறமுள்ள தோள்களையுடையவனான வீரவாகு, பேர் அழல் பொறி கதுவுற - பெரிய நெருப்புப்பொறிகள் (கண்களினின்று) மிகுதியாப்பறக்கும்படி, நோக்கி - (கடுங்கோபத்தோடு) பார்த்து, பிறங்கும் வீரபத்திரன் நெடும் படை - விளங்குகிற பெரிய வீரபத்திராஸ்திரத்தை, விடுவான் எடுத்தனன் - (அவன் மேற்) பிரயோகிக்கும்பொருட்டு(க் கையில்) எடுத்தான்; (எ - று.)

வீரபத்திரன் - தக்ஷமுனிவனது யாகத்தை யழித்தற்பொருட்டுச் சிவபிரான் சங்கற்பித்தமாத்திரத்தில் அப்பெருமானது நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணினின்று தோன்றி அந்த யாகத்தைச் சின்னபின்னம்படஅழித்தவனும், அக்கடவுளின்வடிவமானவனும், ஆயிரந்தலைகளை யுடையவனுமான

பெருங்கோபமுடைய தேவன்; அவனைத் தெய்வமாகக்கொண்டதும் பகையை யழிப்பது மான அஸ்திரம், வீரபத்திராஸ்திரம்.

அச்சு - அஞ்சு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். அவுணர் சேனசமர் என இயையும். அச்சுறுகின்றது - நிகழ்காலத்தொழிற்பெயர். 'ஆடல்மொய்ம்புடையோன்' என்ற தொடர் - 'வீரபாகு' என்ற வடமொழிப்பெயரின் பரியாயமாய்நின்றது. விடுவான் - எதிர்காலவினையெச்சம்; வான் - காலங்காட்டும் விகுதி. 'வீர பத்ரன்' என்ற பெயர் - வீரர்களிற் சிறந்தவனென்று பொருள்படும்.

"விட்டிடலு மப்படைகள் விட்டருளி வெய்யன்,தொட்டபடை முற்றுமிகு துண்டமது கண்டான், மட்டி லுருவங்கொடு வளைந்து சமராடக், கட்டழகு கொண்டதொரு காளை யிது செய்தான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம்.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள் - இப்படலத்தின் முதற்கவி போன்ற கலிநிலைத்துறைகள். (௮௩)

௮௪. துங்கவுக்கிரச்சிம்புண்மாப்படையினைத்தூயோன்
செங்கைபற்றலுமன்னதுதாரகன்செயலா
லங்கணின்றிடுமாயைகண்டச்சமுற்றழுங்கிப்
பொங்குபானுமுன்னிருளெனமுடிந்ததப்பொழுதே.

(இ - ள்.) (இவ்வாறு), தூயோன் - பரிசுத்தகுணமுடையவனான வீரவாகு, துங்கம் - உயர்ந்த, உக்கிரம் - கொடிய, மா - பெரிய, சிம்புள் படையினை - சரபவடிவங்கொண்டவனான வீரபத்திரனது அஸ்திரத்தை, செம் கை பற்றலும் - (தாரகன்மேற் பிரயோகித்தற்காகச்) சிவந்த தன்கையிற் கொண்டவளவிலே,—அன்னது - அந்தஅஸ்திரத்தை, தாரகன் செயலால் அங்கண் நின்றிடு மாயை - தாரகாசுரனது செய்கையினால் அவ்விடத்தில் தோன்றிநின்ற மாயையானது, கண்டு - பார்த்து, அச்சம் உற்று - பயங்கொண்டு, அழுங்கி-வருந்தி, அப் பொழுதே—, பொங்கு பானு முன் இருள் என-விளங்குகின்ற சூரியனது முன்னிலையிலே இருள் அழிதல்போல,முடிந்தது - அழிந்தது; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் 'வீரபத்திரனெடும்படை' என்றதை இச்செய்யுளில் 'சிம்புள்மாப்படை' என்றது, சரபாவதாரஞ்செய்தவன் சிவபிரானது அம்சமான வீரபத்திரக்கடவுளே யாதலால். அவ்வரலாறு வருமாறு—மூவுலகத்துக்கும் பெருந்தீங்குசெய்துவந்த இரணியனை அழித்தற்குத் தேவர்கள்வேண்டுகோளினால் தோன்றிய திருமாலின் அவதாரமான நரசிங்கமூர்த்தி அவ்விரணியனை மார்புகீண்டு அழித்தபின்பு அவனது இரத்தமுழுவதையும் பருகி, அவனைச்சார்ந்த அசுரரனைவரையுந் தொலைத்து, உதிரமுண்டதனாலாகியவெறியினால் மயங்கித் தான் அனைத்துலகத்துக்கும் அழிவுசெய்யத் தொடங்கிவிட, அந்த அடங்காமிடுக்கைக் கண்டு விரைவில்உலகமழியுமென்று அஞ்சிய தேவர்கள் ஓடித் திருக்கைலாசஞ்சார்ந்து பரமசிவனைச் சரணமடைதலும், அக்கடவுள் அவர்கட்கு அபயமளித்து, தனது அம்சமான வீரபத்திரனை நோக்கி 'நீ சென்று நரசிங்கத்தின்செருக்கை யடக்கிவருவாய்' என்று நியமித்து அனுப்ப, அங்ஙனமே அக்கடவுள் மிகப்பெரியதொரு சரபவடிவங்கொண்டு சென்று எதிர்த்து நரசிங்கத்தின்வலிமையையடக்கி அதன்சிரத்தை யறுத்துத் தோலையுரித்துப் போர்த்துக்கொண்டு விளங்கினனெனக் காண்க. சரபம் - இரண்டு தலைகளையும், சிறகுகளையும், கூரியநகமுள்ள எட்டுக்கால்களையும், மேல்நோக்கியகண்களையுமுடையதொரு மிருக

விசேஷம்; இதனைப் பறவை யென்றலும் உண்டு. இது, சிங்கத்தை எளிதிற் கொல்லுந் திறமுடையது.

உக்ரம், ருநு - வடசொற்கள். ருநு என்ற பெயர், விளங்குகின்றவ னென்று உறப்புப்பொருள்படும். தாரகன்கொண்ட "மாயாரூபங்களையெல் லாங் கொலைக்கவல்ல படைக்கல மென்பது தோன்ற, 'துங்க வுக்கிரச் சிம் புள் மாப் படை' என்று விசேடித்துக்கூறினர். துங்கம் உக்கிரம் சிம்புள் - மிக்க கொடுமையை யுடைய சரப மென்னலாம். பொங்கு பானு - உதய சூரிய னென்றபடி. உவமையணி. (அச)

அரு. தன்புணர்ப்புறுமாயைதானுடைதலுந்தமியாய்
முன்புநின்றதோர்தாரகன்மொய்ம்புளான்றனைப
பின்புமாயையிற்படுத்தவோர்சூழ்ச்சியைப்பிடித்து
மின்பொலிந்ததன்றேரைவிட்டோடினன்விரைவில்

(இ - ள்.) தன் புணர்ப்பு உறு மாயைதான் உடைதலும் - தனது தந்தி ரத்தால் தோன்றிய மாயையானது (இவ்வாறு) அழிந்தவுடனே, தமி ஆய முன்பு நின்றது ஓர் தாரகன் - தனிப்பட்டவனாய் எதிரிலேநின்ற தன்மை யையுடைய ஒப்பற்ற அத்தாரகாசுரன், மொய்ம்பு உளான்தனை - வலிய தோள்களையுடையவனான வீரவாகுவை, பின்பும மாயையில் படுத்த-அதன் பின்பும் மாயையிலே அகப்படுத்துவதற்கு, ஓர் சூழ்ச்சியை பிடித்து - ஒரு தந்திரத்தை ஆலோசித்துக்கைப்பிடித்து, மின் பொலிந்த தன் தேரை விட்டு விரைவில் ஓடினன் - மின்னலபோன்றஒளி விளங்கப்பெற்ற தனது தேரை விட்டுஇறங்கி விரைவாகஓடினான்; (எ - று.)—தான் - அசை.

பின்பும் மாயையிற்படுத்துதலை, அஅ - ஆங் கவிமுதலிய ஐந்து கவிக ளிற் காண்க. 'நின்றதோர்தாரகன்' என்பதற்கு—கீழ் கரு - ஆங கவியில் 'கேட்டதோ ரமரர்கமியன்' என்றதற்கு உரைத்தது உரைக்க. மொய்ம்பு- வலிமையும், தோளும். இரட்டுறமொழிதலால், இருபொருளும் உடன்கொ ள்ளப்பட்டன. இனி, மொய்ம்புஉளான் - (தன்னினும் மிக்க) வலிமையை யுடையவனான வீரவாகுவென்றுங் கொள்ளலாம். மின்பொலிந்த-ஒளி மிக்க என்றபடி. (அரு)

அசு. தாரகன்றொலைந்தோடலுந்தனக்கிணையில்லோன்
போரழிந்துவென்னிட்டவன்றன்மிசைப்புத்தேள்
வீரவெம்படைவிடுபபதுவீரமன்றென்னாச்
சீரிதாகியதூணியுளன்னதைச்செறித்தான்.

(இ - ள்.) தாரகன் தொலைந்து ஓடலும் - (இவ்வாறு)தாரகாசுரன் பிற் பட்டு ஓடியவளவிலே,—தனக்கு இணை இல்லோன்-தனக்குஉவமைபெறாத வனானவீரவாகு,—'போர் அழிந்து வென் இட்டவன் தன்மிசை-யுத்தத்திலே தோற்று முதுகுகொடுத்தவன்மேல், புத்தேள் வெம் வீரன் படை - தெய்வத்தன்மையுள்ள கொடிய வீரபத்திராஸ்திரத்தை, விடுப்பது - பிரயோகிப் பது, வீரம் அன்று - பராக்கிரமத்திற்கு உரியதன்று', என்னா - என்று எண்ணி, அன்னதை - அந்தஅஸ்திரத்தை, சீரிது ஆகிய தூணியுள் - சிறப் புடையதான தனது அம்பறாத்தூணியினுள்ளே, செறித்தான் - வைத்திட் டான்; (எ - று.)

தூணி - தூணீஎன்ற வடசொல் ஈறு இகர மாயிற்று. வீரவாகுதேவ ரது தருமயுத்தத்தின் தகுதி இங்கு விளங்கும். வீரமன்று - வீரமாகாது. சீரி து - ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்; இ - சாரியை. (அசு

௮௭ அற்றபோர்வலித்தாரகன்பின்விரைந்தணுகிப்
பற்றிநாண்கொடுபுயந்தனைப்பிணித்தெனைப்பணித்த
கொற்றவேலவன்முனுய்க்குவன்யானெனக்குறித்து
மற்றவன்றனைத்தொடர்ந்தனனெடுந்திறல்வாகு.

(இ - ள்.) 'யான்-நான், அற்ற போர வலி தாரகன் பின்-அழிந்த போர்க்குரியவலிமையையுடைய தாரகனது பின்னே, விரைந்து அணுகி - விரைவாகப்போய்ச்சேர்ந்து, பற்றி - (அவனைப்) பிடித்து, நாண்கொடு - கயிற்றினால், புயந்தனை பிணித்து - (அவனது) தோள்களைக் கட்டி, எனை பணித்த கொற்றம் வேலவன்முன் உய்க்குவன்-(அவனுடன் போர்செய்யும்படி) எனக்குக் கட்டளையிட்ட வெற்றியைத்தரும வேலாயுதத்தையுடையவனான முருகக்கடவுளின் முன்னிலையிற் கொண்டுசேர்ப்பேன்', என குறித்து - என்று எண்ணி,—மற்று-பின்பு, நெடுந் திறல் வாகு- மிக்கவலிமையையுடையதோள்களையுடையவனான வீரவாகு, அவன்தனை தொடர்ந்தனன் - அவ்வசுரனைப் பின்தொடர்ந்துசென்றான்; (எ - று.)

'அற்றபோர்வலித்தாரகன்' என்றது.வடமொழிநடை; போர்வலியற்ற தாரகன் என மொழிமாற்றியுரைப்பினுமாம். நாண்கொடு - வில்நாணியால் என்றலும் ஒன்று; ("வினைத்தேரும் வயமாவும் வெம்பாகும் விழவெய்து வின்னாணினன், முனைத்தேர்முகத்திற் பிணித்தா னவன்சேனைமுகமாறவே" என்ற வில்லிபுத்தூரார்பாரதத்தைக் காண்க.) கொடு,எனை-தொகுத்தல். முன் - இடமுன். உய்க்குவன், கு - சாரியை. மற்றவன் என எடுத்து, எதிரியாகிய அவனெனினுமாம்; மற்று - அசையுமாம். நெடுந் திறல் வாகு - பெருமையையுடைய வீரவாகுவென்க. (௮௭)

௮௮. வேழமாமுகற்கிளவலையுன்னியேவீர
னாழிமால்கடலாமெனவார்த்துவைதணுகச்
சூழுமாயையினிருக்கையாந்தொல்கிரவுஞ்சப்
பாழியொன்சென்றொளித்தனன்றாரகப்பதகன்

(இ-ள்.) வீரன்-வீரவாகு, மா வேழம் முகற்கு இளவலை உன்னியே - சிறந்தயானைமுகமுடையவனான விநாயகக்கடவுளுக்குத் தம்பியாகிய முருகக்கடவுளைத் தியானித்துக்கொண்டே, ஆழி மால் கடல் ஆம் என ஆர்த்து - ஆழமுள்ளதான பெரியகடல்போல ஆரவாரஞ்செய்து, வைது - (அவ்வசுரனை) நிந்தித்துக்கொண்டு, அணுக - தொடர்ந்துவந்துசமீபித்தவளவிலே, —தாரகன் பதகன் - தாரகனாகிய தீவினையுடையவன்,—சூழும் மாயையின் இருக்கை ஆம் - சூழ்ந்துள்ள மாயைக்கு இருப்பிடமான, தொல் கிரவுஞ்சம் பாழி ஒன்று - பழமையான கிரௌஞ்சகிரியினது குகையொன்றிலே, சென்று ஒளித்தனன் - போய்மறைந்தான்; (எ - று.)

'வேழமுகன்' என்றதன் விவரம்:—மாகதனென்னும்முனிவனுக்கு விபுதையென்னும்அசுரப்பெண்ணினிடத்தில் யானைமுகமுடையவனாய்ப்பிறந்த கஜமுகாசுரனென்பவன் (இரணியன்போலத்) தேவர்களாலும் மற்றும் பலபிராணிகளாலும் தனித்தனி இறவாதபடி வரம்பெற்றுஅசகமின்றிச்செருக்கித் தன்னுடன்பிறந்த பலஅசுரர்களுடனே உலகத்தை மிகவருத்திவருகையில், தேவர்கள்வேண்டுகோளினால் அவனைக்கொல்லுதற்பொருட்டுச் சிவபிரான் யானைமுகமும் தெய்வப்பிறப்பும் பூதவடிவமுங் கொண்ட ஒரு புதல்வனை உண்டாக்கினர். அப்புதல்வனே விநாயகக்கடவுள். இவன், சிவபிரானது மூத்தமகன்; (இளையமகன், முருகக்கடவுள்.)

வேழமாமுகற்கு இளவல் - நான்கனுருபு, முறைப்பொருளது. ஆழி - ஆழ்ந்துள்ளது; ஆழ் - பகுதி, இ - கருத்தாப்பொருள்விகுதி: இனி, அழித்

தல்தொழிலுடையதென்றும், வட்டவடிவமானதென்றுங் கொள்ளலாம். வைதது, தோற்றுதலைப்பற்றி. சூழும் மாயை - ஆலோசித்துச்செய்யப் படும் மாயை யென்றும், (பகைவரைச்) சூழ்ந்துவருத்தும் மாயை யென்றும் உரைக்கலாம்.

'கடலாமென' என்பதில், ஆம் - அசை. இருக்கை - 'கை' விகுதிபெ ற்ற தொழிலாகுபெயர். (௮௮)

௮௯. முன்னமாங்கவன் போகியபூழையுண் முடுகிப்
பொன்னின்வாகையந் தோளுடையாண்டகைபுகலு
மன்னதோர்வரையகமெலாமாயிரங்கதிரின்
மன்னனேகுறாவிருணிலம்போன்றுவைகியதே.

(இ - ள்.) அவன் - அவ்வசுரன், ஆங்கு - அவ்விடத்தில் [கிரௌஞ்சகிரி யில்], முன்னம் போகிய - முற்பட்டுச் சென்ற, பூழையுள் - குகையினுள் ளே, பொன்னின் வாகை அம் தோள் உடை ஆண்தகை - பொலிவுபெற்ற வீரமுள்ள அழகிய தோள்களையுடைய ஆண்மைக்குணமுடையவனான வீர வாகு, முடுகி புகலும் - விரைவாக நுழைந்தவளவிலே, அன்னது ஓர் வரை அகம்எலாம் - அந்த ஒப்பற்ற மலையின் உள்ளிடம்முழுவதும், ஆயிரம் கதி ரின் மன்னன் ஏகுறா இருள் நிலம் போன்று வைகியது - ஆயிரங்கிரணங் களையுடைய தலைவனான சூரியன் (ஒருகாலும்) பிரவேசித்தறியாத இருள் நிறைந்த பாதாளலோகம்போன் றிருந்தது; (எ - று.)

'எலலாம்' என்பது, பொருளின்பன்மைகுறியாமல் ஒருபொருளின் பலஇடங் குறித்தது; எஞ்சாமைப்பொருளில்வந்த தென்க. கதிரின மன் னன - ஒளிக்குத் தலைவன. 'ஏகுறா' என்ற ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெ சசத்தில. ஏகு - பகுதி, உறு - துணைவினை. பூழை - புழையென்பதன் நீட் டல்; தனிமொழியுமாம். (௮௯)

௯௦. நீளுமாலிருள்படாதலுஞ்சில்லிடைநெறியாற்
றாளினொற்றியேபடர்ந்தனன்றாரகற்காணா
னாளிமொய்ம்புடைமேலையோனடுக்கலின்புணர்ப்பால்
மீளுகின்றதோர்நெறியையுங்கண்டிலன்வெகுண்டான்

(இ - ள்.) நீளும மால் இருள் படாதலும் - மிக்க பேரிருள் சூழ்ந்து கொண்டவளவிலே,—ஆளி மொய்ம்பு உடை மேலையோன - சிங்கம்போ ன்ற வலிமையையுடைய சிறந்தவனான வீரவாகு,—சில் இடை நெறியால - சிறிதுதூரஞ்செல்லுகின்ற இடையிலுள்ள வழியினால், தாளின ஒற்றியே - (கண்தெரியாததுபற்றிக்) கால்களால் தடவிக்கொண்டே, படர்ந்தனன் - தொடர்ந்துசென்று, தாரகன் காணான் - (அங்குத்) தாரகாசுரனைக் காணாத வனாய்,—அடுக்கலின் புணர்ப்பால் - அந்தக்கிரௌஞ்சகிரியின் மாயையால், மீளுகின்றது ஓர் நெறியையும் கண்டிலன் - திரும்பிவருதற்குரிய ஒரு வழியையுங் காணாதவனாய், வெகுண்டான் - கோபங்கொண்டான்; (எ - று.)

ஆளி மொய்ம்புடை மேலையோன் - சிங்கத்தின்வலிமைபோன்ற வலி மை யமைந்த தோள்களையுடைய பெரியோன் என்றும் கொள்ளலாம்; மொய்ம்பு - இரட்டுறமொழிதல். 'மீளிமொய்ம்புடைமேலையோன்' என்ற பாடம், 'வீரவாகு' என்றதன் பரியாயமாம்; மீளி - வீரம். மேலையோன் - மேலோன்; ஐ - சாரியை. ஆளி - யானையைக்கொல்வதும், துதிக்கையை யுடையதும், சிங்கம்போல்வதுமாகியதொரு யாளியெனனும் மிருகவிசேட முமாம். தாளின் ஒற்றி-கால்களால் தடவிக்கொண்டு, நெறியால் சில் இடை படர்ந்தனன் - (முன்பு காணப்பட்ட)வழியினாற் சிறிதுதூரம்போய் என்று பதவுரைகூறவுந் தகும். (௯௦)

கக. செற்றமிக்கவன்மாயையில்வரையெனச்சிந்தித்
துற்றகாலையிலவுணனாகியகிரவுஞ்சப்
பொற்றையன்னதுகண்டுமோகத்துயில்புரிந்து
மற்றவன்றனதுணர்வினைமையல்செய்ததுவே.

(இ - ள்.) செற்றம் மிக்கவன் - (இங்ஙனம்) கோபம் மிக்கவனான வீரவாகு, இவ்வரை மாயை என சிந்தித்து உற்ற காலையில் - இந்தமலை மாயையுடையதென்று எண்ணி அங்கு நின்ற சமயத்தில்,—அவுணன் ஆகிய கிரவுஞ்சம் பொற்றை - அசுரனாலவடிவமான அந்தக்கிரௌஞ்சமலை, அன்னது கண்டு - (வீரவாகுவினது) அந்தத்தோற்றத்தை யுணர்ந்து, மோகம் துயில் புரிந்து - மாயையினாலாகின்றதொரு மயக்கஞ்செய்யுந் தூக்கத்தை யுண்டாக்கி, அவன்தனது உணர்வினை மையல் செய்தது - அவனது அறிவை மயக்கியது; (எ - று.)

மற்று - அசை; பின்பு என்றுமாம். உற்ற-வருந்திய எனினுமாம்; இடையூறுற்ற வென்க. மையல்செய்தல் - மயக்கமடையும்படிசெய்தல். மையல்-மயல்: மொழிமுதற்போலி; "அஐ முதலிடை யொக்குஞ் சஞய முன்" என்ற நன்னூலைக் காண்க. இவ்வரை மாயை-பண்பியைப் பண்பாகக்கூறிய உபசாரவழக்கு; மாயை இம்மலையினாலாகியது என்று பொருள்கொள்ளலுமாம். கிரௌஞ்சனென்னும் அசுரனே அகத்தியமுனிவர்சாபத்தால் மலைவடிவமாயினனாதலால், 'அவுணனாகிய கிரவுஞ்சப்பொற்றை' எனப்பட்டது. செய்ததுவே - குற்றியலுகரம் உயிர்வரச் சிறுபான்மை கெடாது பொதுவிதியால் வகரவுடம்படுமெய் பெற்றது; "தனமுகமாகத் தானழைப்பதுவே" என்றாற்போல. (கக)

கஉ. இயலிசைத்தமிழ்முனிவரனிசைத்தசூளிசைவால்
வியனுடைத்திறல்வாகுவையவ்வரைமிகவு
மயலுடைப்பெருமாயமதியற்றலுமயங்கித்
துயிலலுற்றனன்றொல்லையினுணர்வெலாந்துறந்தே.

(இ - ள்.) இயல் இசை தமிழ் முனிவரன் - இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னும் முத்தமிழையும் வளர்த்த இருடிசிரேஷ்டரான அகஸ்திய மகாமுனிவர், இசைத்த - (முன்பு) சொன்ன, சூள் - சாபச்சொல்லின், இசைவால் - பொருத்தத்தால், அவ்வரை - அந்தக்கிரவுஞ்சமலை, வியல் உடை திறல் வாகுவை - விசாலமமைந்த வலியதோள்களை யுடையவனான வீரவாகுவை, மிகவும் மயல் உடை பெரு மாயமது இயற்றலும் - மிகுதியாக மயக்கத்தைத் தருகின்ற பெரிய மாயையைச் செய்தவளவிலே,—(அதனால் அவ்வீரவாகு), தொல்லையின் உணர்வு எலாம் துறந்து - பழமையாகவுள்ள தனது அறிவுமுழுவதையும் இழந்து, மயங்கி - மதிமயங்கி, துயிலல் உற்றனன் - தூக்கமடைந்தவனானான்; (எ - று.)

இயலிசைநாடகங்களுள், முந்தியஇரண்டைக் கூறியது - பிந்தியதற்கும் உபலக்ஷணம்; இனி, இசையில் நாடகமும் ஒருவாற்றால் அடங்குமென்க.

திரவிடம் என்னும் வடமொழி, தமிழ் எனச் சிதைந்துநின்றது; தமியென்னும் வினைப்பகுதியடியாப் பிறந்து, வினைமுதற்பொருளுணர்த்தும் விகுதி குன்றி, ழகரவொற்றுஎழுத்துப்பேறு பெற்று. தனக்குஇணையில்லாத பாஷை யெனப் பொருள்தருவதென்பாரும்; இனிமை யென்னும் பொருளுணர்த்தும் தமிழென்னுஞ்சொல், எல்லாப்பாஷைகளினும் இனியதாகிய இந்தப்பாஷைக்கு ஆகுபெயராய் வழங்கிற்று என்பாரும்; மற்றைப் பலபாஷைகளி லில்லாமல் தன்னிடத்தில்மாத்திரமே தனியாகவுள்ள ழகரமென்

னும் எழுத்தை யுடையது என அன்மொழித்தொகைக்காரணக்குறி யென் பாரும் உளர்.

பூர்வத்தில் மகாமுனிவர்கள் பலர் சேர்ந்து ஸம்ஸ்கிருதபாஷையை அபிவிருத்திசெய்பவராய்க் காசியில் வடமொழிச்சங்க மொன்று தாபித்து நடத்திவருகையில், அச்சங்கப்புலவருள் ஒருவராகிய அகத்தியனார், மற்றைப்புலவர்களோடு பலகாலுந் தருக்கஞ்செய்துகொண்டுவந்து ஒருநாள் அவர்களோடு மாறு கொண்டு, அவர்களிறுமாப்பை அடக்கும்பொருட்டுச் சிவபெருமானிடஞ் சென்று தம்கருத்தை வெளியிட்டுச் சற்றுநேரம் பேசிக்கொண்டிருக்கையில், தாம் நின்ற மண்டபமுழுவதும் திவ்வியபரிமளமொன்றுவீச, அகத்தியர் பரமசிவனை நோக்கி 'சுவாமி! இவ்வாசனை எது?' என்று வினவ, பரமசிவன் அவரை அம்மண்டபத்தின் ஓர் மூலைக்கு அழைத்துக்கொண்டுபோய், குவியலாய்ப் போட்டிருந்த சில ஏட்டுப்பிரதிகளைக் காட்டவே, அவற்றைக் கண்டமாத்திரத்தில மதுரமென்று அருத்தங்கொள்ளும் 'தமிழ், தமிழ்' என்னும் இன்பமான பெயரைச் சொல்ல, உடனே பரமசிவன் இந்தப் பாஷைக்கு ஆதாரவிதிகள் இவ்வேட்டுப்பிரதிகளி லுள்ளனவென்று எடுத்துக்கொடுத்து உபதேசிக்க, தத்க்ஷணமே தக்ஷிணத்திலுள்ள பொதியமலைக்குப் போய்த் தனிவாசஞ் செய்து அவ்விதிகளைக்கொண்டு பேரகத்தியம், சிற்றகத்தியம் என்னும் இலக்கணநூல்களை இயற்றி, அவற்றைத் தம்முதல்மாணாக்கராகிய தொல்காப்பியர் முதலிய பன்னிருவர்க்குங் கற்பித்தருளித் தமிழ்ப்பாஷையைத் தழைத்தோங்கச்செய்தன ரென்பது கதை யாதலால், அகத்தியரை 'இயலிசைத்தமிழ்முனிவரன்' என்றார்.

அகத்தியசாபத்தாற் கிரௌஞ்சகிரி பெருமாயைசெய்தலை, மேல்அசுரகாண்டத்துக் கிரவுஞ்சப்படலத்தில் "மாண்மதி பெறாத வெய்யோய் மறுநின் றொன்மை நீங்கி, நீண்மலை யாகி யண்டே நின்று நியவுணர்கெல்லா, மேண்டகு யிருக்கையாகி யிருந்தவத் தோர்க்கு மேனைச், சேண்மலி கடவுளோர்க்குந் தீத்தொழிலிழைத்தி பன்னாள்", "மாறபடு நமது பாணி வலிகெழு தண்டா லுன்றன், பாறபடு புழைகள் யாவும் பற்பல மாயைக் கெல்லா. மேற்புடை யிருக்கை யாக வெம்பிரா னுதவுஞ் செவ்வேள், வேற்படை தன்னிற் பின்னாள் விளிகுதி விரைவி னென்றான்" என்ற செய்யுட்களால் அறிக.

முனிவரன் - வடசொல். வியலுடைத்திறல்வாகு பெருமையையுடைய வீரவாகு என்றலுமாம். தொல்லையின், இன் - சாரியை. (கஉ)

கங. அயமலைக்கணேமுன்னவனுறங்கலுமனைய
செம்மலுக்கிளையோரிருநால்வருஞ்சிறந்த
தம்மினத்தரோரிலக்கருஞ்சாரதர்பலரும்
விம்மலுற்றனர்சிறையிலாபபறவையின்மெலிந்தார்.

(இ - ள்.) அ மலைக்கணே-அந்தமலையினுள்ளிடத்திலே, முன்னவன் - மூத்தவனான வீரவாகு, உறங்கலும - தூங்கிக்கிடந்தவளவிலே,—அனைய செம்மலுக்கு இளையோர் இரு நால்வரும் - அந்தவீரனுக்குத் தம்பிகளாகிய எட்டுப் பேரும், சிறந்த தம் இனத்தர் ஓர் இலக்கரும் - சிறப்புற்ற அவர்களினத்தவராகிய லக்ஷவீரர்களும், சாரதர் பலரும் - பூதவீரர்கள் பலரும், விம்மல் உற்றனர் - (வீரவாகுவைக் காணாமையாற்) கலக்கமடைந்தவர்களாய், சிறை இலா பறவையின் மெலிந்தார் - இறகிழந்த பறவைகள்போல வருந்தினார்கள்; (எ - று.)

செம்மல் - நன்மைக்குணமுடையவன்; ஆடவரிற் சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். உவமையணி. பறவைக்குச் சிறகு இன்றியமையாத

தாதல்போல வீரவாகு மற்றைவீரர்கட்கெல்லாம் இன்றியமையாதவ னென்பது உவமையால் விளங்கும். 'சாரதர்' என்றது பூதவீரர்களில் இறந்தவர்போக மிச்சமாய்த் தோற்றோடிய பூதகணத்தலைவர்களை. (கங)

கச. உடைந்துபோயினதாரகன்றன்னைநம்முரவோன்
றொடர்ந்துசென்றனன்மீண்டிலனவனொடுந்துன்னி
யடைந்துவெற்பினிற்போர்புரிவான்கொலோவங்கட்
படர்ந்துநாடுதும்யாமுமென்றெண்ணினர்பலரும்

(இ - ள்.) உடைந்து போயின தாரகன் தன்னை - தோற்றோடிய தாரகாசுரனை, நம் உரவோன் - நமது தலைவனான வீரவாகு, தொடர்ந்து சென்றனன் - பின்தொடர்ந்துபோயினான்; (அங்ஙனம்போனவன்) மீண்டிலன் - திரும்பிவந்தானில்லை: அவனொடும - அவ்வசுரனுடனே, துன்னி அடைந்து - நெருங்கிச்சேர்ந்து, வெற்பினில் - கிரௌஞ்சகிரியிலே, போர் புரிவான் கொல் - யுத்தஞ்செய்கின்றனனோ? (அறியோம்) யாமும் - நாமும், அங்கண் படர்ந்து - அவ்விடத்துச் சென்று, நாடுதும் - தேடுவோம், என்று—, பலரும் - (வீரர்கள்) எல்லாரும், எண்ணினர் - ஆலோசித்தார்கள்; (எ - று.)

உரவோன் - வலிமையையுடையவன்; உரம் அல்லது உரவு - வலிமை இங்கே, வலிமையென்றது - தேகபலம், மனோபலம், புத்திபலம், சேனாபலம், ஆயுதபலம், தெய்வபலம் முதலிய பலவகைவலிமைகளையுங் குறிக்கும். நாடுதும் - தன்மைப்பன்மைமுற்று. 'யாமும்' என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சம். 'பலரும்' என்ற உம்மை - முற்றுப்பொருளது. மீண்டிலன் - ஆண்பாலெதிர்மறை இறந்தகாலமுற்று. (கச)

கரு எண்ணியேயிசைந்திளையரோரெண்மருமிலக்க
நண்ணுமவீரரும்பாரிடநாதன்னுணையவரு
மண்ணல்வான்படையேந்தியேயாயிடையகன்று
விண்ணுலாவுறுகிரவுஞ்சமெய்தினர்விரைவில்.

(இ - ள்.) எண்ணி - (இவ்வாறு) ஆலோசித்து, இசைந்து - (அங்ஙனஞ் சென்று தேடுதற்கு யாவரும் ஒருங்கே) சம்மதித்து, இளையர் ஓர் எண்மரும் - (வீரவாகுவின்) தம்பிமாரான எட்டுப்பேரும், இலக்கம் நண்ணும வீரரும் - லக்ஷமென்னுந்தொகையைப் பொருந்திய வீரர்களும், பாரிடநாதன்னுன் நாயகரும் - பூதகணத் தலைவர்களும், அண்ணல் வான் படை ஏந்தி - சிறப்பையுடைய பெரிய ஆயுதங்களைக் கைகளில்எடுத்துக்கொண்டு, ஆயிடை அகன்று - அவ்விடத்தினின்று நீங்கி, விரைவில் - விரைவாக, விண் உலாவுறு கிரவுஞ்சம் எய்தினர் - ஆகாயத்தையளாவிவளர்ந்துள்ள கிரௌஞ்சகிரியை அடைந்தார்கள்; (எ - று.)

'இலக்கம் நண்ணும் வீரரும்' என்பதற்கு, நண்ணும் - நெருங்கிச்சேர்ந்துள்ள, இலக்கம்வீரரும் என்றும் பதவுரை கொள்ளலாம். அ + இடை = ஆயிடை. செய்யுளிற் சுட்டுநீண்டவிடத்து யகரவுடம்படுமெய்தோன்றிற்று; [நன் - உயிர் - கரு.] வீரவாகுவிற்குத் தாம் போர்த்துணையாகுமாறு கருதி, சிறந்தபடைக்கலங்களையெடுத்துச்சென்றன ரென்க. நாயகர் - வடசொல்.

கசு. ஆயவெற்பினில்வீரவாகுப்பெயரடலோன்
போயபூழையுண்மற்றவர்யாவரும்புகலுந்
தீயதொல்வரைமுன்னவற்கிழைத்திடுதிறம்போன்
மாயமெண்ணிலபுரிதலுமயங்கியேவதிந்தார்

(இ - ள்.) ஆய வெற்பினில் - அந்தக் கிரௌஞ்சகிரியிலே, வீரவாகு பெயர் அடலோன் போய பூழையுள் - வீரவாகுவென்னும் பெயரையுடைய

வீரன் (முன்பு) நுழைந்துசென்ற குகையினுள்ளே, மற்றவர் யாவரும் புகுதலும் - (அவனைத்தேடிச்சென்ற) மற்றையோரனைவரும் பிரவேசித்தவளவிலே. நீய தொல்வரை - கொடிய பழைய அத்தமலை, முன் அவற்கு இழைத்திடு திறம்போல் - முன்பு அநதவீரவாகுவுக்குச் செய்த தன்மை போலவே, (இத்தமரனையோர்க்கும்), எண் இல மாயம் புரிதலும் - அளவில்லாதனவான மாயைகளைச் செய்தவளவிலே, மயங்கியே வதிந்தார் - (அவர்களெல்லாரும் அங்கு) மயக்கமடைந்திருந்தார்கள்; (எ - று.)

கிரவுஞ்சகிரி வீரவாகுவுக்குச் செய்த மாயைசெயல், கீழ் ௬௦ - ஆங் கவி முதலிய மூன்று கவிகளில் விளக்கப்பட்டது. முன்னவற்கு என ஒரு பெயராக எடுத்து, தலைவனான வீரவாகுவுக்கு என்று பொருள்கொள்ளினும் அமையும். முன்னே புகுந்தவனான வீரவாகுவுக்கு என்றலுமாம்: அன்றி, மூத்தவனான வீரவாகுவுக்கு என்று பொருள்கொள்ளுதல் பொருந்தாது; வீரவாகு - எண்மர் வீரர்க்கு மாத்திரம் முன்தோன்றியவனும், இலக்கம் வீர முதலியோர்க்குப் பின்தோன்றியவனு மாதலால். வீரவாகுவென்பது உயர்திணைச்சொல்லாயினும், அது பொருளையுணர்த்தாமற் பெயர்மாத்திரத்தையுணர்த்தியதனால், அதன்முன் 'வீரவாகுப்பெயர்' என வலி மிகாதாயிற்று; "ஒருவனொருத்திப்பெயர்மேலெண்ணில" என்ற சூத்திரத்தில் 'ஒருத்திப் பெயர்' என்றதிற்போல; "சிலவிகாரமா முயர்திணை" என்றதில் அடக்குதலுமாம். வதிதல் - வசித்தல். இரண்டாமடியில், 'மற்று' என்றதை அசையாக்கி, அவர் யாவரும் - அவர்களெல்லாரும் என்றுங் கொள்ளலாம். இல - பலவின்பாற்பெயர். அடல்-போர், வலிமை, வெற்றி, கொல்லுதல்; அதனையுடையவன் - அடலான்: பெயரில் னகரவீற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று.

௬௭. வெற்றிவீரவாகுப்பெயரண்ணலும்வீரர்
மற்றியாவருமயங்கலுந்தாரகன்வாரா
வுற்றுநோக்கிநம்மாயையாலிவரெலாமொருங்கே
யிற்றுளாரெனாமகிழ்ந்துமால்வரைமிசையெழுந்தான்.

(இ - ள்.) வெற்றி - சயத்தையுடைய, வீரவாகு பெயர் அண்ணலும் - வீரவாகுவென்னும்பெயரையுடைய தலைவனும், வீரர் மற்று யாவரும் - மற்றை வீரர்களெல்லாரும், மயங்கலும் - (இவ்வாறு அம்மலைக்குகையினுள் அதன்மாயைகளால்) மயங்கிக்கிடந்தவளவிலே, தாரகன் —, வாரா - வந்து, உற்று நோக்கி - (இவர்களை) நன்றிப்பார்த்து, 'நம் மாயையால் - நமது தந்திரத்தால், இவர் எலாம் - இவர்களெல்லாரும், ஒருங்கே இற்றுளார் - ஒருசேர அழிந்தனர்', எனா - என்றெண்ணி, மகிழ்ந்து - சந்தோஷித்து, மால் வரைமிசை எழுந்தான் - பெரிய அந்த மலையின்மீது வெளிப்பட்டான்; (எ-று.)

இங்கே, 'நம்மாயை' என்றது, தான் புறங்கொடுத்தோடி மலைக்குகையினுள் ஒளித்ததனையை. வெற்றி - 'றி' விகுதி பெற்ற தொழிற்பெயர்; வெல்-பகுதி. வாரா - உடன்பாட்டுவினையெச்சம், வா - பகுதி, ர் - விரித்தல்விகாரம். மற்று + யாவர் = மற்றியாவர்; [நன் - உயிர் - ௩௪.] குற்றியலிகரம்; [நன் - எழுத்து - ௯௩:] மாத்திரை, கால்; [நன் - எழுத்து - ௬௪.]　　(௬௭)

௬௮. அண்டமீமிசைநின்றவானவர்களிவ்வனைத்துங்
கண்டுகட்புனல்பனிவரவாற்றிபேகலங்கிக்
கொண்டதுன்பொடுபதைபதைத்தோடினர்கூளித்
தண்டம்யாவையும்வெருவினதலைவரின்மையினால்

(இ - ள்.) அண்டம் மீ மிசை நின்ற-ஆகாயத்தின்மீது நின்ற, வானவர்கள் - தேவர்கள், இவ் அனைத்தும் கண்டு - இவையெல்லாவற்றையும் பார்த்து, கண் புனல் பனி வர - கண்களினின்று நீர் துளிக்க, ஆற்றி - கதறி,

கலங்கி - கலக்கமடைந்து, கொண்ட துன்பொடு - அடைந்த துன்பத்துடனே, பதைபதைத்து ஓடினர் - மிகநடுங்கி ஓடிப்போனார்கள்; கூளி தண்டம் யாவையும் - (முன்னமேதரையில்விழுந்துகிடக்கின்ற) பூதகணங்களெல்லாம்,—தலைவர் இன்மையினால் - (தங்கட்குத்) தலைவரொருவரும் இல்லாமையால், வெருவின - மிகஅஞ்சின; (எ - று.)

அண்டம்,தண்டம்-வடசொற்கள்.தண்டம்-சேனை.மீ-மேல்.மிசை-மேல்; இவ்விருசொற்களும் 'மீமிசை' என ஒருபொருட்பன்மொழியாகத் தொடர்ந்தன; [நன்-பொது-௬௭.] இவ்வாய்பாடுபற்றி ஒருபொருட்பன்மொழிக்கு 'மீமிசை' என்று பெயர்வழங்குதலும் உணர்க. இனி, மீ மிசை - மிக மேலே என்று பொருள்கொள்ளலுமாம். இவ் - வகரமெய்யீற்றுப் பலவின்பாற் சுட்டுப்பெயர் "வவ்விறு சுட்டு." இ அனைத்தும் என்றும் பதம்பிரிக்கலாம்; வகரவுடம்படுமெய் தனிக்குறில்முன் உயிர்வர இரட்டியதாம். பனிவர - பனிக்க: பனிபோலததுளிக்க; இதில்,வா - துணைவினை யென்னலாம். பதைபதைத்து - இரட்டைக்கிளவி; [நன் - பொது - ௬௫] தலைவர் - தலைமை யென்ற பண்பி னடியாப் பிறந்த பெயர். (௯௮)

௯௯. மலையின் மீமிசையெழுதருதாரகன்மற்றோர்
தலைமையாகியவிரதமேல்கொண்டுதானவர்கள்
பலரும்வந்துவந்தார்த்தனர்சூழ்தரப்பைம்பொற்
சிலையதொன்றினைவாங்கியேசெருநிலஞ்சென்றான்.

(இ - ள்.) மலையின் மீமிசை எழுதரு-அந்தமலையின்மீது வெளிப்பட்ட, தாரகன்—,தலைமை ஆகிய மற்று ஓர் இரதம் மேல் கொண்டு - சிறப்புப்பெற்றதான வேறொருதேரின்மேல் ஏறி, தானவர்கள் பலரும் வந்து வந்து ஆர்த்தனர் சூழ்தர - அசுரர்கள்பலரும் மேன்மேல்வந்து ஆரவாரஞ்செய்து கொண்டு (தன்னைச்)சூழ, பைம் பொன் சிலைஅது ஒன்றினை வாங்கியே - பசும்பொன்மயமான வில்லொன்றை வளைத்துஎடுத்துக்கொண்டு, செரு நிலம் சென்றான் - அப்போர்க்களத்தைச் சென்று அடைந்தான்; (எ - று.)

பைம்பொன்சிலை - பசும்பொன்னிறமான வில் என்றும். பொன்போல் அருமையான வில் என்றுங் கொள்ளலாம். வந்துவந்து - அடுக்கு, மிகுதிப்பொருளது; வந்து உவந்து எனப்பிரித்து, வந்து மகிழ்ச்சிகொண்டு எனப் பொருள்கொள்ளவும் அமையும். எழுதரு, தா - துணைவினை. மற்றோர் இரதம் - முன்பு தான் ஏறிநிற்கப்பெறாத தேர். பசுமை+பொன் = பைம்பொன்: "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திர விதி. 'சிலையது' என்றதில், 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி. (௯௯)

௬00. நீடுதன்சிலைநாணொலிகொண்டுநீள்சரங்கள்
கோடிகோடிமற்றொருதொடையாகவேகொளுவி
யாடல்சேர்தருபூதர்மேற்பொழிதலுமலமந்
தோடலுற்றனர்திசையினும்விண்ணினுமுலைந்தே

(இ - ள்.) (அங்ஙனம் போர்க்களஞ்சேர்ந்த தாரகன்), நீடு தன் சிலை நாண் ஒலி கொண்டு - நீண்ட தனதுவில்லின்நாணியின் ஒலியையுண்டாக்கி, மற்று - பின்பு, நீள் சரங்கள் கோடி கோடி - நீண்ட பலகோடிக்கணக்கான அம்புகளை, ஒரு தொடை ஆகவே கொளுவி - ஒரேதொடர்ச்சியாகத் தொடுத்து, ஆடல் சேர்தரு பூதர்மேல் - வலிமைபொருந்திய பூதகணங்களின்மேல், பொழிதலும் - சொரிந்தவளவிலே,—(அவர்கள்), அலமந்து - மனஞ்சுழன்று, உலைந்து - வருந்தி, திசையினும் - எட்டுத்திக்குக்களிலும், விண்ணினும் - ஆகாயத்திலும், ஓடல்உற்றனர் - ஓடிப்போனார்கள்; (எ - று.)

கோடி - நூறுலக்ஷம்; பலவென்னும்மாத்திரையாய் நின்றது. ஒருதொடையாகவே கொளுவி - தொடுக்குந்தரமொவ்வொன்றிலும்அமையத் தொடுத்து. தொடை - தொடுத்தல். கொளுவி, கொள் என்பதன் பிறவினையான கொளுவு - பகுதி. கோடி கோடி - அடுக்கு, பன்மைப்பொருளது; கோடியினும்பெருகிய கோடி யென்றுங் கொள்ளலாம். அப்பொழுதும் மிகுதியையுணர்த்துவதே. திசையின், விண்ணின் என்றவற்றில், இன்-ஏழனுருபு. உலைந்து - நிலைகுலைந்து எனினுமாம. ஸரம் - வடசொல். அலமந்து. அலமா - பகுதி. ஓடலுற்றனர் - ஓடுதலையடைந்தார்கள்.

"மெத்து முருவத் தவுணன்மீது விட வீர, பத்திரனெனும்படை பரித்திடலுமாயக், கொத்தற வுடன் றனிமைகூடி யொருபாயஞ், சித்தமிசை கொண்டு விசும்பிசை சென்று", "மற்றது தெரிந்திடலும் வாகைபுனை வாகு, சுற்றமொடு தம்பியர்கள் தோன்றுக தெரித்த, பொற்றேர் புகவாண்டு மயல் பூண்டனர் கிடந்தா. ரற்றமது சூரிளவ லன்னது தெரிந்தான்", "தெரிந்து மகிழ்வாகி யொருதேரின்மிசை யேறி, யருந்திறல்கொள் தண்டமொ டமர்க்கள மடைந்தே, விரிந்து செறி பூதர்மிசை வெங்கணைகள் சிந்த, விரிந்தனர்க ளும்பரினு மிம்பரினு மன்றோ" என்பன, கந்தபுராணச்சுருக்கம். (௧00)

௧0௧. ஆனகாலையினாரதனினையகண்டழுங்கி
மேனிதுண்ணெனவியர்ப்புறவழிக்கொடுவிரைந்து
போனவிண்ணவர்தம்மொடுசென்றுபுத்தேளிர்
சேனைகாவலனின்றதோர்கடைக்கூழைசேர்ந்தான்

(இ - ள்.) ஆன காலையில் - அங்ஙனமான அச்சமயத்தில்,—நாரதன் - நாரதமகாமுனிவன்,—இனைய கண்டு அழுங்கி - இத்தன்மைகளைப்பார்த்து வருந்தி, மேனி துண்ணென வியர்ப்பு உற - உடம்பு திடுக்கென்று வேர்வை கொள்ள, வழிக்கொடு - பிரயாணப்பட்டு, விரைந்து - விரைவாய், போன - சென்ற, விண்ணவர்தம்மொடு - தேவர்களுடனே, சென்று - (தானும்) போய், புத்தேளிர் சேனை காவலன் நின்றது ஓர் கடைக்கூழை சேர்ந்தான் - தேவர்களுடைய சேனைக்குத் தலைவனான முருகக்கடவுள் இருந்த ஒப்பற்ற பிற்படையை அடைந்தான்; (எ - று.)

'இனைய கண்டு அழுங்கி, மேனி துண்ணென வியர்ப்புற, வழிக்கொடு, விரைந்து' என்றவற்றை நாரதனது தன்மைகளாகவும் உரைக்கலாம். வியர்ப்பு உறுதல் - வேர்த்தலையடைதல்; உடம்புவியர்வையடைதலில்லாத இயல்பையுடைய தேவர்க்கும், அச்சமிகுதியால் தெய்வத்தன்மைகுலைந்து உடல் வெயர்த்ததென்க. வழிக்கொடு - வழிக்கொண்டு; வழிக்கொள்ளுதல் - புறப்பட்டு வழிநடத்தல். 'புத்தேளிர்' என்ற பெயரில், இர் - பலர்பால்விகுதி. முருகக்கடவுள், தேவசேனாபதியாதலால், 'புத்தேளிர்சேனைகாவலன்' எனப்பட்டான். கடைக்கூழை - பின்னணிச்சேனை. 'அனையகண்டு' என்றும் பாடமுண்டு. காவலன் - கா வலன்: காத்தலில் வல்லவன்; அன்றி, காவல் அன் - காத்தலையுடையவன். (௧0௧)

௧0௨. அரிதுமாதவம்புரிதருநாரதனடலின்
விரவுமாயிரம்பூதவெள்ளத்தொடுமேவுங்
கருணைசேரறுமுகத்தனைக்கண்டுகண்களித்துச்
சுரர்களோடுபோயிறைஞ்சியேயினையனசொல்வான்.

(இ - ள்) அரிது மா தவம் புரிதரு - (மற்றையோர்க்கு) அரியதான பெருந் தவத்தைச் செய்த, நாரதன்—, அடலின் விரவும் ஆயிரம் பூதம் வெள்ளத்தொடு மேவும் - வலிமையோடுபொருந்திய ஆயிரவெள்ளம் பூத

கணத்துடனே கூடியுள்ள, கருணை சேர் அறுமுகத்தனை - (உயிர்களிடத்துத்) திருவருளமைந்த ஆறுதிருமுகங்களையுடையவனான முருகக்கடவுளை, கண்டு - தரிசித்து, கண் களித்து - கண்கள் களிக்கப்பெற்று, சுரர்களோடு போய் இறைஞ்சி - தேவர்களுடனே அருகிற்சென்று வணங்கி, இனையன சொல்வான் - இவ்வார்த்தைகளைக் கூறுவான்; (எ - று.)—அவற்றை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

சிவபிரானால் தலையளிப்பப்பட்ட இரண்டாயிரவெள்ள பூதகணங்களில் ஓராயிரவெள்ளத்தைக் குமாரக்கடவுள் வீரவாகுவினுடன் செலுத்தி மற்றோராயிரவெள்ளத்தைப் பின்வருமாறு தன்னுடன் நிறுத்தியுள்ளாராதலால், 'அடலின்வீரவ மாயிரபூதவெள்ளத்தொடு மேவு மறுமுகத்தனை' என்றார். 'கருணைசேர் அறுமுகத்தன்' என்றதில், அகத்திலுள்ள கருணை முகத்தில் வெளியாந் தன்மை தோன்றும். ஸுரர் - வடசொல்; (பாற்கடல் கடைந்தபொழுது அங்குநின்று உண்டானதொரு சிறந்த) சுரையை [மதுவை]ப் பானஞ்செய்தவ ரென்பதுபற்றிய காரணப்பெயர்; "வாருணி நறவமபிறந்தது பின்னர் மற்றது நுகர்தலால் தேவர், சீர்கெழு சுராராயினரஃதுண்ணா அசுரராயினர்" என்பது கூர்மபுராணம். "செயற்கரிய செய்வார் பெரியர்" என்பவாதலால், 'அரிது மாதவம் புரிதரு நாரதன்' என்றார்; அத்திருக்குறளினுரையிற் பரிமேலழகர் 'செயற்கரியவாவன - இயமம், நியமம் முதலாய எண்வகை யோகவுறுப்புக்கள்' என்றமை உணர்க. கண்களித்தல் - சேதநிரானந்தமடைதல். இனையன - பெயர். (௧௦௨)

௧௦௩. ஐயநின்படைவீரர்கள்பெருஞ்சமராடி
வெய்யதானவர்தானைகள்வரவரவீட்டிச்
செய்யமந்திரித்தலைவரையமைச்சரைச்செற்றுப்
பொய்யின்மொய்ம்புடைத்தாரகனுடன்றனும்பொருதார்.

இதுமுதல நான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஐய - சுவாமீ! நின படை வீரர்கள் - உனது சேனைவீரர்கள், பெருஞ் சமர் ஆடி - பெரிய போரை ஊக்கத்தோடு செய்து, வெய்ய தானவர் தானைகள் வர வர வீட்டி - கொடியஅசுரர்துசேனைகளை வருந்தோறும் அழித்து, செய்ய மந்திரி தலைவரை அமைச்சரை செற்று - (தாரகாசுரனது) நன்மைக்குணமுடைய மந்திரிசிரேஷ்டர்களையும் சாமானியமந்திரிகளையும் அழித்து, பொய் இல் மொய்ம்பு உடை தாரகன்தன்னொடும் பொருதார் - பொய்படுதல் [தவறுதல்] இல்லாத வலிமையையுடைய தாரகாசுரனோடும் போர்செய்தார்கள்; (எ - று.)

மந்திரிகட்குச் செம்மையாவது - அரசனுக்கும் குடிகளுக்கும் அநுகூலமாக நடத்தல் முதலியன. மந்த்ரம் - ஆலோசனை; அதனையுடையவன், மந்த்ரீ: இவ்வடசொல், மந்திரி யெனத் திரிந்தது. 'தந்திரத்தலைவர்' என்று பாடமாயின், சேனைத்தலைவ ரென்க. பொய்யின் மொய்ம்பு என எடுத்து, மாயையின் வலிமை யென்றும் பொருள்கொள்ளலாம்; பொய் - வஞ்சனை, மாயை. செற்று, செறு - பகுதி. (௧௦௩)

௧௦௪. தலைக்கணாகியவீரனுந்தம்பியர்பிறரு
மிலக்கவீரரும்பாரிடத்தலைவர்கள்யாரும்
புலைக்கொடுந்தொழிற்றாரகன்றன்னொடும்பொரத்தன்
மலைக்கணுய்த்தனனவர்தமைச்சூழ்ச்சியின்வலியால்.

(இ - ள்.) தலைக்கண் ஆகிய - (யாவர்க்கும்) தலைமையான நிலைமையிற் பொருந்திய, வீரனும் - வீரவாகுவும், தம்பியர் பிறரும் - (அவனது) தம்பி

மாரான மற்றையெட்டுவீரர்களும், இலக்க வீரரும் - லக்ஷம்வீரர்களும், பாரிடம் தலைவர்கள் யாரும - பூதகணத்தலைவர்களனைவரும், புலை கொடுந் தொழில் தாரகன்தன்னொடும் பொர - இழிவான தீசெயல்களையுடைய தாரகாசுரனுடனே போர்செய்ய, (அவன்), சூழ்ச்சியின் வலியால் - (தனது) தந்திரத்தின் வல்லமையால், அவர்தமை - அவர்களெல்லாரையும், தன் மலைக்கண் உய்த்தனன் - தனக்குஅரணாகவுள்ள கிரௌஞ்சகிரியினுட் சேர்த்தான்; (எ - று.)

தலைக்கண, மலைக்கண் என்பவற்றில், கண் - ஏழனுருபு. தம்பியென்பதில், தாம் - பகுதி, முதல் குறுகிற்று. பி - முறைப்பெயர் விகுதி; இனி,'தம்முன்' என்பது தமக்குமுன்பிறந்தவனான தமையனைக் குறிப்பதுபோல, தமக்குப்பின்பிறந்தவனைக் குறிக்கின்ற 'தம்பின்' என்னும் பெயர் தம்பியென மருவிவழங்கியதென்று கொள்வாரும் உளர். புலை - புன்மை: 'ஐ' விகுதி பெற்ற பண்புப்பெயர். மலை - (கண்டவர்களால்) மலையப்படுவதென்ற காரணப்பொருள்படும்; மலைதல் - அஞ்சுதல்: செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்டதென்க. (௧௦௮)

௧௦௯. உய்த்தகாலையிலவுணனாகியகிரவுஞ்ச
மெத்துமாயைகளனையவர்க்கிழைத்தலுமவெருவிப்
பித்தராமெனமயங்கினர்போலுமாற்பின்ன
ரித்திறந்தனையுணர்ந்தனன்றாரகனென்போன்.

(இ - ள்.) உய்த்த காலையில - (அங்ஙனஞ்) சேர்த்த பொழுதில், அவுணன் ஆகிய கிரவுஞ்சம் - அசுரனாகிய கிரவுஞ்சகிரி, மெத்து மாயைகள் - மிக்க மாயைகளை, அனையவர்க்கு இழைத்தலும - அவர்கட்குச் செய்தவளவிலே, (அவர்களெல்லாரும்), வெருவி - அஞ்சி, பித்தர் ஆம் என மயங்கினர் போலும் - பைத்தியங்கொண்டவர்போல மயங்கினார்கள்; பின்னர் - அதன் பின்பு, தாரகன் என்போன் - தாரகனென்னும்அசுரன், இத்திறந்தனை உணர்ந்தனன் - (அவர்களனைவரும் மயங்கிக்கிடக்கின்ற) இத்தன்மையை அறிந்தான்; (எ - று.)

மெத்துமாயை - வினைத்தொகை; 'மெத்து' என்னும வினைப்பகுதியினடியாய்ப் பிறந்த 'மெத்த' என்னுஞ் செயவெனெச்சம், விகுதியாக என்ற பொருளில் வழங்குமாறுங் காண்க. ஆம், ஆல் அசைகள். போலும் - ஒப்பில் போலி: அதாவது - உவமைப்பொருளுணர்த்தாத 'போல்' என்னுஞ் சொல்; இது, உரையசைப்பொருள்தாய்நிற்கும்: இதனை வாக்கியாலங்காரமென்பர் வடநூலார். 'மங்கலமென்பதோரூருண்டுபோலும்,' "செருப்புழற்சேர்த்தக் கால் செய்போல்வதூஉம், எரிப்பசுட் டெவ்வநோயாக்கும்" என்றவிடங்களிற் காண்க. இயற்கையறிவையிழத்தல் பித்தரியல் பாதலால், அவரை உவமைகூறினர். என்போன் - என்று சிறப்பித்துக் கூறப்படுபவன்; "இல்வாழ்வானென்பான்" என்றவிடத்திற்போல, செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை: "ஊரெனப்படுவது உறையூர்" என்றாற்போலச் சிறப்புத்தோன்ற நின்றது. இனி, 'என்போன்' என்பதை முதல்வேற்றுமைச் சொல்லுருபாகவுங் கொள்ளலாம். உய்த்தல் - உட்புகுவித்தல். (௧௦௯)

௧௧௦ தெரிந்துதாரகன்மகிழ்வொடுபறந்தலைசென்று
துரந்துநம்பெருந்தானையைக்கணைமழைசொரிய
முரிந்துபோயினநிகழ்ச்சியிதுயிர்த்தொகைமுற்று
மிருந்தநாயகவறிதியேயாவையுமென்றான்.

(இ - ள்.) தெரிந்து - (இதனை) அறிந்து, தாரகன் —, மகிழ்வொடு - மகிழ்ச்சியுடனே, பறந்தலை சென்று - போர்க்களத்தையடைந்து, நம் பெ

ருக் தானையை - நமது பெரிய (பூத) சேனைகளை, தூர்த்து - தூர்த்தி, கணை மழை சொரிய-அம்புமழை பொழிய, (அதனால் அசசேனைகளெல்லாம்), முரிந்து போயின - நிலைகுலைந்து ஓடிப்போயின; நிகழ்ச்சி ஈது-நடந்தசெய்கை இது; உயிர் தொகை முற்றும இருந்த நாயக-(ஆன்மகோடிகளெல்லாவற்றினும் உயிர்க்குஉயிராய்)வீற்றிருக்கின்ற தலைவனே! யாவையும் அறிதியே-எல்லாவற்றையும (நீ) அறிவாயன்றோ? என்றான் - என்று (நாரதன் சுப்பிரமணியமூர்த்தியின் சன்னிதானத்தில்) விண்ணப்பஞ்செய்தான்; (எ - று.)

பறந்தலை - போர்க்களமாதலை, "களிற்றுக்கணம்பொருத கண்ணகன் பறந்தலை" எனப் புறநானூற்றிலுவ காண்க. நிகழ்ச்சி - நிகழ்தலுடையது; 'சி' விகுதி பெற்ற தொழிலாகுபெயர்; நிகழுதல-நடத்தல். உயிர்த்தொகை முற்றும இருந்த நாயக - கீழ் சுங - ஆம கவியில "ஆவியுளாவியா மமலன்" என்றதற்கு உரைத்ததை உரைக்க; எல்லாஆத்மாக்களிலும் அந்தராத்மாவாய் வீற்றிருக்கின்ற உனக்குத் தெரியாத ஆன்மாக்களின்செய்கை இல்லை யெனபது விளங்க, 'உயிர்த்தொகைமுற்றுமிருந்த நாயக அறிதியே யாவையும' என்றான. யான கூறியவற்றையேயன்றிக் கூறாதவற்றையும் உணர்வா யென்பார், 'யாவையும்' எனப் பொதுப்படக் கூறினர். 'அறிதியே யாவையும்' என்றதனால, அக்கடவுளின் முற்றுமுணரும்வரம்பிலறிவை விளக்கியவாறு. யாவையும அறிதி - நடந்தசெய்கையையறிதலோடு அதற்குச்செய்யவேண்டும் பரிகாரத்தையும அறிந்திருப்பா யென்றபடி; என்றது, அப்பரிகாரத்தை நடத்தியருளவேண்டு மென்று குறிப்பாகப் பிரார்த்தித்ததாம். அறிதி - முன்னிலையொருமைமுற்று. எ - தேற்றம். ஈது - சுட்டு நீண்டது. (கoசு)

கoஎ. என்ற காலையி னாரத னுள்ளமு மிமையோர்
நின்று தாமயர் கின்றது மமரர்கோ னெஞ்சிற்
றுன்று சோகமு நான்முக னாதியோர் துயரு
மொன்ற நோக்கியே யறுமுகப பண்ணவ னுரைப்பான்.

(இ - ள்.) என்ற காலையில - என்று (நாரதன்)சொன்ன பொழுது,— அறு முகம் பண்ணவன் - ஆறுதிருமுகங்களையுடைய தேவன் [சண்முகக் கடவுள்],—நாரதன் உள்ளமும் - அந்நாரதனது மனக்கருத்தையும், இமையோர் நின்று தாம் அயர்கின்றதும்-தேவர்கள் (தமதுதிருமுன்பே) சேர்ந்து நின்று வருந்துகின்றதையும், அமரர் கோன் நெஞ்சில் துன்று சோகமும் - தேவராசனான இந்திரனது மனத்திற் பொருந்திய விசனத்தையும், நான் முகன் ஆதியோர் துயரும் - பிரமன் முதலானவர்களது துன்பத்தையும், ஒன்ற நோக்கி - ஒருசேரப் பார்த்து, உரைப்பான் - (சில) கூறுவான்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க. தாம் - அசை.

உள்ளம் - அதன்கருத்துக்கு, ஆகுபெயர்; இடவாகுபெய ரென்றாவது, கருவியாகுபெய ரென்றாவது கொள்க:'அம்'விகுதிபெற்ற தொழிற்பெயரெனினும் இழுக்காது; உள்ளுதல் - நினைத்தல் சோகம் - வடசொல். பண் - பெருமை; அதனையுடையவன், பண்ணவன்: அ - சாரியை. 'ஒன்றநோக்கியேயுரைப்பான்'எனவே,அவர்கள்மன மகிழும்படி திருவாய்மலர்ந்தருளின்றன னென்பது பெறப்படும். அயர்கின்றது - நிகழ்காலத்தொழிற்பெயர். நான்முகன் - நான்குதிசையையும்நோக்கிய நான்குமுகங்களையுடையான். நான்முகனாதியோர்துயரை நீக்குதற்குரியான் அறுமுகக்கடவுளேன நயங் காண்க. (கoஎ)

வேறு.

கoஅ. ஆறுமிது கேண்மினம ராடுகளை னேகித்
தாரகனை வேல்கொடுகை டந்தவுணர் வைகு

மோரரண மானகிர வுஞ்சகிரி செற்றே
வீரர்தமை யோரிறையின் மீட்டிடுவ னென்றான்.

(இ - ள்.) 'ஆரும் இது கேண்மின் - நீங்களெல்லாரும் இதனைக் கேளுங்கள்:—(இப்பொழுது யான்), அமர் ஆடு களன் எதி - போர்செய்யும் அக்களத்திற் சென்றுசேர்ந்து, தாரகனை வேல் கொடு தடிந்து - தாரகாசுரனை வேலாயுதத்தாற் கொன்று, அவுணர் மைகும் ஒர் அரணம் ஆன கிரவுஞ்சகிரி செற்றே - அசுரர்கள் தங்குகின்ற ஒருகோட்டையாகவுள்ள கிரௌஞ்சமலையையும் அழித்தே, வீரர்தமை - (நமது) வீரர்களையெல்லாம், ஒர் இறையின் மீட்டிடுவென் - ஒரு கணப்பொழுதினுள்ளே மீட்டு அழைத்துக்கொண்டுவருவேன்', என்றான் - என்று (முருகக்கடவுள்) கூறியருளினன்; (எ - று.)

ஆரும் கேண்மின் - முன்னிலையிற படர்க்கை வந்த இடவழுவமைதி; [நன் - பொது - உக.] களன் - இறுதிப்போலி. அமர் ஆடு களம - போர் செய்யும் இடம். அரணம் - ஶரண மென்னும் வடசொல்லின் விகாரம்; பாதுகாவலாகத் தங்குமிட மென்று பொருள். 'அரணம்' என்றது, இங்கே, மலையரணென்றவாறு. வீரர் - வீரவாகு முதலியோர். இறை - காலநுட்பம். கேண்மின் - ஏவற்பன்மைமுற்று. மீட்டிடுவென் - தன்மையொருமை. செற்றே, ஏ - தேற்றம்.

இதுமுதல் நான்கு கவிகள் - நான்காஞ்சீரொன்று தேமாச் சீரும், மற்றைமூன்றும் கூவிளங்காய்ச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (க0அ)

க0கூ. எந்தையிவைகூறுதலும்யாருமவைதேர்ந்து
சிந்தையுறுநின்றதுயர்செற்றுமுடிவில்லா
வந்தமின்மகிழ்ச்சியுடனாடியிசைபாடிக்
கந்தனடிவந்தனைபுரிந்தனர்களிப்பால்

(இ - ள்.) எந்தை - எமது தலைவனான முருகக்கடவுள். இவை கூறுதலும் - இவ்வார்த்தைகளைச் சொன்னவளவிலே, யாரும் - அங்குநின்றவர்களெல்லாரும். அவை தேர்ந்து - அச்சொற்களைக் கேட்டறிந்து விசுவசித்து, சிந்தை உறுகின்ற துயர் செற்று - (தங்கள்) மனத்திற் பொருந்திய துன்பங்களையொழித்து, முடிவு இல்லா அந்தம் இல் மகிழ்ச்சியுடன் - அழிவில்லாத வரம்பற்ற ஆனந்தத்தோடு, ஆடி - கூத்தாடி, இசை பாடி - சங்கீதம்பாடி, களிப்பால் - அவ்வானந்தமிகுதியுடனே, கந்தன் அடி வந்தனை புரிந்தனர் - முருகக்கடவுளின் திருவடிகளை நமஸ்கரித்தல்செய்தார்கள்; (எ - று.)

தேர்ந்து - தெளிந்து, நம்பி. முடிவில்லா, அந்தமில் என்றவற்றை ஒருபொருட்பன்மொழிகளாகக் கொண்டு, மகிழ்ச்சியின் மிகுதியை விளக்குமென்றலுமாம். வந்தனம் - வடசொல்; அது திரிந்தது. வந்தனைபுரிதல் - வணங்குதல். எந்தை - எம்பெருமான். இசை பாடி - தோத்திரப்பாமாலைகளைப் பாடி யென்னவுமாம்; இசை - புகழ். இங்கு, அதனைக்கூறும்பாடலுக்கு இலக்கணை. களிப்பு - பெருமகிழ்ச்சி. களிப்பால் - 'ஆல்' உருபு, 'ஒடு' உருபின்பொருளில் வந்தது. (க0க)

ககo. கந்தமுருகேசனதுகாலைமுதுபாகாய்
வந்தவொருவுந்தினைமகிழ்ச்சியொடுநோக்கிச்
சிந்தைதனின்முந்துமவகைதேரதனைவல்லே
யுந்துதிவிரைந்தெனவுரைத்தருளலோடும்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) கந்தன் முருகேசன் - ஸ்கந்த னென்னும் ஒருதிருநாமத்தை யுடைய முருகப்பிரான், அது காலை - அப்பொழுது, முது பாகு ஆய் வந்தது ஒரு வந்தினை மகிழ்ச்சியொடு நோக்கி - முதிய [தேர்ச்சியுற்ற] பாகனாய் (த் தனக்கு அமைந்து) வந்துள்ளதொரு தன்மையையுடைய ஒப்பற்ற வாயுதேவனை மகிழ்வோடுபார்த்து, '(நீ இப்பொழுது), சிந்தைதனின் முந்தும் வகை - மனத்திலும் முற்படச்செல்லும்படி, தேர்தனை - (எமது) தேரை, வல்லை விரைந்து உந்துதி - சீக்கிரமாகச் செலுத்துவாய்', என - என்று, உரைத்தருளலோடும் - கட்டளைகூறியருளியவளவிலே, (எ - று.)— 'துண்டி மிக ஆர்த்தான்' என வருங் கவியோடு தொடர்ந்து முடியும்.

கந்தன் + முருகேசன் = கந்தமுருகேசன உயர்திணையீறு கெட்டது; "சிலவிகாரமா முயர்திணை". முருகன + ஈசன் = முருகேசன்; முருகனாகிய தலைவனென இருபெயரொட்டுப்பண்புத்தொகை; நிலைமொழியீறு னகரங்கெட்டு, வருமொழி முதலுயிர் வகரவுடம்படுமெய் பெற்று, 'முருகவீசன்' என வருதற்பாலது, இது. இங்கே, 'முருகன்' என்ற தமிழ்மொழியை 'ஈசன்' என்னும் வடமொழியோடு புணர்த்து, அவ்வடமொழிக்குஉரிய குணசந்தித் தன்மையையேற்றி, 'குமரேசன்' என்றாற்போல 'முருகேசன்' என்று ஆசிரியர் வழங்கினரென்க; குளம் + ஆம்பல் = குளாம்பல், மரம் + அடி = மராடி என்ற இடங்களில் தமிழ்மொழியாகிய நிலைமொழி ஈறுகெட்டு வடமொழிக்குஉரிய தீர்க்கசந்தித்தன்மையை யடைந்ததுபோல, இதுவும். நிலைமொழி ஈறுகெட்டு வடமொழிக்குஉரிய குணசந்தியை எற்றதென்க: ['அ ஆ முன் இ ஈ வரின் அவ்விரண்டுங்கெட ஏகாரந் தோன்றும்.'] இது இலக்கணத்துக்கு ஏற்றதன்றாயினும், பாஷைவழக்கமாக, உலகவழக்குச் செய்யுள்வழக்கு இரண்டிலும் பயில்வனவாகக் காண்க; 'குலசேகராழ்வார்' முதலியனவும் இத்திறத்தன; இனி, இத்தொடர், மரூஉவெனப்படுதலும் அமையும்.

பாகு - உயர்திணைப்பொருளில் வந்த அஃறிணைச்சொல்; ஆகுபெயரின் பாற்படுதலும் இழுக்காது. 'வந்து' என்பது - பெயர்ச்சொலாயிருக்கையிற் காற்று என்னும் பொருளதாதலை "விண்டோய் வந்து மலைய" என்றவிடத்திலுங் காண்க; அழகரந்தாதியில் "அட லாயிரவாயப், பொருந்து வந்தார் பணப் பாயார்" என்றவிடத்திலும் 'வந்து' என்ற சொல் இப்பொருளது; இதன்மேல், இன் - சாரியை, ஐ - இரண்டனுருபு. 'வந்ததொரு வந்தினை' என்றவிடத்துச் சொல்நயங் காண்க. தேவர்களை அஃறிணையாலுங் கூறலாமாதலால், 'வந்ததொரு வந்தினை' என்பதற்கு - வந்ததாகிய காற்றை யென்றும் பொருள்கூறலாம். முது பாகு - பண்புத்தொகை. 'வல்லை', 'விரைந்து' என்றவை - ஒருபொருட்பன்மொழி. முருகக்கடவுள் சூரபதுமனுதியோரை யழிக்குமாறு சிவபிரானிடம் விடைபெற்றுச் சேனையோடு போர்க்கு எழுகையில், திருமாலின் கட்டளையால் வாயுபகவான் அக்குமாரனுக்குத் தேர்ப்பாகனாய் அமைந்தனனென்ற தன்மை, மேற் படையெழுபடலத்திற் கூறப்பட்டது. மனத்தில் ஒன்றை நினைத்தமாத்திரத்தில் அந்நினைத்தபொருள் எவ்வளவுதூரத்திலுள்ளதாயினும் அதனிடத்து மனம் சென்று சேர்தலால், அது வேகத்துக்குச் சிறந்ததாக எடுத்துக் காட்டப்படும்; அதனினும்வேகமாக என்று மிக்கவிரைவை விளக்கியபடி. வந்ததொரு வந்தினை, சிந்தைதனின் முந்தும்வகை, உந்துதிவிரைந்தென என்ற இடங்களிற் பிராசமென்னுஞ் சொல்லணி காண்க. (௧௧௦)

௧௧௧. என்னையினி தென்றுதொழு தேழெழுவ கைத்தாந்
தன்னினம தாகியவர் தாங்கள்புடை போதக்
கொன்னுனைய தாமுளவு கோல்கயிறு பற்றித்
துன்னுபரி யாநிரைக டூண்டிமிக வார்த்தான்

வேறு.

௧௧௨. ஆன காலைதனி லண்டமும் வையந்
தானு மங்குள தடங்கிரி யாவு
மேனை மாகடலு மெண்டிசை யுள்ள
மான வேழமுந டுங்கின மன்னோ.

(இ-ள்.) ஆன காலைதனில் - அச்சமயத்தில், அண்டமும் - மேலுலகமும், வையம் தானும் - பூமியும், அங்கு உள தட கிரி யாவும் - அந்நிலவுலகத்திலுள்ள பெரிய மலைகளனைத்தும், ஏனை - மற்றும், மா கடலும் - பெரிய கடல்களும், எண் திசை உள்ள மானம் வேழமும் - எட்டுத்திக்குகளிலுமுள்ள கோபகுணமுடைய யானைகளும், நடுங்கின—; (எ-று.)—மன், ஓ - ஈற்றசை.

நடுங்குதற்குக் காரணம், வாயுதேவனது ஆரவாரமிகுதியினாலுண்டாகிய அதிர்ச்சி யென்க; தேர்ஓடும்அதிர்ச்சியுமாம். எண்திசையுள்ள வேழம் - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்பன; இவை - முறையே கிழக்குமுதலாக எட்டுத்திக்குகளிலும் நின்று உலகத்தைத்தாங்குவன. "யானை, அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" என்றபடி யானை கோபத்தை மறைத்தற்குரிய காலத்தே மறைத்து வெளிப்படுத்தற்குரிய காலத்தே வெளிப்படுத்துந் தன்மையதாய் விடாச்சீற்றமுடையதாதலால், 'மானவேழம்' எனப்பட்டது; இனி, மானம் - பெருமையுமாம்.

இதுமுதற் பதினொன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் மாச்சீர்களும், இரண்டாஞ்சீர் கூவிளங்காய்ச்சீரும், மூன்றாஞ்சீர் கூவிளச்சீருமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௧௧௨)

௧௧௩. வாவுகின்றபலமாநிரை தூண்டத்
தேவர்தங்கள்சிறைதீரியசெல்வோன்
மேவுதொல்லிரதம்விண்ணெறிகொண்டே
யெவரும்புகழவேகியதன்றே.

(இ-ள்.) வாவுகின்ற - தாவிச்செல்கின்ற, பல மா நிரை - பல குதிரைவரிசைகளை, தூண்ட - (வாயுதேவன்) செலுத்த,—தேவர்தங்கள் சிறை தீரிய செல்வோன் மேவு தொல் இரதம் - தேவர்களுடைய சிறையிருப்பை விடுவித்தற்பொருட்டுச் செல்பவனாகிய முருகக்கடவுள் ஏறிய பழமையான தேரானது, விண் நெறி கொண்டு - ஆகாயத்தைத் தனக்கு வழியாகக் கொண்டு [ஆகாயமார்க்கமாய்], எவரும் புகழ ஏகியது - யாவரும் கொண்டாடும்படி சென்றது; (எ-று.)—அன்று, ஏ - ஈற்றசை.

தேவர்தங்கள்சிறை—சூரபதுமன், திக்குவிசயஞ்செய்து தேவர்களை ஏவல்கொண்டபின்பு, இந்திரனைச் சிறைசெய்து இந்திராணியைத் தழுவக் கருதி, அக்கருத்தக்களை நிறைவேறச்செய்தற்பொருட்டுப் பற்பல ஆடவர்மகளிர்தொகுதியையனுப்ப, அதனையறிந்த இந்திரன் இந்திராணியுடன் மறைந்து சுவர்க்கத்தைவிட்டுப் பூமிக்குவந்து சீகாழியிற் சிவபூசைசெய்துகொண்டிருக்கையில், சில தேவர்கள் வந்து தம்குறையைக் கூறி முறையிட, அது கேட்டுத் தேவராசன் சூரன்கொடுமையைச் சிவபிரானுக்கு விண்ணப்பஞ்செய்யும்பொருட்டு இந்திராணியை அங்கு மகாசாத்தாவின் வசத்திலே யொப்பித்துத் தேவர்களோடு கைலைக்குச் செல்ல, அச்சமயத்தில், சூரபதுமனது தங்கையான அசமுகி இந்திராணியைத் தனது தமையனிடஞ் சேர்ப்பித்தற்பொருட்டு எடுத்துச்செல்லத்தொடங்க, அப்பொழுது, மகாசாத்தாவின் கட்ட

லைப்படி இந்திராணியைக் காத்திருந்த மகாகாளன் அவளைக் கைதுணித்துவிட, அதனையறிந்த சூரன் மிக்கசினங்கொள்ளலும், அவன் மகனான பானுகோபன் படையெடுத்துப்புறப்பட்டுச் சீர்காழிசேர்ந்து இந்திராணியைக் காணாமற் சுவர்க்கலோகமடைந்து அங்கு எதிர்ப்பட்ட இந்திரகுமாரனை சயந்தனோடும் தேவர்களோடும் பொருது அவர்களையெல்லாம் வலியடக்கிக் கட்டிக் கொணர்ந்து தாதையின்முன்னே சேர்த்தவளவில், அச்சூரன் மகிழ்ந்து அத்தேவர்களையெல்லாம் விலங்கிட்டுவித்து மீளுதற்கரிய சிறையில் வைத்தனன் என வரலாறு உணர்க.

தீரிய - செய்யியவென்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; இதில், 'இய' என்ற விகுதியே காலங்காட்டும். இதனமுன வலி இயல்பு; [நன் - உயிர் - கஎ.] 'தீர்' என்ற பகுதி, தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொது. குமாரனுக்கென்று சிவபிரானாற் புதிதாக மனத்தாலுருவாக்கிக்கொடுக்கப்பட்ட தேரை, 'தொல்இரதம்' என்றது, பழமையாகக்கூறப்பட்டுவருகின்ற இலக்கணங்களமைந்ததென்றவாறு, அன்றி, தந்தையின்வழியாகவந்தமையே தொன்மையெனப்பட்டதெனினுமாம். எவர்-எகர வினாவடியாப் பிறந்த பெயர்; வினா. எஞ்சாமைகுறித்தது. தூண்ட எகியது என்க. (கக௩)

கக௪. ஆதியங்குமரனவ்வழிபொற்றேர்
மீதுசெல்லுதலும்விண்முகில்பல்வே
றோதும்வண்ணமுடனுற்றெனவானிற்
பூதசேனைபுடைபோயினவன்றே.

(இ - ள்.) ஆதி அம் குமரன - (யாவர்க்கும்) தலைவனான அழகிய அந்தக் குமாரக்கடவுள், அ வழி - அந்த ஆகாயமார்க்கமாக, பொன் தேர்மீது செல்லுதலும்-பொன்மயமான தேரின்மேல் சென்றவளவிலே,—விண் முகில் பல் வேறு ஓதும வண்ணமுடன் உற்று என - வானத்திலுள்ள மேகங்கள் பலவேறுவகையாகச் சொல்லப்படுகின்ற வடிவங்களுடனே உடன்சென்றாற்போல, பூத சேனை - பூதகணங்கள், வானில் - அவ்வாகாயத்திலே, புடை போயின-(அம்முருகக்கடவுளின) பக்கங்களிற்சென்றன; (எ-று.)—அன்று, ஏ - ஈற்றசை.

செலவுதலும் போயின வென்க. ஆதி - வடசொல். 'ஆதி அம் குமரன்' என்பதற்கு - யாவர்க்கும்) முதல்வனான சிவபிரானது அழகியகுமாரனென்றும் பொருள்கொள்ளலாம். உபமேய மாகிய பூதங்கள், நெடுமை குறுமை பலமுகம ஒருமுகம் சடை முடி முதலிய பலவகைவடிவங்களோடு இருத்தலால், உபமானமாகிய மேகங்களுக்கு 'பலவேறோதும் வண்ணமுடனுறுதல்' கூறினார். 'பல்வேறோதும் வண்ணமுடன்' என்பதற்கு - பலவேறு வகையாகச் சொல்லப்படுகின்ற நிறங்களுடனே யென்றும் பொருள்கொள்ளலாம். "நெடியர் சிந்தினர் குறியின ரைம்பெரு சிறனும். வடிவில் வீற்றுவீற் றெய்தினர் வார்சடைக் கற்றை, முடியர் குஞ்சியர் பலவதனத்தரோர் முகத்தர்,பொடிய ரன்னினு மடைக்தவர்க் கருள்புரி குணத்தோர்" என்ற படையெழுபடலத்துச் செய்யுள், இங்கே காணத்தக்கது. வண்ணம் - வடிவமும், நிறமும், குணமுமாம். தற்குறிப்பேற்றவணி. (கக௪)

கக௫. போரழிந்துபுறங்கிட்டெதிர்பூத
ராருநேர்ந்துதொழுதாற்றலொடேய்த
நாரணன்றனதுநன்மருகானோன்
றூரகன்றிகழ்சமர்க்களமுற்றான்.

(இ - ள்.) போர் அழிந்து புறகுஇட்டு எதிர் பூதர் ஆரும் - (முன்பு) போரில்தோற்று முதுகுகொடுத்து (த் தனதுவருகையை) எதிர்பார்த்துக்

கொண்டு அங்கிருந்த பூதர்கள்யாவரும், நேர்ந்து - எதிர்கொண்டு அருகில்வந்து, தொழுது - (தன்னை) வணங்கி, ஆற்றலொடு எய்த - (முன்பிருந்த) வலிமையைப் பெற்று உடன்வர,—நாரணன்தனது நல் மருகு ஆனோன் - திருமாலினது இனிய மருமகனான முருகக்கடவுள், தாரகன் நிகழ் சமர்க்களம் உற்றான் - தாரகாசுரன் (பகைவென்று) விளங்குகின்ற போர்க்களத்தைச் சேர்ந்தருளினான்; (எ - று.)

'ஆற்றலொடெய்த' என்றதனால், முன்பு போரில் அசுரரால் வலிமையிழந்த பூதர்கட்கு,முருகக்கடவுளின் வருகையைக் கண்டவளவில் அப்பிரானருளால் முன்னையவலிமை மீண்டும் உண்டாயிற் றென்பது தோன்றும். வீரவாகுமுதலியதலைவர்களையிழந்ததனா லொழிந்த வலிமையை அவர்களினுஞ்சிறந்தவனான குமாரக்கடவுளின் வருகையைக் கண்டதனாலாகிய மகிழ்ச்சியால் முன்னினும்மிகுதியாகப்பெற்றன ரென்றுங் கொள்ளலாம்.

மருகு - மருமகன்என்பதன் விகாரம்: அன்றி,'மருகு'என்பதை, பாகுஊது ஒற்று அரசு வேந்து அமைச்சு என்பனபோல உயர்திணைப்பொருள்தரும்அஃறிணைச்சொ லென்னலுமாம். மருமகன் - உடன்பிறந்தவளுடைய மகன்; உமாதேவியினது ஒரு ரூபபேதமான துர்க்கை திருமாலுக்குக் கிருஷ்ணாவதாரத்தில்தங்கையாய்த்தோன்றி'மாலுக்கிளையாள்'என்றுபெயர்பெறுதலால், சிவகுமாரன் 'நாரணன்மருகானோன்' எனப்பட்டான். இனி, திருமாலின் புதல்வியரான சுந்தரி அமுதவல்லி என்றவர்களை,வள்ளி தெய்வயானை யென்ற பெயர்கொண்டு வளர்கையில், முருகக்கடவுள் திருமணஞ்செய்தல்பற்றி, அக்குமரனை 'திருமால்மருகன்' என்றதாகவுங் கொள்ளலாம்; இப்பொருளுக்கு, மருகன் - மகளுடையகணவன். 'அரிதிருமருகன்' என்று முருகனுக்கு ஒருபெயர்.

நாரணன் - நாராயணன் என்ற வடசொல்லின் சிதைவு; அது, நார + அயந எனப் பிரித்து, சிருஷ்டிப்பொருள்கட்கு இருப்பிடமானவ னென்றும், பிரளயப்பெருங்கடலைத் தனக்குஇடமாகவுடையவ னென்றும், மற்றுஞ்சிலவகையாகவும் பொருள்படும். "மாமனு மருகனும் போலு மன்பின" என்றபடி, மாமனுக்கும் மருமகனுக்கும் ஒருவரிடத்து ஒருவர்க்கு அன்பு மிகுதல் தோன்ற, 'நல்மருகு' என்றார். பிறகுஇட்டு எதிர் பூதர் - முதுகு கொடுத்தோடி எதிரில்வருகின்ற பூதர்க ளென்றும் பொருள்கொள்ளலாம். தாரகன் நிகழ் சமர்க்களம் - தன்னையெதிர்ப்பவரொருவருமில்லாமையால் தாரகன் போரொழிந்து வெற்றியுடன் தனியேநிற்கப்பெற்ற போர்க்களம் என்க.

"நண்ணினைய கண்டு புகழ் நாரத னெனும்பேர்ப், பண்ணவ னிடர்கொடு படர்ந் தமரர் செய்த, புண்ணிய முறைத்துழி பொருந்தி யடிதாழுஉ, விண்ணவர் மெலிந்திட வினைந்தன விளம்ப", "அங்கதை வினவி யெமையாளுடைய செவ்வே,ளிங்கவனை யூறுவ னிறைப்பொழுதி லென்றே,துங்கமுறு பூதர்கள் துவன்றி யயல்சுற்றச், செங்குருதி தங்கிய செருக்கள மடைந்தான்" என்பன, கந்தபுராணச்சுருக்கம். (ககரு)

ககசு. கவனமோடுபடர்காலினுமுந்திச்
சிவன்மகன்றனதுசேனையதானோ
ருவரியாமெனவுறுந்திறநோக்கி
யவுணர்தானையையணிந்தெதிர்சென்றார்.

(இ - ள்.) சிவன் மகன்தனது சேனையது ஆனோர் - சிவபிரானது திருக்குமாரனான முருகக்கடவுளின் சேனையாகவுள்ள பூதகணங்கள், கவனமோடு படர் காலினும் முந்தி - வேகத்தோடு வீசுகின்ற காற்றினும் முற்

பட்டு [மிகவிரைவாக], உவரி ஆம் என-கடல்போல [பெருந்தொகுதியாக], உறம் - வந்து சேர்கின்ற, திறம் - தன்மையை, நோக்கி-பார்த்து, அவுணர்-அசுரர்கள், தானையை அணிக்து - (தங்கள்) சேனைகளை அணிவகுத்துச் சித்தஞ்செய்துகொண்டு, எதிர் சென்றார் - எதிரிற் (போர்க்குச்) சென்றார்கள்.

கவனம் - கமநம் என்ற வடசொல்லின் விகாரம்: நடை யென்று பொருள்; விரைந்தநடையைக் குறித்தது. காலினும், உம்மை-உயர்வுசிறப்பு. சிவம் - சுபம்: அதனைச் செய்பவன் சிவன் என வடமொழிக் காரணக்குறி.

௧௧௭. சகந்துதிக்கவருசாரதர்தாமு
மகந்தையுற்றவவுணத்தொகையோரு
மிகந்தவன்மையொடெதிர்ந்திகலெய்தி
வெகுண்டுபேரமர்விளைத்திடலுற்றார்.

(இ - ள்.) சகம் துதிக்க வரு சாரதர்தாமும் - உலகத்தவர் (யாவரும்) புகழும்படி வருகின்ற பூதகணங்களும், அகந்தை உற்ற அவுணர் தொகையோரும் - அகங்காரம் பொருந்திய அசுரக்கூட்டத்தவர்களும், இகந்த வன்மையொடு - (அளவு)கடந்த வல்லமையுடனே, எதிர்ந்து - எதிர்த்து, இகல் எய்தி - மாறுபாடு கொண்டு, வெகுண்டு - கோபித்து, பேர் அமர் விளைத்திடல் உற்றார் - பெரிய போரை மிகுதியாகச்செய்யத்தொடங்கினார்கள்.

சகம் - ஜகத் என்னும் வடசொல்லின் திரிபு; இது, சகத்திலுள்ளார்க்கு இடவாகுபெயராம். துதிக்க - ஸ்துதி என்னும வடசொல்லி னடியாப் பிறந்த செயவெனெச்சம். அகந்தை - அஹந்தா என்னும் வடசொல்லின் திரிபு; நானென்னுஞ்செருக்கு என்று பொருள். இகந்த வன்மை - மிகப்பெரு வலிமை. (௧௧௭)

௧௧௮. கரங்கொணேமிகள்கணிச்சிகடீவாய்ச்
சரங்களாதியனதானவர்விடா
ருரங்கொண்மால்வரைகளோங்குமெழுக்கண்
மரங்கள்விட்டனர்மறங்கெழுபூதர்.

(இ - ள்.) தானவர் - அசுரர்கள்,—கரம் கொள் - கைகளிலே கொண்ட, நேமிகள் - சக்கரங்களும், கணிச்சிகள் - மழுக்களும், தீ வாய் சரங்கள் - நெருப்புப்போன்ற [தவறாமல் எளிதிற் பகையழிக்கும் கொடிய] கூர்நுனியையுடைய அம்புகளும், ஆதியன - முதலான ஆயுதங்களை, விட்டார் - (பூதர்கள்மேற்) பிரயோகித்தார்கள்; மறம் கெழு பூதர் - வலிமை மிக்க பூதர்களும்,—உரம் கொள் மால் வரைகள் - உறுதிகொண்ட பெரியமலைகளையும், ஓங்கும் எழுக்கள் - உயர்ந்த இருப்புத்தூண்களையும், மரங்கள் - மரங்களையும், விட்டனர் - (அசுரர்களமேல்) வீசினார்கள்; (எ - று.)

வாய்-முனை. தீவாய்ச்சரம் - நெருப்பிலிட்டுக் காய்ச்சி யடித்து அராவி வடித்துக் கூர்செய்யப்பட்ட அம்புகளென்றலுமாம்; (மிக்கஉக்கிரத்தால்) நெருப்பையுமிழும் வாயையுடைய அம்புகளெனினுமாம். கணிச்சி - சூலம், கோடாலி இவற்றிற்கும் வழங்கும். எழு - வளைதடியுமாம். (௧௧௮)

௧௧௯. முரிந்ததேர்நிரைமுடிந்தனமாக்க
ளெரிந்ததானவர்நெடுந்தலைசோரி
சொரிந்தபூதர்மெய்துணிந்தனவானிற்
றிரிந்தபாறுகள்செறிந்தனவன்றே.

(இ - ள்.) (பூதர்கள் வீசியவற்றால்), தானவர் - அசுரர்களுடைய, தேர் நிரை - தேர்களின்வரிசைகள், முரிந்த - உடைபட்டன; மாக்கள் - குதிரை

கள், முடிந்தன - இறந்தன; நெடு நிலை - (அவர்களுடைய) நீண்ட நிலைகள், நெரிந்த - சிதைந்தன; (அவர்களுடம்புகளினின்று), சோரி சொரிந்த - இரத்தப்பெருக்குக்கள் வழிந்தன; (அசுரர்கள்பிரயோகித்த ஆயுதங்களால்), பூதர் மெய் துணிந்தன - பூதகணங்களுடைய உடம்புகள் துண்டுபட்டன; வானில் திரிந்த பாறுகள் - ஆகாயத்திலே சஞ்சரிக்கின்ற பருந்துகள், செறிந்தன - (தசைதின்னுதற்கு அங்குவந்து) நிறைந்தன; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை.

முரிந்த, நெரிந்த, சொரிந்த - 'அன்'சாரியை பெறாத பலவின்பால் முற்றுக்கள். திரிந்த - பெயரெச்சம். 'சோரிசொரிந்த' என்பதை, 'பூதர் மெய் துணிந்தன' என்பதனோடு சேர்த்தலுமாம்; பூதருடம்புகள் இரத்தஞ் சொரிந்தனவாய்த் துணிபட்டன வென்க. (௧௧௯)

௧௨௦. நிறங்கொள்செங்குருதிநீத்தமதாகிக்
கறங்கியோடினகவந்தமோர்கோடி
மறங்கொடாடுவவயின்றொறுமாகிப்
பிறங்குகின்றனபிணங்கெழுகுன்றம்.

(இ - ள்.) செம் நிறம் கொள் - சிவந்த நிறத்தைக் கொண்ட, குருதி - இரத்தங்கள், நீத்தமது ஆகி - வெள்ளங்களாய், கறங்கி ஓடின - சுழித்து ஓடின; கவந்தம் ஓர் கோடி - ஒருகோடிக்கணக்கான தலையற்றவுடற்குறைகள், மறம்கொடு ஆடுவ - கொடுமைகொண்டு கூத்தாடுவன; பிணம் கெழு குன்றம் - பிணங்களால் ஓங்கியெழுந்த மலைகள், வயின் தொறும் ஆகி பிறங்குகின்றன - இடந்தோறும் பொருந்தி விளங்குகின்றன; (எ - று.)

கறங்குதல் - சுழலல், சுழிபடுதல். இனி, கறங்கி - ஆரவாரஞ்செய்து கொண்டு எனினுமாம்; கறங்குதல் - ஒலித்தல். கவந்தம் ஆடுவ—கீழ் ௯௦-ஆஞ் செய்யுளில் "கவந்த மேன்மேலெழுந்தன" என்றதற்கு உரைத்தது உரைக்க. 'வயின்றொறுமாகி' என்பதை, மற்றவற்றிற்குங் கூட்டலாம். இறுதியடியால், உயிர்நீத்தவுடல்கள் பெருந்தொகுதியாகத் திரண்டன என்றபடி; கீழ் ௬௭-ஆஞ் செய்யுளிலும் "பிணங்களினடுக்கல்" என்றார். பிறங்குதல் - அதிதூரத்திலுள்ளவர்களுங் காணும்படியாகுதல். ஆடுவ - 'அன்' சாரியை பெறாத முற்று. (௧௨௦)

௧௨௧. அனையவாறிவரருஞ்சமராற்றப்
புனையல்வாகையுளபூதர்கடம்மால்
வினையம்வல்லவுணர்வெவ்வலிசிந்தி
இனைதலோடுமிரிகுற்றனரன்றே.

(இ - ள்.) அனைய ஆறு - அந்தவிதமாக, இவர் - இவ்விருதிறத்தாரும், அருஞ் சமர் ஆற்ற - (பிறர்செய்தற்கு) அரிய போரை வலிமையோடுசெய்த வளவில்,—வினையம் வல் அவுணர் - வஞ்சனைவல்ல அசுரர்கள், வாகை புனையல் உள பூதர்கள் தம்மால் - வெற்றிமாலையைத்தரித்தலையுடைய பூதங்களால், வெவ் வலி சிந்தி - (தங்கள்) கொடிய வலிமையழிந்து, இனைதலோடும் - வருத்தத்துடனே, இரிகுற்றனர் - புறங்கொடுத்தோடினார்கள்; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை.

'வாகை' என்னும் மரத்தின் பெயர், அதன் மலர்மாலைக்கு இருமடியாகுபெயராம். தெரியல், அலங்கல், தொங்கல், அணியல், பிணையல் என்பனபோல, 'புனையல்' என்பது - மாலைக்குத் தொழிலாகுபெயராகிய ஒருபெயருமாம். இனைதல் - தொழிற்பெயர். இரிகுற்றனர், இரி - பகுதி, கு - சாரியை, உறு - துணைவினை. இரிதல் - அஞ்சி நிலைகுலைதலுமாம். வினை

யம் வல் அவுணர் - போர்த்தொழிலில்தேர்ந்த அசுரர்களெனினுமாம்; இது வரையிலும் எந்தப்போரிலும் புறங்காட்டாதவ ரென்றவாறும்: வினையம், அம் - சாரியை. இவர்களைவெல்லுதற்கேற்ற வீரர்களென்பார், 'புனையல் லாகையுள பூதர்கள்' என்றார். 'வெல்வலி' என்றும் பாடம். (௧௨௧)

௧௨௨. தன்படைத்தொலைவுதாரகனோக்கிக்
கொன்படைத்தகுனிவிற்குனிவித்தே
மின்படைத்தபலவெங்கணைதூவி
வன்படைக்கணம்வருந்தநடந்தான்.

(இ - ள்.) தன் படை தொலைவு - (இங்ஙனம் நேர்ந்த) தனது சேனைகளின் தோல்வியை, நோக்கி - பார்த்து, தாரகன்—, கொன் படைத்த குனி வில் குனிவித்து - பெருமைபெற்ற வளையுமியல்புள்ள (தனது)வில்லை நன்றாகவளைத்து, மின் படைதத பல வெம் கணை தூவி - மின்னல்போன்ற ஒளியைப்பெற்ற பல கொடியஅம்புகளைப் பிரயோகித்துக்கொண்டு, வல் படை கணம் வருந்த - வலிய பூதகணங்கள் வருந்தும்படி, நடந்தான் - எதிர் சென்றான்; (எ - று.)

கொன் - அச்சந்தருந்தன்மையுமாம். 'குனி வில்' என்பதில், 'குனி' யென்பது - வில்லுக்கு இயற்கையடைமொழி; பின்னே 'குனிவித்து' என வருதலால். மின் - அதுபோன்ற ஒளிக்கு, உவமையாகுபெயர். படைக் கணம் - தொகுதியாகிய பூத மென்க; கணம் - பூதம்.

"நடுசெறி பூதரு மிருந்தவர் யாருஞ் சாகசம ராட மிகுதானவருடைந்தே, யோட வதுகண்டன னுருத் தவுணர்மன்ன, னீடியகாததுற நெடுஞ் சிலைவளைத்தான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம். (௧௨௨)

௧௨௩. நடந்தெதிர்ந்தகணநாதரையெல்லாந்
தொடர்ந்துபல்கணைசொரிந்துதுரந்தே
யிடந்திகழ்ந்தவிமயத்திறைநல்கு
மடந்தைதந்ததிருமைந்தன்முனுற்றான்

(இ - ள்.) நடந்து - (தாரகன் இவ்வாறு) சென்று,—எதிர்ந்த கணநாதரை எல்லாம் - எதிர்த்துவந்த பூதகணத்தலைவர்களையெல்லாம், தொடர்ந்து - விடாதுநேர்பட்டு, பல் கணை சொரிந்து - அநேக பாணங்களை மிகுதியாகப்பிரயோகித்து, துரந்தே - துரத்திக்கொண்டே,—இடம் திகழ்ந்த இமயத்து இறை நல்கும் மடந்தை தந்த திரு மைந்தன் முன் உற்றான் - (சிவபிரானது) இடப்பக்கத்திலே விளங்குகின்றவளும் மலையரசனாகிய இமய மலை பெற்ற பெண்ணுமான பார்வதிதேவி வளர்த்த சிறந்தகுமாரனான முருகக்கடவுளின் முன்னிலையிற் சேர்ந்தான்; (எ - று.)

இங்கே, 'கணநாதர்' என்றது, இப்பொழுது சுப்பிரமணியனுடனே வந்த ஓராயிரவெள்ளம் பூதங்களையுடைய பின்னணிச்சேனையில் இருந்த பூதகணத்தலைவரைக் குறிக்கும்; முன்னணிச்சேனையிலிருந்த பூதகணத்தலைவர்களெல்லாம் முன்பு கிரௌஞ்சகிரிக்குகையினுட் பட்டதன்மை, முன்கூறப் பட்டது. இடந்திகழ்ந்த மடந்தை யென இயையும். இடந்திகழ்ந்த இமய மென்றேயெடுத்து, இடம் விசாலமாய் விளங்கப்பெற்ற மலை யென்றுமாம். இமயம் - பனிமலை: இமம் = ஹிமம் - பனி. 'தந்த' என்பது - இங்கே, வளர்த்த என்னும் பொருளது: "தழற்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான்" என்பதில், 'தந்தான்' என்பதுபோல; அன்றி, பார்வதி குமாரனது வடிவங்களாறையும் ஒன்றாகச்சேர்த்துப் பரமசிவன்கையிற் கொடுத்தமை பற்றி, 'தந்த' என்றதாகவுங் கொள்ளலாம். கணநாதர் - வடமொழித்தொடர். நல்கும், நல்கு - பகுதி. முன் - இடமுன்.

'இடந்திகழ்ந்த மடந்தை' என்றதிற் போந்த கதை:—முன்னொரு காலத்திற் கைலாசகிரியிலே சிவபிரானும் உமாதேவியும் ஏகாஸநத்திலொரு க்கமாகவீற்றிருந்தபொழுது, பிருங்கியென்னும் மகாமுனி பரமசிவனைமாத்திரம்பிரதக்ஷிணஞ்செய்யவிரும்பி ஒருவண்டுவடிவமெடுத்து அவ்வாசனத்தை இடையிலேதுளைத்துக்கொண்டு அதன்வழியாய் நுழைந்துசென்று அம்பிகையைவிட்டுச் சிவபிரானைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்ய, அதுகண்ட பார்வதிதேவி தன்பதியைநோக்கி 'முனிவன் என்னைப்பிரதக்ஷிணஞ்செய்யாமைக்கு ஏது யென்ன?' என்று வினவ, ருத்திரமூர்த்தி 'இம்மைமறுமைகளில் இஷ்டசித்திபெறவிரும்புபவர் உன்னையும், முத்திபெறவிரும்புபவர் என்னையும் வழிபடுவர்: இது நூற்றுணிபு' என்றுசொல்ல, அதுகேட்டதேவி 'இறைவன்வடிவத்தைப்பிரிந்து தனியேயிருந்ததனாலன்றோ எனக்கு இவ் விழிவு நேர்ந்தது' என்றுஇரங்கி, தான் சிவபிரானை விட்டுப்பிரியாதிருக்குமாறு கருதி, புண்ணியக்ஷேத்திரமான கேதாரத்திற் சென்று தவம்புரிந்து வரம்பெற்று அப்பிரானதுவடிவத்திலே இடப்பக்கத்தைத் தனக்குஇடமாக அடைந்து அவ்வடிவிலேயே தான் ஒற்றுமைப்பட்டுநின்றன ளென்பதாம்.

௧௨௪. உற்றகாலைதனிலொற்றரைநோக்கிச்
சற்றுநீதியறுதாரகவெய்யோன்
செற்றமென்னுமழல்சிந்தையின்மூள
மற்றிவன்கொலரன்மாமகனென்றான்.

(இ - ள்.) உற்ற காலைதனில் - (அவ்வாறு) சேர்ந்தபொழுது,—சற்றும் நீதி அறு தாரகன் வெய்யோன் - சிறிதும் நீதியில்லாத தாரகனாகிய கொடியவன்,—செற்றம் என்னும் அழல் சிந்தையில் மூள - கோபமாகிய நெருப்புத் தன்மனத்திற் பற்றியெரிய,—ஒற்றரை நோக்கி - (தனது) வேவுகாரரைப் பார்த்து,—அரன் மா மகன் இவன்கொல் என்றான் - 'சிவனது சிறந்தபுதல்வன் இவனோ?' என்று வினவினான்; (எ - று.)—மற்று - அசை.

வணங்குதற்கேற்றகடவுளையும் வணங்காது எதிர்த்துப்போரத் துணிந்த அநீதிபற்றி, 'சற்றுநீதியறு தாரகவெய்யோன்' என்றார். கொல்-வினா. அரன் - ஹரன்: சங்காரக்கடவுள்; அல்லது, (அடியார்களின் துன்பங்களை) ஒழிப்பவன்; அன்றி, (அசுரர்முதலிய கொடியோரை) அழிப்பவன். ஒற்றர்-வடமொழியில் 'சாரர்'எனப்படுவர்; இவர்கள்.தூதரினும் வேறானவர். பகைவர் நண்பர் அயலார் என்னும் மூன்றுவகையாரிடத்தும் நிகழுஞ் செயல்களை ஒற்றிஅறிந்துவருதல்பற்றி, ஒற்றரென்று பெயர்; ஒற்றுதல் - வேறுபாடுதோன்றாதபடி ஒன்றியிருந்து உண்மையைக் கிரகித்தல். (௧௨௪)

௧௨௫. என்னலுங்குமர னிங்கிவ னேயா
மன்ன வென்றிடலு மற்றவ னேறுந்
துன்னு தேர்கடிது தூண்டியெ வர்க்கு
முன்ன வன்மதலை முன்னுற வந்தான்.

(இ - ள்.) என்னலும் - என்று வினவியவளவிலே,—(ஒற்றர்கள் தாரகனைநோக்கி), 'மன்ன - அரசனே! இங்கு இவனே குமரன் ஆம் - இவ்விடத்திலுள்ள இவனே சிவகுமாரன்', என்றிடலும் - என்றுசொன்னவுடன்,—அவன் - அத்தாரகாசுரன், ஏறும் துன்னு தேர் கடிது தூண்டி - (தான்) ஏறிய வலிமைபொருந்திய தேரை விரைவாகச்செலுத்தி, எவர்க்கும் முன்னவன் மதலை முன் உற வந்தான் - யாவர்க்கும்முன்னுள்ளவனான சிவபிரானது குமாரனாகிய அம்முருகக்கடவுளுக்கு முன்னாகவந்தான்; (எ - று.)—மற்று - அசை.

எவர்க்கும் முன்னவன் - தான் அநாதியான முதற்கடவுள்; எல்லாப் பிராணிகட்கும் காரணமானவன்; எல்லாப்பொருள்களுக்குந் தலைமைபூண்டவன். 'முன்னவன்மதலைமுன்னுறவந்தான்' என்றவிடத்துச் சொல்நயங் காண்க. 'முன்னவன்' என்பதில் 'முன்' என்றது - காலப்பொருளிலும், 'முன்னுற' என்பதில் 'முன்' என்பது - இடப்பொருளிலும் வந்தன. முன்னுற - எதிரில் என்றபடி. (௧௨௫)

வேறு.

௧௨௬. முழுமதி யன்ன வாறு முகங்களு மூநநான் காகும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின் சீரு
மழகிய கரமீ ராறு மணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டா னவன்றவஞ் செப்பற் பாற்றோ.

(இ - ள்.) (அங்ஙனம்வந்த தாரகாசுரன் முருகக்கடவுளினது), முழுமதி அன்ன ஆறு முகங்களும் - பூர்ணசந்திரனைப் போன்ற ஆறுதிருமுகங்களையும், மூநான்கு ஆகும் விழிகளின் அருளும் - பன்னிரண்டாகிய திருக்கண்களினின்று பொழிகின்ற கருணையையும், வேலும் - வேலாயுதத்தையும், வேறு உள படையின் சீரும் - மற்றுமுள்ள ஆயுதங்களின் சிறப்பையும், அழகிய கரம் ஈராறும் - அழகமைந்த பன்னிரண்டு திருக்கைகளையும், அணி மணி தண்டை ஆர்க்கும் செழு மலர் அடியும் - அழகிய இரத்தினங்கள்பதித்த தண்டையென்னும் ஆபரணம் ஒலிக்கப்பெற்ற செழிப்பான தாமரை மலர்போன்ற திருவடிகளையும், கண்டான் - கண்ணெதிரிற் கண்டான்; அவன் தவம் செப்பல்பாற்று ஓ - அவ்வசுரனது தவம் (இத்தன்மையதென்று) சொல்லுந் தன்மையதோ? [அன்று என்றபடி]; (எ - று.)

அவ்வசுரன் கொடுந்தொழில்மிக்கவனாயினும், எத்துணைச்சிறந்த தவயோகிகட்கும் நெடுங்காலம்முயன்றுங் காணுதற்கரிய சுப்பிரமணியமூர்த்தியின் திருவடிவத்தைப் பூர்ணமாக எளிதிற் பிரத்யக்ஷமாகத் தரிசிக்கப்பெற்றமைபற்றி, அவனது பாக்கியவிசேஷம் சொல்லமுடியாததென்று வியந்தவாறு. சூரன் பதுமன் சிங்கன் தாரகன் என்ற நால்வரும் பூர்வஜன்மத்திற் பஞ்சாக்கினிமத்தியில்நின்று அரிய பெரிய தவத்தைச் செய்தவர்களென்பதை இந்நூலின் உபதேசகாண்டத்தா லுணரலாம். முழு மதி - பதினாறு கலைகளும் நிறைந்த சந்திரன். திருமுகமண்டலத்திற்குச் சந்திரமண்டலம் உவமை - கண்டவர்கண்களிக்கச்செய்தலிலும், பொலிவிலும் என்க. விழிகளி னருளைக் காணுதல் - கண்களின் குறிப்பாற் கருணையின்நிறைவு வெளிதோன்றுவதைப் பார்த்தல். படைகட்கெல்லாம் நாயகமாதலால், வேலைத் தனியே எடுத்துக்கூறினர். படையின்சீர் காணுதல்-கைகளுக்கு ஏற்ற ஆயுதங்கள் சேர்ந்த சேர்த்தியா லாகிய அழகைப் பார்த்தல். வேறுள படை- "உருத்திரகணத்தோர் கவிலருந் தோமரம் கொடி வாள், வன்றிறற்குலிசம் பகழி அங்குசமும் மணி மலர்ப்பங்கயம் தண்டம், வென்றிவில் மழுவு மாகி வீற்றிருந்தார் விறல்மிகு மறுமுகன் கரத்தில்" என விடைபெறுபடலத்தில் வந்ததனால் உணர்க. இவையும், வேலும் - பன்னிரண்டு திருக்கைகளிலும் உள்ளன. ஆர்க்கும் - கட்டப்பட்ட என்றலும் ஒன்று. பாற்று - பான்மையென்னும்பண்பினடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று; து - விகுதி; செப்பல் பாற்று - சொல்லுதலாகிய தன்மையையுடையது என்க. ஓ எதிர்மறை. மூநான்கு, ஈராறு - பண்புத்தொகைகள்.

இதுமுதல் ஐந்து கவிகள் - இப்படலத்தின் ௨௪ - ஆங் கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தங்கள். (௧௨௬)

௧௨௭. தற்பமதுடையசிந்தைத்தாரகனினையவாற்றாற்
சிற்பரமூர்த்திகொண்டதிருவுருவனைத்துநோக்கி

யற்புதமெய்தி நம்மேலமர்செயவந்தானென்றாற்
கற்பனைகடந்தவாதிக்கடவுளேயிவன்கொலென்றான்.

(இ - ள்.) தற்பம்அது உடைய சிந்தை - செருக்கைக்கொண்ட மனத்தையுடைய, தாரகன் - தாரகாசுரன்,—இனைய ஆற்றால்-இவ்விதமாக, சிற்பரமூர்த்தி கொண்ட திரு உரு அனைத்தும் நோக்கி - ஞானமயமான (அனைத்திலும்) மேம்பட்ட வடிவமுடைய குமாரக்கடவுள் கொண்டருளிய திருக்கோலம் முழுவதையும் நன்றாகப் பார்த்து,—அற்புதம் எய்தி - வியப்பையடைந்து,—'நம்மேல் அமர் செய வந்தான் என்றால் - (யாவரையும்வலியடக்கியாளுகின்ற) நம்மீது போர்செய்வதற்கு வந்தா னென்றால், இவன்—, கற்பனை கடந்த ஆதி கடவுளே கொல் - (உலகத்தாரது) கற்பனையைக் கடந்துள்ள முதற்கடவுளாகிய பரமசிவனேபோலும், என்றான் - என்றெண்ணினான்; (எ - று.)

தற்பம் - தர்ப்ப மென்ற வடசொல் திரிந்தது; சர்ப்பம் என்பது சற்பமென வழங்குதல்போல: கர்வ மென்று பொருள். சித்பரமூர்த்தி என்பது சிற்பரமூர்த்தி யெனவும்,அத்புத மென்பது அற்புத மெனவும்,கல்பநா என்பது கற்பனை யெனவும் திரிந்தன; வடசொற்றிரிபு. சித்பரமூர்த்தி என்பதற்கு - ஞானத்துக்கு எட்டாமற் கடந்துள்ள வடிவமுடையா னென்றும் பொருள் கொள்ளலாம். 'நம்'என்ற தனித்தன்மைப்பன்மை, செருக்கினாலாகிய உயர்வுபற்றியது. நம்மேற் போர்செய்ய வந்தனனாதலால் இவன் முழுமுதற்கடவுளேயாதல்வேண்டு மென்று எண்ணியது, தன்னையெதிர்க்க வல்லவர் வேறு எவருமில்லை யென்று துணிந்த இவனது செருக்கைக் காட்டும். அதுபற்றியே, 'தற்பமதுடையசிந்தைத் தாரகன்' என்றார். இங்ஙனம் இவன் எண்ணியது, 'நமதுசக்தியொன்றேயன்றி உம்மை எவரும் வெல்வாரில்லை'என்று பரமசிவனிடம் முன்பு தானும் தனதுதமையன்மாரிருவரும் பெற்றுள்ள வரத்தினு லென்க; அத்தன்மையை,"தேவர் யாவருஞ் சென்று தொழப்படு,மூவராகி மொழிந்திடு நுங்களைத், தாவிலாத நஞ் சத்தி யொன்றேயலா, லேவர் வெல்பவ ரென்று விளம்பிமேல்" என வரும் வரம்பெறு படலத்துச்செய்யுளால் உணர்க. 'கற்பனைகடந்த' என்றது-எவராலும் வர்ணித்துச்சொல்லமுடியாத தன்மையையுடைய என்றவாறு. கற்பனை-பாவனையுமாம்; கற்பனைகடந்த - மனத்திற்குவெட்டாத என்றபடி. கொல் என்ற இடைச்சொல் - இங்கே, ஐயத்தற்பொருளது. (கஉஎ)

கஉஅ. இந்தவாறுன்னிப்பின்னர்யார்க்குமேலாகுமீசன்
றந்ததோர்வரமும்வீரத்தன்மையும்வன்மைப்பாடு
முந்துதாயபெற்றசீருமுழுவதுநினைந்துசீறிக்
கந்தவேடன்னைநோக்கியினையனகழறலுற்றான்.

(இ - ள்.) இந்த ஆறு உன்னி - இப்படி நினைத்து, பின்னர் - அதன் பின்பு, யார்க்கும் மேல் ஆகும் ஈசன் தந்தது ஓர் வரமும் - எவர்க்கும் மேம்பட்டவனுகின்ற சிவபிரான் (முன்பு தமக்குக்) கொடுத்தருளிய ஒப்பில்லாத வரத்தையும், வீரம் தன்மையும் - (தமது) பராக்கிரமத்தின் இயல்பையும், வன்மைப் பாடும் - (தமது) வலிமையின் பெருமையையும், முந்து தாம் பெற்ற சீரும் - முன்பு தாங்கள் அடைந்துள்ள சிறப்பையும், முழுவதும் - எல்லாவற்றையும், நினைந்து - எண்ணி, சீறி - (எதிரியின்மேற்)கோபித்து,கந்தவேள்தன்னை நோக்கி - அந்தமுருகக்கடவுளைப் பார்த்து, இனையன கழறல் உற்றான் - இவ்வார்த்தைகளைச் சொல்லலானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

வரம் - நூற்றெட்டுயுககாலம் வாழ்தல், அனைவரையும் வெல்லுதல், சிவசக்தியொன்றினாலன்றிப் பிறரால் வெல்லப்படாமை முதலியன. வீரத்தன்மை - பின்னிடாத ஊக்கத்துடன் பொருது பகைவெல்லுந் திறம். மூர்த்து தாம்பெற்ற சீர் - திக்குவிசயம், ஆயிரத்தெட்டு அண்டங்களின் அரசாட்சி, தேவரைச்சிறைசெய்தல் முதலாயின. பின்னர் நினைந்து என இவையும். கழறல், கழறு - பகுதி.

"வெங்கணைகளும் பலவியன்படையு நேரே, யகைனை கனக்குழுவினக்கமுற வுந்திக், கங்கைமுடியா னுதவு கந்தனெதிர் வந்தே, சங்கையில் பகங்குலவு தாரக னுரைப்பான்" என்பது. கந்தபுராணச்சுருக்கம். (க௨௮)

க௨௯. நாரணன்றனக்குமற்றைநான்முகன்றனக்கும்வெள்ளை
வாரணன்றனக்குமல்லான்மதிமுடியமலனுக்குந்
தாரணிதனிலெமக்குஞ்சமரினையிழைப்பவிங்கோர்
காரணமில்லைமைந்தாவந்ததென்கழறுகென்றான்.

(இ - ள்.) 'நாரணன் தனக்கும் - திருமாலுக்கும், மற்றை நான்முகன் தனக்கும் - மற்றொருமூர்த்தியான பிரமனுக்கும், வெள்ளை வாரணன் தனக்கும் - (ஐராவதமென்னும்) வெள்ளையானையையுடையவனான இந்திரனுக்கும், அல்லால் - (இவர்கட்கே) அல்லாமல்,—மதி முடி அமலனுக்கும் - சந்திரனையணிந்த திருமுடியையுடைய குற்றமற்ற சிவபிரானுக்கும், தாரணி தனில் எமக்கும் - நிலவுலகத்திலுள்ள எங்களுக்கும், சமரினை இழைப்ப - போர்செய்தற்கு, இங்கு - இப்பொழுது, ஓர் காரணம் இல்லை - யாதொரு காரணமுமில்லையே; மைந்தா - பிள்ளையே! வந்தது என் - (நீ) வந்தகாரணம் என்ன? கழறுக - சொல்வாய்,' என்றான் - என்றுசொன்னான், (தாரகன்); (எ-று.)

பிரமவிஷ்ணுக்களும் தேவேந்திரனும் எம்மால் அடக்கப்பட்டவராதலால், அவர்கள் கறுக்கொண்டெதிர்த்து எம்முடன் போர்தொடங்கக் காரணமுண்டு. எம்மால் அங்ஙனம் இகழப்படாத சிவபிரான் எம்மை எதிர்த்துப் போர்செய்தற்குக் காரணமில்லையே; அங்ஙனமிருக்க, சிவகுமாரனெனப்படுகின்ற நீ இப்பொழுது போர்க்குவரக் காரணமென்னையோ? சொல் என்றான். 'மைந்தா' என விளித்ததனால், குமாரக்கடவுளை இவன் சிறுபிள்ளையென்று அலட்சியஞ்செய்தமை தோன்றும். என்னுடனெதிர்க்க வல்லவனல்லை யென்றவாறும். வெள்ளை - பண்புப்பெயர்; ஐ - விகுதி. வாரணம் - வடசொல். கழறுகென்றான் - விகாரம்.

"மேதகு மரிக்கு மலர்மீதி லயனுக்கு, மாதவனவும்பலிறைவற்குமலரிக்கா, வாதிபரனுக்கு மெமருக்கு மமராட, வேதுவில வந்தபடி யேதுமொழிகென்றான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம். (க௨௯)

க௩௦. அறவினை புரிந்தே யார்க்கு மருளொடு தண்டஞ் செய்யு
மிறையவ னுருமீச னிமையவர் தம்மை நீங்கள்
சிறையிடை வைத்த தன்மை திருவுளங் கொண்டு நுந்தம்
விறலொடு வன்மை சிந்த விடுத்தன னெம்மை யென்றான்.

(இ - ள்.) (அதுகேட்டுக் குமாரன் தாரகனை நோக்கி), 'அறம் வினை புரிந்தே - (எப்பொழுதும்) தருமகாரியங்களைச்செய்துகொண்டே, யார்க்கும் - எல்லார்க்கும், அருளொடு தண்டம் செய்யும் - (அவரவர்தன்மைக்கு ஏற்பக்) கருணையையுந் தண்டனையையுஞ் செய்தருள்கின்ற, இறையவன் ஆரும் - தலைவனாகிய, ஈசன் - சிவபிரான், நீங்கள் இமையவர்தம்மை சிறையிடை வைத்த தன்மை திரு உளம் கொண்டு - நீங்கள் தேவர்களைச் சிறைக்காவலிலே வைத்த இயல்பைத் திருவுள்ளத்தில் எண்ணி, நும்தம் விறலொடு

வன்மை சிந்த - உங்களுடைய பராக்கிரமத்தையும் பலத்தையும் அழித்தற் பொருட்டு, எம்மை விடுத்தனன் - எம்மை அனுப்பியருளினன் என்றான் - என்றுசொன்னான்; (எ - று.)

அருளொடு தண்டம் - அநுக்கிரகமும் நிக்கிரகமும். கடவுள்செய்யும் அநுக்கிரகம்போலவே நிக்கிரகமும் உயிர்களை நல்வழிப்படுத்தும்பொருட்டுக் கருணையாற் செய்யப்படுவதே யென்பது விளங்க,'அறவினைபுரிந்தேயார்க்கு மருளொடு தண்டஞ்செய்யு மிறைவன்' என்றான்; இவை, முறையே அறக் கருணை, மறக்கருணை எனப்படும். இவ்விடத்துக் கந்தபுராணச்சுருக் கத்தில் "நற்றொழில்புரிந்திடு" என வருவதுங் காண்க. 'அறவினைபுரிந்து' என்பதற்கு-தருமகாரியங்களை வகுத்து என்றலுமாம். தான் வகுத்த தரும வழியி லொழுகியவர்கட்கு அருளையும், அதனை யொழுகாதவர்கட்குத் தண் டத்தையுஞ் செய்கின்றன னென்க. 'நீங்கள் தேவர்களைச் சிறையிலிட்டது அறநெறிக்கு மாறுதலால், அறத்தை நிலைநிறுத்துகின்ற ஈசுரன் உங்களை யழித்தற்பொருட்டு எம்மை யேவினன்'என்று முருகக்கடவுள் தாரகனுக்குக் கூறினான். இறையவன் — தலைமையையுணர்த்துகின்ற இறைமையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்; அ - சாரியை: சாரியையின்றி 'இறைவன்' எனவும் நிற்கும்; இப்பெயர்கட்கு - (எல்லாப்பொருள்களிலும் அந்தர்யாமி யாய்த்) தங்குதலுடையவ னென்று பொருள்கூறுதலு முண்டு: இறுத்தல் - தங்குதல்; ஐ - தொழிற்பெயர்விகுதி. ஈஶன் என்ற வடமொழித்திருநாமத் திற்கு - ஐச்சுவரியத்தோடுகூடியவ னென்பது உறுப்புப்பொருள். சிறை யிடை, இடை - ஏழனுருபு. 'அறவினை' என்பதற்கு - படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் பஞ்சகிருத்தியங்க ளென்று பொ ருள்கொள்வாரும் உளர். நீங்கள் - நீர்கள் என்பதன் விகாரம்.

"நற்றொழில் புரிந்திடு நதிச்சடில நம்ப, னற்றமறு வானவர்க ளான வர்கடம்மைச, செற்றமொடு நீவிர் சிறைசெய்ததை யுணர்ந்தே, மற்றெமை விடுத்தன னும்வன்மை விரல் சிந்த" என்பது, கந்தபுராணச்சுருக்கம். ()

வேறு.

௧௩௧. கூரிய வேற்படைக் குமர நாயகன்
பேரரு ணிலைமையா லினைய பேசலும்
போரினை யிழைத்திடும் பூட்கை மாமுகத்
தாரக னென்பவன் சாற்றன் மேயினான்.

(இ - ள்.) கூரிய வேல் படை - கூர்மையுள்ள வேலாயுதத்தையுடைய, குமர நாயகன் - முருகக்கடவுள், பேர் அருள் நிலைமையால் - மிக்ககரு ணையின் இயல்பினால், இனைய பேசலும் - இச்சொற்களைக் கூறியவளவி லே,—போரினை இழைத்திடும் பூட்கை மா முகம் தாரகன் என்பவன் - போர்செய்தற்குச் சித்தனாகவுள்ளவனும் உள்துளையுள்ள துதிக்கையை யுடைய யானையின் முகமுடையவனு மான தாரகாசுரன், சாற்றல் மேயி னான் - (சில) கூறத்தொடங்கினான்; (எ - று.)—அவற்றை, அடுத்த நான்கு கவிகளிற் காண்க.

கொடிய அசுரனை அழிக்க வந்த குமாரன், அவன்கேட்ட வினாவிற்கு இவ்வணம் சாந்தகுணத்தோடு விடைகூறியது, தனக்கு இயல்பாகவுள்ள பெருங்கருணையினாலேயே யாதலால், 'பேரருள்நிலைமையா லினையபேச லும்' என்றார். 'பேரருள்நிலைமையால்' என்பதற்கு - தேவர்களின்சிறை யிருப்பை நீக்குங் கருத்தினா லென்று கருத்துரைத்தலு மொன்று. இவ் வார்த்தையைக்கேட்டும் அஞ்சாது போர்செய்யத் துணிந்த துணிவுடைமை பற்றி, 'போரினையிழைத்திடும் தாரகன்' என்றார். 'பூட்கைமாமுகத்தார

கன்' என்றது, செய்வன தவிர்வன அறியும்விவேகமில்லாத விலங்கின் முக முடையவனாதலால் அங்ஙனக்தனிக்தனன் என இழித்துரைத்தவாறும். பூட்கை புழைக்கை யென்பதன் மரூஉ; புழைக்கை, பூழைக்கை, பூழ்க்கை, பூட்கை என முறையே மாறிவந்த தென்க. 'போரினையிழைத்திடும்' என்பது, தாரகனுக்கு அடைமொழி. துதிக்கைக்கு அடைமொழியாக்கினும் அமையும். இனி, போரினையிழைத்திடும் பூட்கை யென்பதற்கு - போரைச் செய்கின்ற தன்மையையுடைய என்றும் பொருள்கொள்ளலாம்; பூட்கை - உதடேசம்: தனிமொழி: பகாப்பதம்; "யானையாளிப்பெயரும் யானையும், மேற்கோளும் இவை பூட்கை யென்ப" என்ற பிங்கலந்தையைக் காண்க. மேயினான்—மே - பகுதி: இதுவே, உகரச்சாரியைபெற்று 'மேவு' எனநிற்பது; மேவு என்ற பகுதி 'மே' எனத் தொகுத்தல்விகாரமடைந்த தென்றலுமொன்று: ய், இன் என்ற இரண்டனுள், ய் - இறந்தகாலவிடைநிலையென்றால், இன் - சாரியை; இன் - இறந்தகாலவிடைநிலை யென்றால், ய் - எழுத்துப்பேறு.

இதுமுதற் பதினாறு கவிகள் - இப்படலத்தின் ௯ - ஆம் கவி போன்ற கலிவிருத்தங்கள். (௯௧)

௯௨. செந்திருத்திகழுமார்புடையசெங்கணான்
சுந்தரக்கலுழன்மேற்றோன்றிப்போர்செய்தே
யந்தரக்கதிர்புரையாழியுய்த்ததென்
கந்தரத்தணிந்ததுகாண்கிலாய்கொலோ.

இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) செம் திரு திகழும் மார்பு உடைய - செந்நிறமுடைய இலக்குமி வீற்றிருந்துவிளங்கப்பெற்ற மார்பையுடைய, செம் கணன் - சிவந்த கண்களையுடையவனான திருமால், சுந்தரம் கலுழன்மேல் தோன்றி - அழகிய கருடன்மேலேறி (எனது எதிரில்) வந்து, போர் செய்து-(என்னோடு) போரைச்செய்து, உய்த்தது - (என்மீது) செலுத்தியதான, அந்தரம் கதிர் புரை ஆழி - ஆகாயத்திலவிளங்குகின்ற சூரியமண்டலத்தை யொத்த சக்கராயுதம், என் கந்தரத்து அணிந்தது - (என்னை யாதோரூறுஞ்செய்யமாட்டாது) எனதுகழுத்தில் ஆபரணமாகப் பொருந்தியிருத்தலை. காண்கிலாய் கொல்லோ - (நீ)பார்த்தாயில்லையோ? (எ-று.)

பார்த்திருந்தால் இங்ஙனம் அலட்சியமாக என்னொடு போர்புரியத் துணியமாட்டா யென்பது, உட்கோள். செங்கணன் - செந்தாமரைக்கண்ணன்; கோபத்தாலுங் கண்கள் சிவந்தன. கலுழன் - வடசொற் சிதைவு. அந்தரம், கந்தரம்-வடசொற்கள். கந்தரம்-தலையைத் தரிப்பது எனக் கழுத்துக்குக் காரணக்குறி; கம் - தலை. கதிர் - ஒளி: ஆயிரங்கிரணங்களையுடைய சூரியமண்டலத்திற்குச் சினையாகுபெயர்; பண்பாகுபெய ரெனினுமாம். புரை - உவமவுருபு. உய்த்தது - ஒன்றன்பா லிறந்தகால வினையாலணையும் பெயர். அணிந்தது - இறந்தகாலத்தொழிற்பெயர். (௯௨)

௯௩. இன்றுகாறெம்முடனிகலிப்போர்செயச்
சென்றுளாரியாவருஞ்சிறிதுபோழ்தினுட்
பொன்றுவாரிரிந்தனர்போவரல்லது
வென்றுளாரிலையதுவினவலாய்கொலோ.

(இ - ள்.) இன்று காறு - இன்றைத்தினம்வரையிலும், எம்முடன் - எங்களோடு, இகலி - பகைத்து, போர் செய சென்றுளார் யாவரும் - யுத்தஞ் செய்ய வந்துள்ளவரெல்லாரும், சிறிது போழ்தினுள் -சிறிதுபொழுதினுள்

* ௯.

னே, பொன்றுவார் - (எங்களால் அழிக்கப்பட்டு) இறப்பார்கள்; (அன்றி), இரிந்தனர் போவர் - சிதைந்து ஓடிப்போவார்கள்; அல்லது - இங்ஙனமே யல்லாமல், வென்றனார் இலை - (எங்களைச்) சயித்தவர் இல்லை; அது - அத்தன்மையை, வினவலாய் கொல் ஓ - (நீ)கேள்விப்பட்டாயில்லைபோலும்.

கேள்வியுற்றிருந்தால் இங்ஙனம் துணிந்துவாரா யென்பது,உட்கோள். பொன்றுவார், போகர் என்பவற்றில், வகரஇடைநிலை - தன்மையுணர்த்தி ற்று. இகலி - இறந்தகாலவினையெச்சம்; இகல் - பகுதி, இ - விகுதி. இகல்- தொகுத்தல்; பொதுக்குறிப்புமுற்று, இங்கே பலர்பாலுக்கு வந்தது. 'அல் லது' - எதிர்மறைக்குறிப்புவினையெச்சம். வினவலாய்—அல் - எதிர்மறை யிடைநிலை. (கரு.ரு)

கரு.ச. முட்டிவெஞ்சமரினைமுயலமுன்னநீ
விட்டிடுதலைவரைவென்றுவெற்பினிற்
பட்டிடவியற்றினன்பலகணங்களை
யட்டனனவற்றினையறிந்திலாய்கொலோ.

(இ - ள்.) முட்டி - (என்னுடன்) எதிர்த்துத் தாக்கி, வெம் சமரினை முயல - கொடிய போரைத் தொடங்கிசெய்யும்படி,முன்னம் நீ விட்டிடு- முன்பு நீ ஏவியனுப்பிய, தலைவரை - படைத்தலைவர்களை, (யான்),வென்று- சயித்து, வெற்பினில் பட்டிட இயற்றினன் - (கிரௌஞ்ச) மலையிலே மயங் கிக்கிடக்கும்படி செய்தேன்; (அன்றியும்), பல கணங்களை அட்டனன் - அநேக பூதகணங்களைக் கொன்றேன்; அவற்றினை - அச்செய்திகளை, அறிந் திலாய் கொல்ஓ - (நீ) அறிந்தாயில்லையோ? (எ - று.)

அறிந்திருந்தால் இப்படி எதிர்வந்திராய் என்பது, உட்கோள். இயற் றினன், அட்டனன்—தன்மையொருமை. அட்டனன், அடு - பகுதி; இக் குறில்ணைப்பகுதி, இடையே தன்ஒற்றுஇரட்டி இறந்தகாலங்காட்டிற்று. அவற்றினை—அற்று, இன் - சாரியைகள். (கரு.ச)

கரு.ரு ஆகையாலெம்முடனமரியற்றியே
சோகமதடையலைசூலபாணிபா
லேகுதிபாலநீயென்றுகூறலும்
வாகையங்குமரவேண்மரபிற்கூறுவான்.

(இ - ள்.) ஆகையால் - ஆதலால், நீ—,எம்முடன்—, அமர் இயற்றி - போர்செய்து, சோகமது அடையலை - துன்பமடையாதே; பால-பிள்ளாய்! சூலபாணிபால் ஏகுதி - (உனது தந்தையான) சிவபிரானிடம் (உயிரோடு) செல்வாய்,என்று கூறலும் - என்று (தாரகன்) சொன்னவளவிலே,—வாகை அம் குமரவேள் - வெற்றிக்குஉரிய அழகிய முருகமூர்த்தி, மரபின் கூறு வான் - (அவற்றிற்கு ஏற்ற)முறைமைப்படி எதிர்கூறுபவனானான்; (எ-று.)— அவற்றை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

அடையலை - எதிர்மறையொருமையேவல்;முன்னிலையெதிர்மறையொ ருமைமுற்றெச்சமாக்கி, அடையாம லென்றும் உரைக்கலாம்; ஐ - விகுதி, அல் - எதிர்மறையிடைநிலை. சூலபாணி, பாலன் - வடசொற்கள். சூல பாணி - சூலாயுதத்தைக் கையிலுடையவ னென்று பொருள்படும்; வட மொழி யன்மொழித்தொகை. 'இளங்கன்று பயமறியாது'என்றபடி நீ உனது இளமைக்கு உரிய பேதைமையால் இங்ஙனம் என்னைமதியாது எதிர்த்து வந்திட்டா யென்பது தோன்ற, 'பால' என்று விளித்தான். உனது தந்தை யினிடம் உள்ள அன்பினால் உன்னைஉயிரோடுவிடுகின்றேன் போ என்பான் 'சூலபாணிபாலேகுதி' என்றன னென்க. ஏகுதி ஏவலொருமைமுற்று; ஏகு - பகுதி, இ - விகுதி, த்-எழுத்துப்பேறு. (கருசு)

௧௯௬. தாரணிமறையவன் றதீசிதன்மிசை
நாரணன்விடுத்ததோர்நலங்கொளாழிதன்
கூரிணையிழந்துபோய்க்குலாலன்சக்கர
நீர்மையதானதுவினவலாய்கொனீ.

இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தாரணி - நிலவுலகத்திலுள்ள.மறையவன் - பிராமணனாகிய, ததீசிதன்மிசை - ததீசிமுனிவன்மேல். நாரணன் - திருமால், விடுத்தது - (முன் ஒருகாலத்திற்) பிரயோகித்ததான, ஓர் நலம் கொள் ஆழி - ஒப்பற்ற சிறப்பைக் கொண்ட அச்சக்கராயுதமானது,(அதனால்),தன் கூரிணை இழந்து போய் - தனதுகூர்மையை இழந்தொழிந்து.குலாலன் சக்கரம் நீர்மையது ஆனது - குயவன் (மட்கலம்வனைதற்குச் சுழற்றும்) சக்கரத்தினது தன்மையதாய்விட்டதை, நீ—,வினவலாய் கொல்-கேட்டிலையோ? (எ-று.)

மிக்ககூர்மையையுடையதும் எறியப்பட்டவரைத் தவறாமலழிக்கவல்லதுமான திருமாலினது சக்கராயுதம்,முன் ஒருகாலத்தில் வச்சிரசரீரியான ததீசிமகாமுனிவன்மேற் பிரயோகிக்கப்பட்டு அவனுடம்பிற் பட்டதனால், கூர்மை மழுங்கிப்போய்விட்டது; அதனாலன்றோ,நீ அவ்வாயுதத்தால் ஊறுபடாமல்தப்பினாய் என்பதாம். அங்ஙனங்கூர்மைமழுங்கியிராதிருக்குமாயின், நீ அதனால் ஊறுபட்டிருப்பாயென்றபடி. அச்செய்தியைக்கேட்டிருப்பாயாயின், அச்சக்கரம் உன்னைக்கொல்லாமையை ஒருபெரும்புகழாக மதியாயென்பது, உட்கோள்.

பிருகுமுனிவம்சத்தில் தோன்றியவனும் சுக்கிரனைவழிபட்டொழுகுபவனுமான ததீசிமகாமுனிவனும் குபனென்னும் அரசனும் ஒருவரோடொருவர் மிக்க அன்புகொண்டு வாழுநாட்களில் ஒருநாள், இருவரும் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருக்கையில், 'அந்தணரோ, அன்றி அரசரோ சிறந்தவர்' என்று ஆராய்ச்சிசெய்யததொடங்கியபொழுது, முனிவன் 'அந்தணரே சிறந்தவர்' என்ன, அதனைமறுத்து அரசன் 'மன்னவரே சிறந்தவர்' என்றான்; இவ்விவாதம் முதிர்ந்து விளையாட்டு வினையாய்முடிந்து ஒருவரோடொருவர் போர்செய்யத்தொடங்கி முனிவன் அரசனை யடிக்க, அரசன் தனது வச்சிராயுதத்தை வீசி முனிவனது உடம்பைத் துண்டுபடுத்த, முனிவன் சுக்கிரனைநினைத்துக்கொண்டே நிலத்தில் விழுந் திறந்தான்; அதனையுணர்ந்து வந்த சுக்கிரன் துணிபட்ட உடற்பகுதிகளைப் பொருத்திக் கூட்டி மிருதசஞ்சீவியாற் பிழைப்பூட்டி யெழுப்பி, 'காஞ்சிபுரத்திலுள்ள இஷ்டசித்திதீர்த்தத்தில் முழுகி இஷ்டசித்தீசுரனை வழிபட்டு, இனி என்றும் இறவாத வச்சிரசரீரம் பெறுவாய்' என்றுசொல்லி, அக்கடவுளருளால் தான்பெற்ற மிருதசஞ்சீவிமந்திரத்தை உபதேசித்துச் செல்ல, அவ்வாறே, முனிவன், மகிழ்ச்சியோடு சச்சிப்பதிசேர்ந்து புண்ணியதீர்த்தத்தில் மூழ்கிச் சிவபூசைசெய்து, காட்சிதந்த அக்கடவுளின் அருளால், இனிக் கொலையடையாதபடியான வச்சிரசரீரத்தைப் பெற்று,மீண்டு வந்து,சபையிலிருந்த குபனது சிரத்தில் இடத்தாளா லுதைத்தலும், தனது அன்பனான அவ்வரசனுக்காகப் பரிந்துவந்து திருமால் அம்முனிவனோடு போர் தொடங்கி அப்போரில் தனது ஆயிரம்அராமுள்ள சக்கரப்படையைத் ததீசியின் மேற் பிரயோகிக்க, அச்சிறந்த ஆயுதம் சிவபிரானருளால் வச்சிரசரீரங்கொண்ட அம்முனிவனுடம்பிற் பட்டு, அதற்கு யாதொருறுபாடுஞ் செய்யமாட்டாமல்,அதிற்பட்டதனால்தான்கூர்மைமழுங்கிப்போய்விட,அதுகண்டு திருமால் திகைக்கவே, முனிவன் வென்றிட்டனனென வரலாறு உணர்க.
"ஒரு தொல்விறைக் காகவே, முன்னம் மா லமர்மூண்டெழ மற்றவன்,

றன்னைவென்றததிசியென்பா ணரோ" என மேல் தக்ஷகாண்டத்துத் ததீசிப் படலத்தில் வருவதுங் காண்க.

'தாரணிமறையவன்' என்றது, ஒருமனிதன்மீதுபட்டுக்கூர்மைமழுங்கிய சக்கராயுதத்தை நீ கழுத்திலணிந்துகொண்டது ஒருசிறப்பாகாது என்றதைக் குறிப்பிக்கும். இனி, தார் அணி எனப்பிரித்து, தாமரைமலர்மாலையை யணிந்த அந்தணனென்றும் உரைக்கலாம்; தாமரைமலர்மாலை பிராமணர்க்கு உரியது. கூர்மையும் ஆற்றலும் இன்றிவட்டவடிவமாத்திரத்தோடுநின்றிட்டதென்பான், 'குலாலன்சக்கரநீர்மையதானது' என்றான். கொல்லுதற்காயினும் ஊறுசெய்தற்காயினுங் கருவியாயிற்றில்லை யென்க. குலாலன், சக்ரம் - வடசொற்கள். போய்க் கூரினையிழந்து என மொழி மாற்றி, சென்று அவனுடம்பின்மீதுபட்டுக் கூர்மையையிழந்து எனினுமாம். (௧௨௬)

௧௨௭. சூற்புயன்மேனியான் றங்கச்செங்கையின்
பாற்படுதிகிரிபோற்பழியிற்றுஞ்சுமோ
வேற்புறுபடைக்கெலாமிறைவனாகுநம்
வேற்படைநின்னுயிர்விரைவினுண்ணுமால்.

(இ - ள்.) ஏற்பு உறு - (யாவரும் கையில்) ஏந்துதலுடைய, படைக்கு எலாம் - ஆயுதங்களெல்லாவற்றுக்கும், இறைவன் ஆகும் - தலைமைபூண்டதாயுள்ள, நம் வேல் படை - நமது வேலாயுதம்,—சூல் புயல் மேனியான் தங்கம் செம் கையின்பால் படு திகிரி போல் - கருக்கொண்டமேகம்போன்ற கரியவடிவமுடையவனான திருமாலினது உயர்ந்த சிவந்த கையினிடத்துப் பொருந்திய சக்கராயுதம்போல, பழியில் துஞ்சுமோ - (உன்மேற்பட்டு வீணாகிப்) பழிப்பில் நிலைபெறுமோ? (பெறாது: பின்னைஎன்செய்யுமெனின்:—) நின் உயிர் விரைவின் உண்ணும் - உனது உயிரை விரைவிற்கவர்ந்துகொள்ளும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

சூற்புயல் - நீர்கொண்ட மேகம். பழியில் துஞ்சுதல் - பழிப்பில் அழுந்துதல்; என்றும்மாறாத நிந்தனையை யடைதல். ஓ - எதிர்மறை. ஏற்பு - ஏற்றல்; ஏந்துதல்: 'பு' விகுதி பெற்ற தொழிற்பெயர். இனி, 'ஏற்பு உறு' என்பதற்கு - இலக்கணம்அமைந்த தகுதிபெற்ற என்றும் பொருள்கொள்ளலாம். 'இறைவனாகும்' என்று உயர்திணையாற் கூறியது, வேலின்சிறப்பை விளக்குதற்கு: உயர்வுபற்றிவந்த திணைவழுவமைதி; "யானையுளரசன்," "நாகாதிபன்", "கஜேந்திரன்" என்றாற்போல. அன்றியும், 'ராஜந்' சப்தம் வடமொழியில் ஆண்பாற்சொல்லாதலால், அதுபற்றி 'இறைவன்' என உயர்திணையாண்பாலாற்கூறிய தெனினுமாம். 'படைக்கெலா மிறைவனாகும் வேற்படை'—இதன் சிறப்பை, "ஆயதற்பின்னர் எவின் மூதண்டத் தைம்பெரும் பூதமு மடுவது, எய பல்லுயிரும் ஒருதலை முடிப்பது எவர் மேல் விடுக்கினும் அவர்தம், மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயிருண்பது எப்படைக்கும், நாயக மாவது ஒருதனிச் சுடர் வேல் நல்கியே மதலைகைக்கொடுத்தான்" என்ற படையெழுபடலத்துச்செய்யுளால் நன்கு உணர்க. படைக்கிறைவன் - ஆயுதராஜன். இனி, பழியின் துஞ்சுமோ - பழிபெற்று (உன்கழுத்தில்) தங்கிக்கிடக்குமோ? என்று உரைப்பாரும் உளர். வேற்படை நின்னுயிர் விரைவினுண்ணும்—உண்ணுதது உண்பதுபோலவும், உண்ணப்படாதது உண்ணப்படுவதுபோலவுஞ் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. (௧௨௭)

௧௨௮. உங்கள்பேராற்றலிவ்வுலகைவென்றன
விங்குநாம்வருதலுமிமைப்பின்மாய்ந்தன

வங்கண்மாஞாலமுண்டமருமாரிருள்
பொங்குபேரொளிவரவிளிந்துபோனபோல்.

(இ - ள்.) அம் கண் மா ஞாலம் உண்டு அமரும் - அழகிய இடமகன்ற பெரிய நிலவுலகமுழுவதையும் மூடியிருக்கின்ற, ஆர் இருள்-அழித்தற் கரிய இருளானது, பொங்கு பேர் ஒளி வர - (எல்லாவொளிகளினும்) மிக்கு விளங்குகின்ற பெருஞ்சோதிவடிவமான சூரியன் தோன்றியவளவிலே,விளிந்து போன போல் - அழிந்துபோன தன்மை போல,—இ உலகை வென்றன - இவ்வுலகமுழுவதையும் வெற்றிகொண்டனவான, உகள் பேர் ஆற்றல் - உங்களுடைய பெரியவல்லமைகளெலலாம், நாம் இவகு வருதலும் - நாம் இவ்விடத்தில் வந்தவளவிலே, இமைப்பின் மாய்ந்தன - ஒரிமைப்பொழுதில் அழிந்திட்டன; (எ - று.)

என்றது, நீழ்கடந்த போர்முதல் தவறாமல் ஆற்றல் குறையத்தொடங்கியதைக் குறித்தது; அன்றி, 'மாய்ந்தன' என்றது,விரைவுந் தெளிவும்பற்றி எதிர்காலத்துக்கு இறந்தகாலம் வந்த காலவழுவமைதியாகவு மாம். உண்டு - உட்கொண்டு. ஆர் இருள் - பண்புத்தொகை; வினைத்தொகையாய், நிறைந்த இருளுமாம். போன - போனது என்பதன் விகாரம். வென்றன - பலவின்பாற்பெயர். மாய்ந்தன - முற்று. (கநஅ)

கநகூ ஈட்டியமாயைகளெவையுந்தன்வழிக்
காட்டியகிரியையுங்கள்வநின்னையுந்
நீட்டியவேல்கொடுசெற்றுச்சேனையை
மீட்டிடுகின்றனன்விரைவினுலென்றான்.

(இ - ள்.) கள்வ-வஞ்சனையையுடையவனே! ஈட்டிய மாயைகள் எவையும் தன்வழி காட்டிய கிரியையும்-தொகுதியான மாயைவகைகளெல்லாவற்றையுந் தன்னிடத்திலே காண்பித்த கிரௌஞ்சகிரியையும், நின்னையும் - உன்னையும், நீட்டிய வேல் கொடு - கூர்மையமைந்த வேலாயுதத்தால், விரைவினால் - விரைவில், செற்று - அழித்து, சேனையை மீட்டிடுகின்றனன் - (எனது) சேனையை மீட்டுவிடுகிறேன்,என்றான்-என்று(குமாரன் தாரகனை நோக்கிக்) கூறினான்; (எ - று.)

'ஈட்டியமாயைகளெவையுந் தன்வழிக் காட்டிய' என்ற அடைமொழி, 'நின்னையும்' என்றதனோடுங் கூட்ட அமையும். 'கிரியையும் கள்வ நின்னையும்' என்ற சொற்போக்கினால். கள்ளர் மலைகளிலிருந்துகொண்டு பிறரை வருத்துதல்போல, நீயும் இக்கிரௌஞ்சகிரியி லிருந்து அனைவரையும் உபத்திரவிக்கின்றா யென்பது தோன்றும். 'கள்வநின்னையும்' என்பதை,கள்வன் நின்னையும் எனப் பதம்பிரித்து, கள்ளனாகிய உன்னையும் என உரைத்தலும் ஒன்று; "சிலவிகாரமா முயர்திணை" என்பதனால் னகரம் கெட்ட தென்க. 'கள்வன்' என்பதில், வ் - பெயரிடைநிலை. சேனையை மீட்டிடுதல் - இறந்தவற்றையும் மாயையால் மயக்கிக்கிடந்தவற்றையும் மீளஎழுப்பி உடன் அழைத்துச்செல்லுதல். மீட்டிடுகின்றனன் - விரைவு அல்லது தெளிவுபற்றி எதிர்காலத்துக்கு நிகழ்காலம் வந்த காலவழுவமைதி. 'விரைவினால்' என்பதில்,மூன்றனுருபு - ஏழனுருபின்பொருள தாதலால்,உருபுமயக்கம். 'விரைவினால்' என்பது, 'செற்று', 'மீட்டிடுகின்றனன்' என்ற இரண்டனோடும் இயையும். (கநகூ)

கச0. என்றலுஞ்சிறியேயிகலித்தாரகன்
குன்றுறழ்தன்சிலைகுனியக்கோட்டியே
மின்றிகழ்நாணொலியெடுப்பவிண்மிசைச்
சென்றிடுமமரருந்தியக்கமெய்தினர்.

(இ - ள்.) என்றலும் - என்று (குமாரக்கடவுள்) கூறியவளவிலே, தாரகன்—, சீறி - கோபித்து, இகலி - வலிமைகொண்டு, குன்று உறழ் தன் சிலை குனிய கோட்டி - மலையையொத்த [வலிய பெரிய] தனது வில்லை வளையும்படி நன்குவளைத்து, மின் நிகழ் நாண் ஒலி எழுப்ப - மின்னல்போலவிளங்குகின்ற வில்லின்நாணியை (க் கைவிரலால் தெறித்து) ஓசையையெழுப்ப, (அவ்வொலிமுழக்கத்தைக்கேட்டு), விண்மிசைசென்றிடும் அமரரும் நியக்கம் எய்தினர் - வானத்திற்செல்லுகின்ற தேவர்களும் திகைப்படைந்தார்கள்.

இகலி - பகைமைகொண்டு எனினுமாம். உறழ் - உவமவுருபு. கோட்டி - கோடு என்பதன் பிறவினை. நாணொலி - குணத்வனி. விண்மிசை, மிசை - ஏழனுருபு. நியக்கம் - நியங்கு என்னும் பகுதியின் தொழிற்பெயர். அம் - விகுதி, வலித்தல் - விகாரம். 'விண்மிசைச் சென்றிடு மமரருந் நியக்கமெய்தினர்' என்றதனால், இச்சிலவுலகத்தவர் நியக்கமெய்தியமை தானே விளங்கும்; அருத்தாபத்தி. உம் - உயர்வுசிறப்பு. (௧௪௦)

௧௪௧. எய்தியகாலையிலெந்தைகந்தவேள்
கைதனிலிருந்ததோர்கார்முகந்தனை
மொய்தனில்வாங்கிநாண்முழக்கங்கோடலு
மைதெனவுலகெலாமழுங்கிற்றென்பவே.

(இ - ள்.) எய்திய காலையில் - அவனைத்திகைப்படைந்த பொழுது, எந்தை கந்த வேள் - எமது தலைவனாகிய முருகமூர்த்தி. கைதனில் இருந்தது ஓர் கார்முகந்தனை - தன்கையிலிருந்ததோ ரொப்பற்ற வில்லை, மொய்தனில் வாங்கி - வலிமையால் வளைத்து, நாண் முழக்கம் கோடலும் - வில்நாணொலியைச் செய்தவளவில், உலகு எலாம் - உலகமனைத்தும், ஐது என அழுங்கிற்று - நொய்ம்மையடைந்து வருந்திற்று; (எ - று.)

என்ப - அசை; இது அசையாதல், சிந்தாமணி தொல்காப்பியங்களின் நச்சினார்க்கினியருரையால் விளங்கும்: இது, தொல்காப்பியத்து "கிளந்தவல்லவேறுபிறதோன்றினுங் கிளந்தவற்றியலா னுணர்ந்தனர் கொளலே" என்ற இடைச்சொல்லியற்புறனடைசூத்திரத்தாற் கொள்ளப்பட்டது. 'கோடலும்' என்ற 'உம்' ஈற்று இறந்தகாலவினையெச்சத்தில், கொள்என்ற பகுதி முதல்நீண்டது; த், அல் - சாரியைகள்: மற்றவை - சந்தி. ஐது - அற்பம். 'ஐதென' என்பதை விரைவுக்குறிப்பென்பாரு முளர். உலகு - சாதியொருமை. உலகெலா மழுங்கிற்று - பன்மையொருமைமயக்கம்; [நன் - பொது - ௨௧:] இனி, எல்லாமென்பதற்கு - முழுதுமென்றபொருள்கொள்ளலுமாம். கீழ்ச்செய்யுளில் "நியக்கமெய்தினர்" என்றதன் அநுவாதமாக, 'எய்திய காலையில்' என்றனர். (௧௪௧)

௧௪௨. நாரியின்பேரொலிநாதன்கோடலு
மாரணன்முதலினோர்தாமுமஞ்சினர்
பேருலகெங்கணும்பேதுற்றேங்கின
தாரகமுதல்வனுந்தலைதுளக்கினான்.

(இ - ள்.) (இங்ஙனம்), நாரியின் பேர் ஒலி - வில்நாணியினது பெரியவோசையை, நாதன் கோடலும் - (யாவர்க்குந்) தலைவனான குமாரன் செய்தவளவிலே,—ஆரணன் முதலினோர்தாமும் - வேதங்களையெப்பொழுதும்பாராயணஞ்செய்பவனான பிரமன் முதலானவர்களும், அஞ்சினார் - அச்சங்கொண்டார்கள்; பேர் உலகு எங்கணும் - பெரிய உலகத்தின் எல்லா இடங்களிலு முள்ள பிராணிகளெல்லாம், பேதுற்று - மதிமயங்கி, ஏங்கின - கலங்கின; தாரகன் முதல்வனும் - தாரகனென்கிற அசுரராசனும், தலைதுளக்கினான் - தலையசைத்துக்கொண்டாடினான்; (எ - று.)

'தலைதுளக்கினான்' என்றது, தான் எதிர்த்துப்பொருதற்குஏற்றவனொன்று கருதினானென்றவாறு. பேது - மாறுபடுதல்; பேதம் என்னும் வடசொல்லின் விகாரம். துளக்கு - துளங்கு என்பதன் பிறவினை. நாதன், ஆரணம் - வடசொற்கள். தாரக முதல்வன்—"சிலவிகாரமா முயர்திணை." உம்மைகள்மூன்றனுள், இரண்டாமடியிலுள்ளது - உயர்வுசிறப்போடு எதிரதுதழுவியஎச்சம்; மூன்றாமடியிலுள்ளது - முற்றப்பொருளோடு எச்சப்பொருளது; நான்காமடியிலுள்ளது - உயர்வுசிறப்போடு இறந்ததுதழுவிய எச்சம். தலை - தலைமையானஉறுப்பு: சிரசிற்குவடமொழியில் 'உத்தமாங்கம்' என்பது ஒருபெயர். (கசஉ)

கசங. துளக்கியதாரகசூரன்கைத்தலங்
கொளற்குரிவில்லுமிழ்கொள்கைத்தாலென
வளக்கதிர்நுனைகெழுவயிரவான்கணை
யளக்கருமெண்ணிலவார்த்துத்தூண்டினான்.

(இ - ள்.) துளக்கிய - (அவனைக்) தலையசைத்த, தாரக சூரன் - தாரகனாகிய வீரன்,---கை தலம் கொளற்கு உரி வில் உமிழ் கொள்கைத்து என - (தனது) கையினிடத்திற் கொள்ளுதற்கு உரிய வில்லானது (கைம்முயற்சியின்றித் தானே அம்புகளைச) சொரியுமியல்பினதென்று(கண்டவர்)கூறும்படி,—வளம் கதிர் நுனை கெழு வயிரம் வான் கணை - மிக்கஒளியையுடையவையும் கூர்நுனிசிறப்பாயமையப்பெற்றவையும் வச்சிராயுதம்போன்றவையுமான பெரிய அம்புகளை, அளக்க அரும் எண் இல - அளவிடுதற்குஅரியனவாம்படி எண்ணில்லாதனவாக, ஆர்த்து தூண்டினான் - ஆரவாரஞ்செய்துகொண்டு பிரயோகித்தான்; (எ - று.)—ஆல் - அசை.

மிக்க விரைவாக நிகழ்தலால், அவன் அம்பைத் தூணியிலிருந்து கையில் எடுத்தலும் வில்லில் தொடுத்தலும் நாணியையிழுத்து விடுத்தலும் என்னும் இவை தோன்றாமல் வில்லினின்று அம்புகள் வெளிப்படுதல்மாத்திரமே தோன்றுகின்றமைபற்றி, 'வில்உமிழ் கொள்கைத்தாலென' எனப்பட்டது. அளக்கரும் - அளக்க அரும் என்பதன் தொகுத்தல்: அருமையென்னும் பண்புப்பெயர், 'அரும்' என ஈற்றுஐகாரம்மாத்திரம் கெட்டது; இனி, கணை அளக்கரும் எனஎடுத்து, அம்புவெள்ளங்களையும் என்று உரைத்தலும் ஒன்று; அளக்கர்-கடல். தாரக சூரன் - வடமொழித்தொடர். 'கைத்தலம்' என்றதில் 'தலம்' என்றது, ஏழனுருபின்தன்மையது. உரி - உரிமை யென்னும் பண்பின் அடி; உரிய என்ற குறிப்புப்பெயரெச்சத்தின் ஈறுதொகுத்த வெனினுமாம். கொள்கைத்து - ஒன்றன்பாற் குறிப்புமுற்று. வளக்கதிர், நுனைகெழு, வயிரம், வான் என்ற நான்கும் - கணைக்கு அடைமொழி. (கசங)

கசச. ஆயதோர்காலையிலாறுமாமுகன்
மீயுயர்சிலைதனின்விரைவிலாயிரஞ்
சாயகந்தூண்டியேதாரகாசுர
னேவினபகழிகளியாவுஞ்சிந்தினான்.

(இ - ள்.) ஆயது ஓர் காலையில் - அன்னமான சமயத்தில், ஆறு மாமுகன் - சிறந்த ஆறுதிருமுகங்களையுடையவனான முருகக்கடவுள்,—மீ உயர் சிலைதனின் - மிகமேம்பட்டுள்ள தன்வில்லிலே, விரைவில் - விரைவாக, ஆயிரம் சாயகம் தூண்டி - ஆயிரம்அம்புகளைத் தொடுத்துச்செலுத்தி, (அவற்றால்), தாரகாசுரன் ஏவின பகழிகள் யாவும் சிந்தினான்-தாரகாசுரன் (தன்மீது) பிரயோகித்த அம்புகளையெல்லாம் (தன்மேற்படாதபடி எதிர்தடுத்துச்) சிதறடித்தான்; (எ - று.)

அவன்எய்தஅம்புகளையெல்லாம் எதிரம்புதொடுத்து விலக்கினன் என்பதாம். ஆயது ஓர்காலையில் என்பதற்கு-(அவன் கணைகள்எண்ணிலவாகத் தூண்டிய) அத்தன்மையைக் கருதுமளவில் என்று உரைப்பினுமாம்; இப்பொருளில், 'ஓர்காலை'என்றது-வினைத்தொகை: 'ஆயது' என்றது, இரண்டாம்வேற்றுமைத்தொகை. சிலைதனின் என்பதை,ஐந்தாம்வேற்றுமையாகவுங் கொள்ளலாம்; வில்லினின்று என்ற பொருள். மீ உயர் - மிகநீண்டுள்ள என்பாருமுளர். எயின - எயின என்றதன் விகாரம். பகழிகளியாவும்— [கன் - மெய் - ங.] தூண்டிச் சிந்தினன் எனக. லாயகம் - வடசொல்.

"என்று பல வேலவ னிசைத்தமொழி கேளாக், குன்றுறழு மொய்ம்புள கொடேர்தருவர் மன்னன், வன்றனு வளைப்ப வுமைமைந்தனும் வளைத்தான், தன்றிருவருள கணைசொரிக் தமர்புரிந்தார்" என்பது, கந்தபுராணச்சுருக்கம். (௧௪௪)

௧௪௫. சிந்தியகாலையிற்செயிர்த்துத்தாரக
னுந்தினன்பின்னருமோராயிரங்கணை
கந்தனுமனையதுகண்டுவல்லையி
னைந்திருபகழிதொட்டவற்றைநீக்கினன்.

(இ - ள்.) சிந்திய காலையில் - (இவ்வாறு தாரகனெய்தஅம்புகளையெல்லாம் குமாரன்) சிதறடித்தபொழுது, தாரகன்—,செயிர்த்து - கோபங்கொண்டு, பின்னரும் - மீண்டும், ஓர் ஆயிரம் கணை - ஓர்ஆயிரம்அம்புகளை, உந்தினன் - செலுத்தினன்; கந்தனும் - முருகனும், அனையது கண்டு-அத்தன்மையைப் பார்த்து, வல்லையின் - விரைவில், ஐந்து இரு பகழி தொட்டு - பத்து அம்புகளைப் பிரயோகித்து, (அவற்றால்), அவற்றை நீக்கினன்-அந்தத் தாரகனுடைய ஆயிரம்அம்புகளையும் விலக்கினன்; (எ - று.)

ஐந்திருபகழி - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். உம்மைகள் - இறந்ததுதழுவியஎச்சம். (௧௪௫)

௧௪௬. மீட்டுமத் தாரகன் விசிகம் வெஞ்சிலை
பூட்டிய வாங்கலும் புராரி காதல
னீட்டமொ டொருகணை யேவி யாங்கவன்
றோட்டுணை வில்லினைத் துண்ட மாக்கினன்

(இ - ள்.) மீட்டும் - பின்பும், அ தாரகன் - அந்ததாரகாசுரன், விசிகம் - அம்பை, வெம் சிலை பூட்டிய - கொடிய வில்லிலே தொடுத்தற்பொருட்டு, வாங்கலும் - எடுத்தவளவிலே,—புராரி காதலன் - திரிபுரசங்காரஞ் செய்தவனான பரமசிவனது குமாரனாகிய முருகக்கடவுள்,—ஈட்டமொடு - வலிமையுடனே, ஒரு கணை ஏவி - ஓரம்பைப் பிரயோகித்து, ஆங்கு - அப்பொழுது, அவன் தோள் துணை வில்லினை - அவனதுகையிலுள்ளதும் அதற்குஉதவியாவதுமான வில்லை, துண்டம் ஆக்கினன் - துணித்துத் தள்ளினன்; (எ - று.)

விசிகம், துண்டம் - வடசொற்கள். பூட்டிய - செய்யியவென்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். விசிகம் பூட்டிய வெஞ்சிலை வாங்கலும் என மொழிமாற்றி, அம்புதொடுத்தற்கு வில்லை வளைத்தவளவிலே எனினுமாம். புராரி—புர + அரி: தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர்; (மூன்று) பட்டணங்களுக்குப் பகைவ னென்பது பொருள். காதலன் - அன்புடையான் அல்லது அன்புக்கு இடமானவன் என்ற காரணம்பற்றி வந்த பெயர்: (காதல் - அன்பு.) இதன் பெண்பால் - காதலி; (இப்பெயர்கள், கணவன்மனைவியரையுங் குறிப்பதுண்டு.) ஈடு என்னும் நெடிற்றொடர், தன்னொற்றிரட்டி

'அம்' சாரியை பெற்று ஈட்டமென நின்றது; வேடு - வேட்டம் என்றாற் போல: இனி, ஈட்டமொடு - தொகுதியோடு என்றலு மொன்று; தொடுத்த ஓரம்புதானே பலவாய்ச் செறிக்கும்படி யென்று கருத்துக்கொள்ளவேண் டும். இனி, ஈட்டமெனப் பதம்பிரிப்பின் மோனைத்தொடைக்கு முரணும். ஆங்கு - அதனு லெனினுமாம்; அந்த அம்பினு லென்க. ஆங்கு என்பது - அசையாகவுமாம். தோள் - இலகே, கை; "தோளுற்றொர் தெய்வந் துணை யாய்த் துயர் தீர்த்தவாறும்" என்ற இடத்துப் போல. 'தோள் துணை வில்' என்பதற்கு - கைபோல உதவியாகவுள்ள வில் லென்றுங் கொள்ளலாம். 'துணைவில்' என்பது பாடமாயின், விரைந்துதொழில்செய்யும் வில் என்க. துண்டம் - துண்டு.

"கையன்விடு வெங்கணைகள் கந்தனெதிர் சிந்துங், துய்யன்விடு வெங் கணைகள் சூர்த்துணை யகற்றும், வையமிசையோர் வெருவ வையமிசை நின் றே, வெய்யசம ரிவ்வகைவிளைத்தனர் வெகுண்டே" என்பது, கந்தபுரா ணச்சுருக்கம். (௧௬௬)

வேறு.

௧௬௭. அங்கோர் சிலையைக் குனித்தானது காலை தன்னி
லெங்கோ முதல்வ னொருபாணியி னேந்து வில்லிற்
செங்கோல் வகையா யிரம்பூட்டினன் செல்ல வுய்த்தான்
வெங்கோ னடாத்தி வருதாரக வெய்யன் மீதில்.

(இ - ள்.) அங்கு - அப்பொழுது, (தாரகன்), ஓர் சிலையை குனித்தான் - வேறொருவில்லை யெடுத்து வளைத்தான்; அது காலைதன்னில் - அச்சமயத் தில், எம் கோ முதல்வன் - எமக்குத் தலைவனும் கடவுளுமான சுப்பிரமணி யன், ஒரு பாணியின் ஏந்து வில்லில் - (தனது) ஒருகையிற் பிடித்துள்ள வில் லிலே, செம் கோல் வகை ஆயிரம் பூட்டினன் - செம்மையான பலவகைப் பட்ட ஆயிரம் அம்புகளை வைத்து, (அவற்றை), வெம் கோல் நடாத்தி வரு தாரகன் வெய்யன்மீதில் - கொடுங்கோலை செலுத்திவருகின்ற தாரகனா கிய கொடியவன்மேல், செல்ல - பாயும்படி, உய்த்தான் - பிரயோகித்தான்.

எம் கோ முதல்வன் - எமது சிறந்த தலைவ னென்றலுமாம். முதல் வன் — வ் - பெயரிடைநிலை. பூட்டினன் - முற்றெச்சம். பாணி - வடசொல். 'செங்கோல்' என்பதில், செம்மை - வடிவின்நேர்மையை யுணர்த்திற்று.

இச்செய்யுளின் பின்னிரண்டடிகளில், செங்கோல் வெங்கோல் என் பன - வேறுபொருளின்மேல் நிற்பனவாயினும், சொல்லால் முரணுதலின், முரண்தொடை யமைந்திருத்தல் காண்க; "மொழியினும் பொருளினும் முர ணுதல் முரணே" என்றார் தொல்காப்பியனார். இதில், வெங்கோல் நடாத் துகின்ற தாரகன்மேல் முருகன் செங்கோல் செலுத்தினான் எனச் சமத்கார மாக ஒருபொருள் தோன்றுதலும் காண்க.

இதுமுதற் பதினேந்து கவிகள் - இப்படலத்தின் ௭௧ - ஆங் கவி போ ன்ற கலிநிலைத்துறைகள். (௧௬௭)

௧௬௮. சோரார்பரவுந்திறல்வேலவன்செய்கைநோக்கித்
தாரார்முடித்தாரகவீரன்றனதுவில்லி
லோராயிரம்வாளிகள்பூட்டினனெல்லையுய்த்து
நேராய்விரவுங்கணையாவையுநீறுசெய்தான்.

(இ - ள்.) சோரார் பரவும் திறல் வேலவன் செய்கை நோக்கி - பகை வர்களும் துதிக்கும்படியான வலிமையுள்ள வேலாயுதத்தையுடையவனாகிய முருகக்கடவுளினது அச்செய்கையைப் பார்த்து, தார் ஆர் முடி தாரக வீரன் -

(போர்க்குஉரிய) மாலை பொருந்திய மயிர்முடியையுடைய தாரகாசுரனாகிய வீரன், தனது வில்வில்-தன்னுடைய வில்லிலே, ஓர் ஆயிரம் வாளிகள் பூட்டினன் - ஓர்ஆயிரம் அம்புகளை நிறுத்தி, ஒல்லை உய்த்து - (அவற்றை) விரைவிற் செலுத்தி,(அந்த அம்புகளால்), சேர் ஆய் விரவும் கணை யாவையும் நீறு செய்தான் - (தனக்கு) எதிராய் வந்து பொருந்துகின்ற (முருகனது)அம்புகளை யெல்லாம் பொடியாக்கினான்; (எ - று.)

தனதுதிறமையை யுணராமையால் முன்னே பகைவர்களாகி அலட்சியமாக நிந்தித்துக்கொண்டு செருக்கிவந்தவர்களும் பின்பு தனதுதிறமையை எதிரில்நோக்கித் தம்மனநிலைமாறிக் கொண்டாடத்தக்கவனென்பார், 'சேரார்பரவுந்திறல் வேலவன்' என்றார். சேரார் - சேராதவர் எனப் பகைவர்க்குக் காரணக்குறி: எதிர்மறைவினையாலணையும்பெயர். முடி - கிரீடமுமாம். (௧௭௩)

௧௭௪. வெய்யானனந்தங்கணை தூண்டவிமலனல்குந்
தூய்யானவைகளறுத்துக்கணைகோடிதூண்டி
மையாரவுணர்புகழ்தாரகமானவேழ
மெய்யாகும்வண்ணஞ்செறித்தானவன்யாக்கையெங்கும்.

(இ - ள்.) வெய்யான் - கொடியவனான அவ்வசுரன், அனந்தம் கணை தூண்ட -(மீண்டும் தன்மேல்) எல்லையில்லாத பாணங்களைப் பிரயோகிக்க, விமலன் நல்கும் தூய்யான் - மாசற்றவனான சிவபிரான் உண்டாக்கியருளிய பரிசுத்தகுணமுடையனாகிய முருகக்கடவுள், அவைகள் அறுத்து - (தான் எய்யும் அம்புகளினால்) அந்த அம்புகளைத் துணித்து, கணை கோடி தூண்டி - மற்றும் கோடிஅம்புகளைத் தொடுத்து,—மை ஆர் அவுணர் புகழ் தாரகன் மானம்வேழம்-குற்றம்நிறைந்த அசுரர்கள் துதிக்கின்ற அத்தாரகாசுரனாகிய கோபகுணமுள்ள யானை, எய் ஆகும வண்ணம் - முள்ளம்பன்றிபோலாகும்படி, அவன் யாக்கை எங்கும் - அவனது உடம்புமுழுவதிலும், செறித்தான்-(அந்தஅம்புகளை) நிறைத்தான்; (எ - று.)

முள்ளம்பன்றி உடம்புமுழுவதும் முட்களையுடையதாயிருத்தல்போல, தாரகனது யானைவடிவம் முழுவதும் தைத்த கூரியஅம்புகளை யுடையதாயிருக்கும்படி செய்தனன் முருகக்கடவுள் என்பதாம். "கைபோய்க் கணையுதைப்பக் காவலன்மேலோடி,யெய்போற் கிடந்தா னென் னேறு" எனப் புறப்பொருள்வெண்பாமாலையிலும். "மெய்ந்தமுள் தனதடற்றலை துளைப்ப முடுகிக், கைத்தலத்தினியிரக் கடிது கன்றி விசிறு, மெய்த்த மெய்ப் பெரிய கேழ லென வெங்கும் விசையின், தைத்த வக்கணை தெறிப்ப மெய் சிலிர்த் ததறவே" எனக் கம்பராமாயணத்திலும், உடம்புமுழுவதும் முட்களையுடைய எய்ப்பன்றி. உடம்புமுழுவதும் அம்பு தைக்கப்பட்டிருக்கின்ற நிலைமைக்கு உவமைகூறப்பட்டுள்ளவாறு காண்க.

எல்லா அவயவங்களுள்ளும் பிரதானமாய் உத்தமாங்கமெனப்படுகின்ற தலை யானைத்தலையாயிருத்தலபற்றி, தாரகனை 'தாரக மான வேழம்' எனக் கூறினார்; யானைமுகக்கடவுளை 'யானை' என்றே கூறுதல்போல. கீழ் "சேரார்பரவுந் திறல் வேலவன்" எனப்பட்ட முருகக்கடவுள்போலன்றி,சேர்ந்த தன் இனத்தவர்மாத்திரமே கொண்டாடத்தக்க அசுர னென்பார், 'மையாரவுணர்புகழ்' என்ற அடைமொழியைத் தாரகனுக்குக் கொடுத்தார்; இன்னமே 'வெய்யான்', 'தூய்யான்'என்றவையும் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருத்தல் காண்க. தூய்யான் - தூய்மை யென்னும் பண்பி னடியாப் பிறந்த பெயர்; பண்புப்பெயர், ஈறுபோய் முதல் குறுகிற்று. அநந்தம்—ந+அந்தம்; ந - எதிர்மறை குறிப்பது, அந்தம் - எல்லை. மை ஆர் - கருநிறம் பொருந்திய எனினுமாம்.

"இந்தவகை விற்சமரியற்று மதுபோதிற், கந்தன புயங்களுள கந்தன் முருகேசன், வெந்திறல்கொ டாரகன் விடுகணை விலக்கிச், சிந்தின னொர் கோடி கணை நியன்மிசை செல்ல" என்பது,கந்தபுராணக்கருத்தகம்.(கசக)

கரு0. ஒருகோடிவாளியுறலோடுமுருத்துநீச
னிருகோடிவாளிவிடவன்னதையேவினீக்கி
முருகோடியதாரசுரேசன்முகங்கொள்கையும்
பொருகோடும்வீழவிடுத்தானிருபுங்கவாளி.

(இ - ள்.) ஒரு கோடி வாளி - (இங்ஙனம் முருகக்கடவுள் பிரயோகித்த) ஒருகோடியம்புகள், உறலோடும் - வந்து (தன்உடம்புமுழுவதும்)தைத்தவளவிலே,—நீசன் - இழிகுணமுடையனான தாரகன், உருத்து - கோபித்து, இரு கோடி வாளி விட - இரண்டுகோடியம்புகளைப் பிரயோகிக்க, (முருகக்கடவுள்), அன்னதை - அந்தஅம்புத்தொகுதியை, ஏவின் நீக்கி - (தான்எய்கின்ற) எதிரம்புகளினால் விலக்கி, (பின்பு),முருகு ஒடிய தார் அசுரேசன் - வாசனை ஒழுகும் வீசப்பெற்ற போர்மாலையையுடைய அவ்வசுரராசனது, முகம் கொள் கையும் பொரு கோடும் - முகத்திற்பொருந்திய துதிக்கையும் போர்செய்யவல்ல தந்தங்களும், வீழ - (துணிபட்டுக்) கீழே விழும்படி, புங்கம் இரு வாளி - சிறந்த இரண்டு அம்புகளை, விடுத்தான் - பிரயோகித்தான்; (எ - று.)

புங்கம் - உயர்வு: அம்பின் அடியுறுப்புமாம். புங்கம், நீசன் - வடசொற்கள். அன்னது - சாதியொருமை; 'அன்னவை' என்ற பாடமுங் கொள்ளலாம். ஏவின் - 'ஏ' என்னும் ஓரெழுத்தொருமொழியின் ஐந்தாம்வேற்றுமைவிரி.

"கோடிகணை பட்டுழி கொதித் ததினிரட்டி, நீடுகணை விட்டிடலு நேச முருகேச, னுடைமிகு கோல்சிதறி யண்ணலன் விடுப்பக, கூடிவரு வாளிகள் குறைத்தன னறத்தே". "கன்னியிட கண்ணுமிறை கண்ணில்வரு மண்ணல், பின்னரு மிலங்கிரு பெருங்கணை தூர்த்த, யின்னல்புரி சூரனிளையானுடலிளைப்பக், கொன்னுற முகக்கையொடு கோடுக லறுத்தான்" என்பன, கந்தபுராணக்கருத்துக்கள். (கரு0)

கருக. வந்தங்கிரண்டுசரமும்படமாயைமைந்தன்
றந்தங்கள்கையோடிறலோடுந்தளர்ச்சியெய்தி
முந்துங்கணையாயிரந்தன்னைமுனிந்துதூண்டிக்
கந்தன்றடந்தேர்த்துவசந்துகள்கண்டுநின்றான்.

(இ - ள்.) அங்கு - அப்பொழுது, இரண்டு சரமும் - அந்தஇரண்டுஅம்புகளும், வந்து பட - (தன்மேல்) வந்துபட்டதனால், தந்தங்கள் கையோடு இறலோடும் - (தனது) தந்தங்களும் துதிக்கையும் துணிபட்டவளவிலே, மாயை மைந்தன் - மாயையின்புத்திரனான அந்தத்தாரகாசுரன், தளர்ச்சி எய்தி - சோர்வு அடைந்து, முனிந்து - (மீளவும்) கோபங்கொண்டு, முந்தும் கணை ஆயிரம் தன்னை தூண்டி - சிறந்த ஆயிரம்அம்புகளைப் பிரயோகித்து, (அவற்றால்), கந்தன் தட தேர் துவசம் துகள் கண்டு நின்றான் - முருகனது பெரியதேரின் கொடியைப் பொடியாகச்செய்து (எதிரில்) நின்றான்; (எ - று.)

அங்கு - (தந்தங்களும் துதிக்கையுமாகிய) அவ்விடங்களில் என்றும், முந்தும் - முற்பட்டுவிரைந்துசெல்லுகின்ற என்றுங் கொள்ளலாம். துவசம், துகள் - த்வஜம், தூளி என்ற வடசொற்களின் சிதைவு. பட - காரணப்பொருட் செயவெனெச்சம்.

"சுந்தர முகக்கை கொடிதான தனதக்தஞ், சிந்து மனத்திடைசினத் தவுணர்செம்மல், வெந்திறல்கொ ளாயிரம் விறற்கணை விடுத்தே, கந்த னிர தத்துற கவின்கொடி யறுத்தான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம்.(கடுக)

கடுஉ. மல்லற்கொடியிற்றதுகண்டுமறங்கொள்வெய்யோன்
வில்லைக்கணைநான்கிரண்டானிலமீதுவிட்டித்
தொல்லைக்கனலின்கணையாயிரந்தூண்டியன்னோன்
செல்லுற்றதிண்டேர்பரிபாகொடுசிந்திநின்றான்.

(இ - ள்.) மல்லல் கொடி இற்றது கண்டு - வளப்பம்பொருந்திய தனது தேர்த்துவசம் துணிபட்டதைப் பார்த்து, (முருகக்கடவுள்), மறம் கொள் வெய்யோன் வில்லை - வலிமையைக்கொண்ட கொடியவனான தாரகனது தனுசை, கணை நான்கு இரண்டால் - (தான்எய்யும்) எட்டுஅம்புகளினால், நிலம் மீது வீட்டி - (துணித்துத்) தரையிலே தள்ளி, - (மற்றும்), தொல்லை கனலின் கணை ஆயிரம் தூண்டி - பழமையானவையும் நெருப்புப்போலக்கொடியவையுமான ஆயிரம்அம்புகளைப் பிரயோகித்து, (அவற்றால்), - அன்னோன் செல்லுற்ற திண் தேர் - அவ்வசுரன் ஏறிவந்த வலிய தேரையும், பரி - (அதிற் பூட்டிய) குதிரைகளையும், பாகொடு - (அவற்றைச்செலுத்தும்) பாகனையும், சிந்தி - அழித்து, நின்றான் - எதிர்நின்றான்; (எ - று.)

மல்லல் கொடி - அழகிய பெரிய துவச மென்க. 'மதவெகொள் வெய்யோன்' என்ற பாடமும் பொருந்தும்; தாரகன் யானைவடிவத்தவனும், செருக்குமிக்கவனு மாதலால். கணை நான்கிரண்டால் நான்கிரண்டுகணையால் என உருபுபிரித்துக்கூட்டுக. இற்றது இறந்தகாலத்தொழிற்பெயர்; இறு - பகுதி, அ - சாரியை. செல்லுற்ற - சென்ற: உறு - துணைவினை. நான்கிரண்டு - சில என்றுமாம்; "நஞ்சியர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்கு மில்லையே" என்ற இடத்திற் போல. வீட்டி - வீழ்த்தி. தொல்லைக் கணை - சிவபிரானிடத்தினின்று முறையாகவந்த அம்புகளென்க; துன்பஞ்செய்யும் அம்பு என்றுமாம். பாகு - சாரதி.

"அப்பொழுது வேலவ னருங்கணைக ளெட்டு, மெய்ப்புற விடுத்த தவுணன் விற்றனை யொடித்தத் துப்புடைய வாயிர நெடுங்கணை துரந்தே, யொப்பிலவனேறிரத மொல்லை துகள் கண்டான்" என்பது. கந்தபுராணச்சுருக்கம். (கடுஉ)

கடுங. வேறங்கொருதேர்மிசையேறியொர்வில்லைவாங்கி
நூறைந்திருதீவிசிகந்தனைநொய்தினேவி
மாறின்றிவைகும்பரமன்வடிவானசெவ்வே
ளேறுந்தடந்தேர்வலவன்புயத்தெய்தவுய்த்தான்.

(இ - ள்.) (மீண்டுந் தாரகன்), அங்கு - அப்பொழுது [அல்லது அவ்விடத்தில்], வேறு ஒரு தேர்மிசை ஏறி - வேறொரு தேரின்மேல் ஏறி, ஓர் வில்லை வாங்கி - வேறொருவில்லை யெடுத்துவளைத்து, நூறு ஐந்து இரு தீ விசிகந்தனை - ஆயிரங் கொடிய அம்புகளை, நொய்தின் ஏவி - விரைவில்தொடுத்து, மாறு இன்றி வைகும் பரமன் வடிவு ஆன செம்வேள் ஏறும் தடதேர் வலவன் புயத்து எய்த - ஒப்பில்லாமல் நிலைபெற்றுள்ள யாவரினுஞ்சிறந்தவனான சிவபிரானது சொரூபமாகிய செந்நிறமுடைய குமாரக்கடவுள் ஏறியுள்ள பெரிய தேரைச் செலுத்துகின்ற பாகனான வாயுதேவனது தோள்களிற் பாயும்படி, உய்த்தான் - செலுத்தினான்; (எ - று.)

'வேறு' என்பதை, 'ஓர்வில்' என்பதனோடுங் கூட்டுக. நூறைந்து இரு விசிகம் இரண்டு ஐந்நூறு பாணம். தீ விசிகம் - நெருப்புப்போன்ற அம்பு

மாம். விசிகம் - சாதியொருமை; வடசொல். வலவன் - வல்லவன்; பாகனுக்குக் காரணவிடுகுறியாய் வழங்கும். விசிகத்தினை எவி உய்த்தான் என்க.

"தோழிய வேறுமொரு தேரின்மிசை யேறி, வீரமுற மற்றுமொரு விற்றினை யெடுத்தே, சீரிய குகன்றனது தேர்கடவு கான்மே, லாரும்வகை யாயிர மடற்கணை விடுத்தான்" என்பது, கந்தபுராணச்சுருக்கம். (௧௫௩)

௧௫௪. வென்றோர்புகழுங்குமரன்வியன்றேர்கடாவிச்
சென்றோன்வருத்தந்தெரிந்தாயிரந்தீயவாளி
வன்றோன்முகத்தாரகனெற்றியுண்மன்னவுய்ப்பப்
பொன்றோய்தனதுதடந்தேரிற்புலம்பிவீழ்ந்தான்.

(இ - ள்.) (அப்பொழுது), வென்றோர் புகழும் குமரன் - (ஐம்புலன்களை) வென்றவர்களான தத்துவஞானிகள் துதிக்கப்பெற்ற முருகக்கடவுள், வியல் தேர் கடாவி சென்றோன் வருத்தம் தெரிந்து - பெரிய (தனது) தேரை செலுத்திவந்த வாயுதேவன் (தாரகனம்புகளாலடைந்த) வருத்தத்தைத் திருவுள்ளத்திற் கொண்டு, தீய ஆயிரம் வாளி - கொடிய ஆயிரம் அம்புகளை, வல் தோல் முகம் தாரகன் நெற்றியுள் மன்ன உய்ப்ப - வலிய யானைமுகமுள்ள தாரகாசுரனது நெற்றியிலே பொருந்தும்படி செலுத்த, (அவை யழுந்துதலால் தாரகன்), பொன் தோய் தனது தட தேரில் புலம்பி வீழ்ந்தான் - பொன்மயமாய்ப் பொருந்திய தன்னுடைய பெரிய தேரிலே வருந்தி மூர்ச்சித்துவிழுந்தான்; (எ - று.)

வென்றோர் புகழுங் குமரன் - (போரில்) வெற்றிகொண்ட வீரர்கள் துதிக்கப்பெறுத மகாவீர னென்றுமாம். வியல் + தேர் = வியன்றேர்: உரிச்சொல் ஈறு திரிந்தது. பொன் தோய் - அழகு நிரம்பிய எனினுமாம்.

"மன்னுகணை மேனிபட மாருதம வருந்த, அன்னது தெரிந்து குகனுயிர செடுங்கோல். கொன்னவுணர்மன்னது குளந்தினுளழுத்தப்,பொன்னினிரதத்திடை புலம்பினன் விழுந்தான்" என்பது.கந்தபுராணச்சுருக்கம்.

௧௫௫. வீழுற்றிடலும்விழுசெம்புனல்வெள்ளமிக்கே
தாழுற்றபாரிற்புகுந்தேபுடைசார்தலுற்ற
பாழிக்கடலிற்பரிமாமுகம்பட்டசெந்தீச்
சூழிக்களிற்றின்வதனத்திலுந்தோன்றுமென்ன

(இ - ள்.) வீழுற்றிடலும் - (தாரகன் அங்ஙனம் மூர்ச்சித்து) விழுந்தவளவிலே,—விழு செம் புனல் வெள்ளம் - (அவனுடம்பினின்று)பெருகிய சிவந்த இரத்தப்பெருக்கானது,—பாழி கடலில் பரி மா முகம் பட்ட செம் தீ சூழி களிற்றின் வதனத்திலும் தோன்றும் என்ன - பெரியகடலில் ஒருகுதிரையின்முகத்திலே தோன்றிப் பொருந்திய சிவந்த வடவாமுகாக்கினி (இப்பொழுது) முகபடாத்தையுடைய ஒருயானையின்முகத்திலுந் தோன்றிக் காணப்படுகின்றதென்று (கண்டவர்) கருதும்படி, மிக்கு - மிகுந்து, தாழுற்ற பாரில் புகுந்து - கீழுள்ள பூமியிற் பாய்ந்து,புடை சார்தல் உற்ற(து)- பக்கங்களிற் பரவிற்று; (எ - று.)

துதிக்கையுந் தந்தங்களுந் துணிபட்டுத் தேரின்மீது மூர்ச்சித்து விழுந்த அந்த யானைமுகவசுரனது முகத்தினின்றுதோன்றிப் பெருகிவழிகின்ற சிவந்த இரத்தப்பெருக்கானது, ஒருகுதிரைமுகத்தில் தோன்றிப் பெருகி வளர்கின்ற படபாமுகாக்கினிபோல இருந்தது என்பது, முக்கியதாத்பரியம். அதனை, வர்ணனைமுகத்தால், குதிரைமுகத்துத் தீ யானைமுகத்திலும் தோன்றிற் றென்னும்படி யென்று தற்குறிப்பேற்றம்படக் கூறினர்.

கடலினிடையே ஒருபெண்குதிரையின்முகத்தினின்று எழுந்தோரன்றுவதொரு பெருநெருப்பு உளதென்றும், அத்தீ மழைப்பெருக்குமுதலியவற்றாற் கடல்மிகாதபடி வாவுநீரை உறிஞ்சிச்சுருக்கியல்பினதென்றும், அவ்வக்கினி கற்பாந்தகாலத்தில் வெளியெழுந்து உலகங்களை யழிக்குமென்றும் நூற்கொள்கை. செம்புனல்-செந்நீர். தேரின்மீது விழுந்தவனது குருதிநீர்ப்பெருக்குத்தன்மையை, 'தாழுற்ற பாரிற் புகுந்து' என்றனர். உற்ற-உற்றது என்பதன் விகாரம்; இனி, 'வெள்ளம்' என்னும் பால்பகாஅஃறிணைப் பெயரைப் பன்மையாகக்கொண்டு, 'உற்ற' என்பதையும் பலவின்பால்முற்றாகவேகொள்ளினுமாம். இரத்தவெள்ளமகன் சார்தலுற்றன வென்க. பாழி-ஆழமும், அகலமும், வலிமையுமாம். 'வலியகடல்' என்பது, பிரளயத்தில் உலகத்தை அழிக்குந் தாத்த தாதலின். பரிமா - பரியாகிய விலங்கு; இருபெயரொட்டு. இனி, பரியினது மாமுக மென்றுமாம்; மா - பெரிய. சூழி - யானைமுகத்தில் அலங்காரமாக அணியுஞ்சீலை; நெற்றிப்பட்ட மென்று: அது ஓடை யெனப்படும்: இதனை. "விழுசூழிய விளங்கோடைய" என்ற மதுரைக்காஞ்சியின் உரையாலும், பிறவாற்றாலும் உணர்க. வதனம் - வடசொல்.

கடுசு. மன்னாகியதாரகனங்கண்மயங்கிவீழ
வன்னான்றனதுபடைவீரரதனைநோக்கிக்
கொன்னார்சினங்கொண்டடுபோரைக்குறித்துநம்பன்
றன்னுலுதவுந்திறன்மைந்தனைச்சூழ்ந்துகொண்டார்.

(இ - ள்.) மன் ஆகிய தாரகன்-அசுரராசனான தாரகன், அங்கண் மயங்கி வீழ - அவ்விடத்தில் மூர்ச்சித்து விழுந்தவளவிலே,—அன்னான்றனது படை வீரர்-அவனது சேனையிலுள்ள வீரர்கள், அதனை நோக்கி-அத்தன்மையைப் பார்த்து, கொன் ஆர் சினம் கொண்டு - அச்சந்தருந்தன்மைமிக்க கோபமடைந்து, அடு போரை குறித்து - கொல்லவல்ல போரைத் தாங்கள் செய்யக் கருதி, நம்பன் தொல் நாள் உதவும் திறல் மைந்தனை - சிவபிரான் முன்னாளில் உண்டாக்கியருளிய வலிய குமாரனை, சூழ்ந்துகொண்டார்—.

நம்பன் - நம்பிச் சரணமடையப்படுபவன்; அன்றி, நமது தலைவனெனினுமாம். நமதுதலைவனை வருத்தினனாதலால் இவனை எப்படியாவது நாமுமற்கொல்லவேண்டு மென்று கருதி யென்பார், 'அடுபோரைக் குறித்து' என்றார் அடு போர் - வினைத்தொகை. கொன் ஆர் - மிகுதி பொருந்திய என்றனுமாம். (கடுசு)

கடுஎ. சூலந்திகிரிப்படைதோமரந்துய்யபிண்டி
பாலஞ்சுடர்வேலெழுநாஞ்சில்பகழிதண்ட
மாலங்கணையங்குலிசாயுதமாதியாக
வேனும்படைகள்பொழிந்தார்த்தனரெங்குமீண்டி.

(இ - ள்.) (அங்ஙனம் குமாரனை வளைந்துகொண்ட அசுரர்கள்),—சூலம்—, திகிரி படை-சக்கராயுதம், தோமரம்—, துய்ய-உயர்வுள்ள, பிண்டிபாலம்—, சுடர் - ஒளியையுடைய, வேல்—, எழு-இருப்புத்தூண், நாஞ்சில்-கலப்பை, பகழி - அம்பு, தண்டம்-கதை, ஆலம் - மழு, கணையம் - வளைதடி, குலிச ஆயுதம் - வச்சிராயுதம், ஆதி ஆக-(என்னும் இவை) முதலாக, ஏனும் படைகள் - (போர்க்கு) ஏற்ற ஆயுதங்களை, பொழிந்து - சொரிந்துகொண்டே, எங்கும் - எல்லாப்பக்கங்களிலும், ஈண்டி - நெருங்கி, ஆர்த்தனர் - ஆரவாரித்தார்கள்; (எ - று.)

சூலம்-முத்தலைவேல். 'தோமரம்' என்று இருப்புலக்கைக்கும், கைவேலுக்கும், எறியீட்டிக்கும் பெயர். பிண்டிபாலம்-ஓர் எறியாயுதம்: வடசொல்; கையளவான நிருகுதடி யென்பர். இதற்குத் துய்மை-எறியப்பட்டபொரு

லை எளிதில் அழித்தல். குலிசாயுதம் - தீர்க்கசக்திபெற்ற வடமொழித்தொடர். பொழிதல் - மிகுதியாகப் பிரயோகித்தல். (கடுஎ)

கடுஅ. கறுத்தானவர்தஞ்செயல்கண்டுதன்கார்முகத்தை
நிறுத்தாவளையாககணைமாமழைநீடவுய்த்து
மறுத்தானுடையகொடுந்தானவர்வாகைசிந்தி
யறுத்தான்விடுதொல்படையாவையுமாடல்வேலோன்.

(இ - ள்.) ஆடல் வேலோன் - வெற்றியைத்தரும் வேலாயுதத்தையுடையவனான முருகக்கடவுள், அவர்தம் செயல் கண்டு - அவ்வசுரர்களது செய்கையைப் பார்த்து, கறுத்தான் - கோபங்கொண்டு, தன் கார்முகத்தை வளையா நிறுத்தா - தனது வில்லை வளைத்து நிறுத்தி, (அதனினின்று), மா கணை மழை நீட உய்த்து - பெரிய அம்புமழையை மிகுதியாகச் சொரிந்து, மறு உடைய கொடுந் தானவர் வாகை சிந்தி - குற்றங்களையேயுடைய கொடிய அசுரர்களது பராக்கிரமத்தைப் போக்கி, விடு தொல் படை யாவையும் அறுத்தான் - (அவர்கள் தன்மேற்) பிரயோகித்த பழமையான ஆயுதங்களை யெல்லாந் துணித்திட்டான்; (எ - று.)—தான் - அசை. பிரிநிலையுமாம்.

கறுப்பு - கோபமாதலை "கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள" என்ற தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரத்தால் அறிக; இது, கருமையென்னும் பண்பினடி விகாரப்பட்டு வினைத்தன்மையடைந்ததாம். கறுத்தான் - முற்றெச்சம். கறு தானவர்தம் செயல் கண்டு என்றெடுத்து, (தன்மேற்) கறுவுள்ள அசுரர்களுடைய செய்கையைப் பார்த்து என்றலுமாம்; கறு-தனியாக்கோபம். நிறுத்தா, வளையா-உடன்பாட்டெச்சங்கள். (கடுஅ)

கடுகூ. வெய்தாகியதீங்கணைமாரிவிசாகன்மீட்டும்
பெய்தானவுணர்முடிதன்னைப்பிறங்குமார்பைத்
துய்தானுறும்வாயினையங்கையைத்தோளைத்தாளைக்
கொய்தான்குருதிக்கடலெங்கணுங்கொண்டதன்றே.

(இ - ள்.) விசாகன் - முருகக்கடவுள், மீட்டும் - பின்பும், வெய்து ஆகிய தீம் கணை மாரி - (பகைவர்க்குக்) கொடியதானதும் (தம்மவர்க்கு) இனியதானதுமான அம்புமழையை, பெய்தான் - சொரிந்து, அவுணர் - அசுரர்களது, முடி தன்னை - தலைகளையும், பிறங்கு மார்பை - விளங்குகின்ற மார்பையும், துய் உறும் வாயினை - உணவுகொள்ளுகின்ற வாயையும், அம் கையை - அகங் கைகளையும், தோளை - புயங்களையும், தாளை - கால்களையும், கொய்தான் - துணித்தான்; (அதனால்). குருதி கடல் - இரத்தவெள்ளம், எங்கணும் கொண்டது - எவ்விடத்தும் பரவிற்று; (எ-று.)—அன்று, ஏ - ஈற்றசை. தான் - அசை.

தீங்கணை யென்பது - தீம் கணை எனப் பிரித்து இனிய அம்பென்றும், தீக்கணை யென்பது - தீமை கணை யெனப் பிரித்து கொடிய அம்பென்றும் பொருள்படுதலாகிய வேறுபாட்டை நோக்குக: தீஞ்சொல் தீச்சொல், தீம்பால் தீப்பால், தீந்தேன் தீத்தேன் என்பனவும் இவ்வாறே. விசாகனென்னும் வடமொழிப்பெயர்க்கு - விசாகநக்ஷத்திரத்தில் அவதரித்தவனென்றும், (மயிலாகிய) பறவையினால் எங்குஞ்செல்பவனென்றுங் காரணப்பொருளுரைப்பர்; வி - பறவை. துய் - துய்க்கப்படுவதென்னும் பொருளிற் செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயராய், உணவையுணர்த்தும்; துய்த்தல் - உண்ணுதல். 'துய்' என்பதை முதனிலைத்தொழிற்பெயராகக் கொண்டு, துய் உறும் - (அகப்பட்டவற்றையெல்லாம்) உண்ணுதல் பொரு

ந்திய என்றுமாம். பெய்தான் - முற்றெச்சம். அகம்+கை=அங்கை: "அகமுனர்ச் செவி கை வரினிடையன கெடும்" என்றார் நன்னூலார். ()

கக௦. வில்லோர்பரவுந்திறல்வேலவன்வெய்யகோலா
லல்லோடியநீமனத்தானவராயினோரிற்
பல்லோரிறந்தார்குருதிக்கடல்பாய்ந்துநீந்திச்
சில்லோர்கடத்தமுயிர்கொண்டுசிதைந்துபோனார்.

(இ - ள்) வில்லோர் பரவும் திறல் வேலவன் - வில்வில்வல்ல வீரர்கள் புகழும் வல்லமையுள்ள வேற்படையையுடையவனான முருகக்கடவுளினது, வெய்ய கோலால் - கொடிய அம்புகளால், அல் ஓடிய தீ மனம் தானவர் ஆயினோரில்-(அஜ்ஞான) இருள் பரவிய கொடிய மனத்தையுடைய அசுரர்களில், பல்லோர் - பலபேர், இறந்தார் - மரித்தார்கள்; சில்லோர்கள் - சிலர், குருதி கடல் பாய்ந்து நீந்தி - இரத்தவெள்ளத்திலே பாய்ந்து நீந்திக் கொண்டு, தம்தம் உயிர் கொண்டு - தங்கள் தங்கள் உயிரை (அரிதிற்)பாதுகாத்துக்கொண்டு, சிதைந்து போனார் - நிலைகுலைந்து சென்றார்கள்;(எ-று.)

'வில்லோர்பரவுந்திறல்' என்றது - வேலுக்கும்,வேலவனுக்கும் அடைமொழியாகத்தக்கது. பல்லோர், சில்லோர் - பன்மை, சின்மை என்ற பண்பி னடியாப் பிறந்த பலர்பாற்பெயர்கள்; ரகரவீற்றயல்ஆகாரம் ஓகாரமாயிற்று. சில்லோர்கள், கள் - விகுதிமேல் விகுதி. 'தானவராயினோரில்' என்றதில், 'ஆயினோர்' என்பது - பகுதிப்பொருள்விகுதியாய் நின்றது.

"சோரியொடு சோபமொடு சூரினயல் வீழ, வீரமுள வன்படைஞர் வேலனை வளைத்தே, போரது புரிந்தழி பொலிந்த கணை தாவிச், சீரிய குகன் றருவர்சேனை எறுத்தான்" என்பது.கந்தபுராணச்சுருக்கம்.(கக௦)

கககூ. மைக்கார் சிவந்த தெனுந்தாரகன் மைய னீங்கி
யக்கா லேதன்னி லெழுந்தேயயல் போற்றி நின்று
தொக்கார் தமையா ரையுங்காண்கிலன் றுன்ப மெய்தி
நக்கா னவர்தஞ் செயல்கண்டு நவிற லுற்றான்.

(இ - ள்.) அ காலந்தன்னில் - அப்பொழுது.—மை கார் சிவந்தது எனும் தாரகன் - கரியமேகஞ் செந்நிறமடைந்த தென்று உவமைசொல்லத்தக்க தாரகாசுரன்,—மையல் நீங்கி எழுந்து - மூர்ச்சைமயக்கந் தெளிந்து எழுந்திருந்து, அயல் போற்றி நின்று தொக்காரதமை யாரையும் காண்கிலன் - (தன்) பக்கத்தில் (தனக்குமெய்காப்பாகப்) பாதுகாத்துக்கொண்டு தொகுதியாக்கூடிநின்றவரெவரையுங் காணாதவனாய், துன்பம் எய்தி - வருத்த மடைந்து, அவர்தம் செயல் கண்டு - அவர்கள் அழிந்தசெய்தியை அறிந்து, நக்கான் - சிரித்து, நவிறல் உற்றான் - (தனக்குள்ளே) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

இயல்பில்மிகக்கரியதாயுள்ள தாரகனது பெரியஉடம்பு இப்பொழுது இரத்தப்பெருக்கினால் முழுவதும் மிக்கசெந்நிறம்அமைந்தமைபற்றி, 'மைக்கார் சிவந்ததெனுந் தாரகன்' என்று குறித்தார். கரியமேகம் செந்நிறமடைந்தாற்போலக் கிடந்த தாரகன் என்க. நின்று தொக்கார் - தொக்கு நின்றார் என விகுதிபிரித்துக் கூட்டுக. தொக்கார், நக்கார் என்றவற்றில், தொகு, நகு - பகுதிகள். இங்குக்கூறிய நகை, தனது இகழ்ச்சிகாரணமாக உண்டானது. நவிறல் - தொழிற்பெயர்; நவில் - பகுதி, தல் - விகுதி, தகரம் றகரமானவிடத்து லகரங்கெட்டது - சந்தி. (ககக)

வேறு.

ககஉ. செய்ய வார்சடை யீச னல்கிய சிறுவ னிங்கொரு வன்
பொரக்,கைபி றந்துமு கத்தி னூடுக வின்கொள் கோடுமி ழந்தனன்,

மைய லெய்தி விழுந்த னன்பொரும் வலிய தானையு மாண்டன, வை
ய வீங்கொரு தமிய னின்றன னழகி தாலென தாண்மையே.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) செய்ய - சிவந்த, வார் - நீண்ட, சடை - சடையையுடைய, ஈசன் - சிவபிரான், நல்கிய - பெற்ற, சிறுவன் ஒருவன் - இளமகனான இவ்வொருத்தன், இங்கு பொர - இவ்விடத்தில் [இப்பொழுது] (வந்து) போர் செய்ததனால், கை இழந்து - (எனது) துதிக்கையை யிழந்து, முகத்தினூடு கவின் கொள் கோடும் - முகத்திலேயுள்ள அழகுபெற்ற தந்தங்களையும், இழந்தனன் - இழந்துவிட்டேன்; (அதனோடு), மையல் எய்தி விழுந்தனன் - மூர்ச்சையடைந்து விழுந்திட்டேன்; (அன்றியும்), பொரும் வலிய தானையும மாண்டன - போர்செய்கின்ற பலமுள்ள (என்) சேனைகளும் அழிந்தொழிந்தன; ஐய—! ஈங்கு - இவ்விடத்தில [இப்பொழுது], ஒரு தமியன் நின்றனன் - (நான்) ஒருத்தன்மாத்திரமே (வேறுதுணையில்லாமல்) தனியனாய்த் தப்பிநின்றிட்டேன்; எனது ஆண்மை - என்னுடைய பராக்கிரமம், அழகிது - அழகுள்ளதாயிருக்கின்றது! (எ - று.)—ஆல், ஏ - ஈற்றசைகள்.

இது, ஒருபகைவன்முன்னிலையில் தனதுசேனையும் வலிமையும் உறப்பும் யாவும் சிதைந்தமையைப்பற்றி இரங்கலாக அவ்வசுரன் தன்மனத்துள்ளே கூறியது. 'ஐய' என்றது, 'அம்ம' என்பதுபோல வியப்புச்சொல்மாத்திரமாய்நின்றது. 'அழகிது' என்பது, இகழ்ச்சிபெறறிவந்த பிரகுறிப்பின்பாற்பட்டு, அழகியதன்று என்ற எதிர்மறைக்கருத்தைக் குறிக்கும். 'முகத்தினூடு' என்பதை, மத்தியமதீபமாக 'கை' என்பதனோடும் கூட்டலாம். முகத்தினூடு, ஊடு - ஏழனுருபு. உம்மைகள் - இறந்ததுதழுவியஎச்சம். 'செய்ய' என்பது, ஈசனுக்கும் சிறுவனுக்கும அடைமொழியுமாம். இழந்தனன், விழுந்தனன், தமியன, நின்றனன் - தன்மையொருமை. அழகிது - ஒன்றன்பாற் குறிப்புமுற்று; இ - சாரியை. மாண்டன, மாள்-பகுதி. ஈங்கு - சுட்டு நீண்டது.

இதுவும், அடுத்தகவியும - இப்படலத்தின் எஎ - ஆம கவி போன்ற எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௧௧௨)

௧௧௩. தாவில வெஞ்சிலை வன்மை கொண்டுச ரங்க ளெண்ணில னுண்டியே, மேவ லானிவ னுயிர்கு டிப்பதும் வெல்லு கின்றது மரியதாற், றேவர் மாப்படை தொடுவ னிங்கினி யென்று சிந்தனை செய்துபி, னேவ ரும்புகழ் தார காசுர னிவ்வய செய்கையி யற்றினான்.

(இ - ள்.) தா இல் - அழிதலில்லாத, வெம் சிலை வன்மை கொண்டு - கொடிய வில்லின் வல்லமையால், எண் இல சரங்கள் தூண்டி - அளவில்லாதனவாகிய அம்புகளைச் செலுத்தி, மேவலான் இவன் உயிர் குடிப்பதும் - இந்தப்பகைவனது உயிரைக் கவர்ந்திடுவதும், வெல்லுகின்றதும் - (இவனை) வெற்றிகொள்ளுகின்றதும், அரியது - அருமையானதாம்; ஆல் - ஆதலால், இனி - இப்பொழுது, இங்கு - இவ்விடத்து, தேவர் மா படை தொடுவன் - தேவர்களுடையசம்பந்தமான சிறந்தஅஸ்திரங்களை (இவன்மீது) பிரயோகிப்பேன், என்று—, சிந்தனை செய்து - எண்ணி, பின் - பின்பு [உடனே], ஏவரும் புகழ் தாரகாசுரன் - யாவரும் புகழப்பெற்ற தாரகாசுரன், இனைய செய்கை இயற்றினான் - இந்ததொழிலைச செய்தான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

'உயிர்குடிப்பதும், வெல்லுகின்றதும் அரியது' என்பதில், "சுத்தம் போற்கேடு முளதாகுஞ் சாக்காடும், வித்தகர்க் கல்லா லரிது" என்ற இடத்

துப்போல, 'அரியது' என்பதனைத் தனித்தனி கூட்டி யுரைக்க: 'குடிப்பது அரியது, வெல்லுகின்றது அரியது' என இவ்வனம் ஒருமைச்சொல்லை வாக்யபேதமாகத் தனித்தனிகூட்டிமுடித்தலை, தேர்வடமிழுப்பார்போலப் ப்ரத்யேகபந்தாந்வயம் என்பர் வடநூலார்; இதுவும்,நாராசவயத்துள் அடங்கும்; இதனை, பன்மையொருமை மயக்கத்தின்பாற் படுத்தலாம். தா - உரிச்சொல்; குற்றமுமாம். மேவலான் - சேராதவன், அல்லது விரும்பாதவன் என எதிர்மறைவினையாலணையும்பெயராகிய காரணக்குறி; மேவு - பகுதி, அல் - எதிர்மறையிடைநிலை. ஆல் - ஆதலால்என்பதன் விகாரம். ()

வேறு.

கஙச. அடலரி நான்முக னாதி வானவப்
படையினை யாவையும் பவஞ்செய் தாரகன்
விடவிட் வந்தவை வெருவி மேலையோன்
புடைதனி லொடுங்கியே போற்றி நின்றவே.

(இ - ள்.) பவம் செய் - தீவினையைச் செய்கின்ற, தாரகன்—,—அடல் - வலிமையையுடைய, அரி - திருமாலும், நான்முகன் - பிரமனும், ஆதி - முதலான, வானவர் - தேவர்களுடைய, படையினை யாவையும் - அஸ்திரங்களை யெல்லாம், விட விட - ஒன்றன்பின் ஒன்றாக மேன்மேற் பிரயோகிக்க,— வந்தவை - வந்த அந்த அஸ்திரங்கள்,—வெருவி - அஞ்சி, மேலையோன் புடை தனில் - (யாவரினும்) மேன்மையுடையவனான முருகக்கடவுளின் பக்கத்தில், ஒடுங்கி - அடங்கி, போற்றி நின்ற - (அவனைத்) துதித்துநின்றன; (எ - று.)— ஏ - ஈற்றசை; தேற்றமுமாம்.

'அரி' என்பதற்கு - இங்கே இந்திரனென்றுஉரைத்தல் சிறப்பன்று; அடுத்த கவியில் "செங்கண்மா லயன் முதல் தேவர் மாப்படை" என்பதுங் காண்க. வானவப்படை - "சிலவிகாரமாமுயர்திணை". பாவம் என்னும்வடமொழித்திரிபு, 'பவம்'என விகாரமாயிற்று. விடவிட - அடுக்கு, பன்மைபற்றியது. மேலையோன், ஐ - சாரியை. போற்றுதல் - வணங்குதலுமாம். படையினை யாவையும் - படை யாவையினையும் என்க. 'வந்தவை' என்பதை வந்து அவை எனப் பிரித்து, அந்தஅஸ்திரங்கள் அணுகி யென்று உரைப்பாருமுளர். நின்ற - முற்று.

இதுமுதற் பதினொரு கவிகள் - இப்படலத்தின் க - ஆங் கவி போன்ற கலிவிருத்தங்கள். (கஙச)

கஙரு. செங்கண்மாலயன்முதற்றேவர்மாப்படை
துங்கமொடேகியேதுளங்கிவேலுடைப்
புங்கவன்பாங்கரிற்போற்றிநிற்றலு
மங்கதுகண்டனனவுணர்மன்னவன்.

(இ - ள்) செம் கண் மால் - சிவந்த கண்களையுடைய திருமாலும், அயன் - பிரமனும், முதல் - முதலான, தேவர் - தேவர்களுடைய, மா படை - சிறந்தஅஸ்திரங்கள், துங்கமொடு ஏகியே - மேன்மையோடு சென்று, துளங்கி - நடுக்கமடைந்து, வேல் உடை புங்கவன் பாங்கரில் - வேலாயுதத்தையுடைய சிறந்த முருகக்கடவுளின் பக்கத்தில், போற்றி நிற்றலும் - (அவனைத்) துதித்துக்கொண்டுநின்றவளவிலே,—அவுணர் மன்னவன் - அசுரராசனான தாரகன், அங்கு அது கண்டனன் - அவ்விடத்தில்நடந்த அத்தன்மையைப் பார்த்தான்; (எ - று.)

முதல்மூன்றடிகள் - தொடர்ச்சியைவிளக்கவந்த அநுவாதம்: முன்னும் பின்னும் இங்ஙனம் வருவனவற்றை இங்ஙனமே கொள்க. இது, கூறியது

கூறலென்னுங் குற்றமாகாது. செங்கண்மால் - செந்தாமரைக்கண்ணன். முருகக்கடவுளை அருகிற்சென்று தரிசித்தற்கு இது ஒருவியாஜம்சேர்ந்ததென்று தெய்வாஸ்திரங்கள் மகிழ்ச்சியோடு சென்றமை தோன்ற, 'துங்கமொடேகி' என்றார். ஏவியபொழுது பகைவெல்லுதற்கேற்ற உக்கிரத்துடன் சென்றவை முருகக்கடவுளையணுகியவுடனே அஞ்சிப்பணிந்தமை நன்குவிளங்க, 'துங்கமொடேகியே தளவகி' என்றனரென்னலுமாம். பாங்கர் = பாங்கு; மென்றொடர்க்குற்றியலுகரத்திற்கு அர் - போலி. புங்கவன் - காளை போன்றவன்; சிங்கம் புலி யானை காளை இச்சொற்கள், மனிதர்க்கு வரும்பொழுது, சிறப்பையுணர்த்துதல், இயல்பு. (கக௫)

ககசு. ஒருவினனகந்தையையுள்ளமோரிறை
வெருவினன்விம்மிதமிகவுமெய்தினு
னெரிகலுழ்விழியினனிவனைவென்றிட
லரியதுபோலுமென்றகத்திலுன்னினான்.

(இ - ள்.) (அதுகண்ட தாரகன்). அகந்தையை ஒருவினன் - செருக்கை யொழித்தவனாய், உள்ளம் ஓர் இறை வெருவினன் - மனம் ஒருசிறிது அஞ்சி, மிகவும் விம்மிதம் எய்தினன் - மிகவும் ஆச்சரியமடைந்து, எரி கலுழ் விழியினன் - (கோபத்தால்) நெருப்பைச்சொரிகின்ற கண்களையுடையவனாய், இவனை வென்றிடல் அரியது போலும் என்று அகத்தில் உன்னினான் - இவனைச் சயித்திடுதல் அருமையானதுபோலு மென்று தன் மனத்தில் நினைத்தான்; (எ - று.)

அகந்தையொருவுதல், முருகனது வீரத்தைத் தனது வீரத்திலுஞ் சிறந்ததென் றெண்ணுதலால். மனத்திற் சிறிதுவெருவியது, இவனால் தனக்கு அழிவுநேர்தல்கூடுமோ வென்று சங்கித்ததனால். ஆச்சரியமடைந்தது, சிறியவனிடத்தே பெருவீரத்தைக் கண்டதனால். எரிகலுழ்விழியினனானது, தனது வீரத்தைப் பற்றிய பழையஅபிமானத்தால். வென்றிடலரியதென்று எண்ணியது, தெய்வாஸ்திரங்களும் இவனுக்கூறுசெய்யாமையைப் பார்த்ததனால். "உறற்பால, நீண்டாவிடுத லரிது." "மனக்கவலை மாற்ற லரிது" என் றஇடங்களிற்போல.இங்கே அருமை இன்மைமேல்நின்றது. விம்மிதம்-விஸ்மிதம் என்ற வடசொல்லின் திரிபு. 'எரிகலுழ் விழியினன்' என்றது, பெயராய், எழுவாயாகவுமாம். போலும் - ஒப்பில்போலி. (ககசு)

ககஎ. பாங்கரின்மாதுடைப்பரமன்றொல்படை
யிங்கினிவிடுதுமென்றெண்ணியப்படை
வாங்கினனருச்சனைமனத்தினாற்றின
னோங்கிருஞ்சினமுடனொல்லையேவினான்.

(இ - ள்.) (பின்பு அவ்வசுரன்), 'இனி - இனிமேல், ஈங்கு இவ்விடத்தில், பாங்கரில் மாது உடை பரமன் தொல் படை - (இடப்) பக்கத்தில் உமாதேவியையுடைய கடவுளான சிவபிரானது பழமையான அஸ்திரத்தை, விடுதும் - விடுவோம்', என்று எண்ணி - என்றுநினைத்து, அ படை - அந்த அஸ்திரத்தை, வாங்கினன் - எடுத்து, மனத்தின் - மனதினால், அருச்சனை ஆற்றினன் - (அதற்குப்) பூசைசெய்து, ஓங்கு இருஞ் சினமுடன் - மிக்க பெருங் கோபத்துடனே, ஒல்லை - விரைவாக, ஏவினான் - (அந்தஅஸ்திரத்தைப்) பிரயோகித்தான்; (எ - று.)

முதலடியிற் குறித்தது, பாசுபதம் அல்லது சைவம் எனப்படும். மனத்தின் அருச்சனையாற்றுதல் - மானஸபூஜை. அஸ்திரங்கட்குப்பூசைசெய்தல் மரபாதலை, "இகலுடைவெம்பகுவாய்களோர்துடையதோ ரெழில்கொள்புயங்களையேவவென்றுசவியே", "பரிமள சந்தன நீபமுங் கமழ்புகை பனி

மலருங் கொடு பூசையும் பரிவுட, னருளி வணங்கி யெடா விடும்பொழு தினில்" என்ற வில்லிபுத்தூரார்பாரதத்தாலும் அறிக. அருச்சனை - அர்ச்சநா என்ற வடசொல்லின் விகாரம். (கசுஎ)

கசுஅ. சங்கரன்றொல்படைதறுகணாலமும்
புங்கவர்படைகளும்பூதராசியு
மங்கதநிரைகளுமளப்பில்சூலமும்
வெங்கனலீட்டமும்விரித்துச்சென்றதே.

(இ - ள்.) சங்கரன் தொல் படை - சிவபிரானது பழமையான அந்த அஸ்திரமானது,—தறுகண் ஆலமும் - கொடுமையையுடையவிஷத்தையும், புங்கவர் படைகளும் - (மற்றுமபல) தேவாஸ்திரங்களையும், பூத ராசியும் - பூத கணங்களையும், அங்கதம் நிரைகளும் - பாம்புக் கூட்டங்களையும், அளப்பு இல் சூலமும் - அளவில்லாத பல சூலாயுதங்களையும், வெம் கனல் ஈட்டமும் - கொடிய நெருப்புத்தொகுதியையும், விரித்து - பரப்பிக்கொண்டு, சென்றது - புறப்பட்டுவந்தது; (எ - று.)

ஶங்கரன்-வடசொல்: (இம்மை மறுமை வீடு) இன்பங்களை அடியார்க்குச்செய்பவ னென்று பொருள்; ஶம - சுகம். ஆலம் - ஹாலமென்ற வடசொல்லின் விகாரம். அங்கத மென்பது - பாம்பாதலை "அரவு தோளணி வளையிவை யங்கதம்" என்ற பிங்கலந்தையாலும் அறிக. ஆலம் - மழுக்களுமாம்; கசுஎ - ஆஞ் செய்யுளிற் போல. (கசுஅ)

கசுகூ. கலைகுலாம்பிறைமுடிக்கடவுண்மாப்படை
யலகிலாவுயிர்களுமண்டம்யாவையு
முலைவுறுதலமரவுருத்துச்சேறலு
மிலைகுலாமயிலுடையெந்தைநோக்கினன்.

(இ - ள்.) கலை குலாம் - ஒளி விளங்குகின்ற, பிறை - இளஞ்சந்திரனை யணிந்த, முடி - சடைமுடியையுடைய, கடவுள் - சிவபிரானது, மா படை - சிறந்த அந்தஅஸ்திரமானது,—அலகு இலா உயிர்களும் - அளவில்லாத உயிர்களைத்தும், அண்டம் யாவையும் - அண்டகோடிகளைத்தும், உலைவுறுது அலமர - அழிவடையாமற் சுழலும்படி, உருத்து - உக்கிரங்கொண்டு, சேறலும் - வந்தவளவிலே,—இலை குலாம் அயில் உடை எந்தை - இலைவடிவமைந்த வேலாயுதத்தையுடைய எமது பரமபிதாவாகிய முருகக்கடவுள், நோக்கினன் - (அதனைப்) பார்த்தான்; (எ - று.)

குலாம் கலைப்பிறைமுடி யென மாற்றி, வளைந்தவடிவமாகவுள்ள ஒற்றைக் கலையையுடைய பிறைச்சந்திரனைத் தரித்த திருமுடி யெனினுமாம்; குலாவுதல்-விளங்குதல், வளைதல், பொருந்துதல். சேறலும்-செல் என்னும் பகுதியின்மேற் பிறந்த 'உம்' ஈற்று வினையெச்சம்; பகுதி முதல்நீண்டது - விகாரம், து அல் - சாரியைகள், மற்றவை - சந்திவிகாரம். குலாம் - குலாவும் என்ற செய்யுமெனெச்சத்தின் விகாரம். 'உலைவுறுது அலமர' என்றதனால், அந்த அஸ்திரத்தினது உக்கிரத்தன்மையோடு அருளுடைமையையும் விளக்கியபடி. உலைவுறுது, கு-சாரியை, உறு-துணைவினை. அலமர, அலமா-பகுதி, குறுக்கலும் விரித்தலு மாகிய விகாரங்களை யேற்றது. (கசுகூ)

கஎ0. கந்தவேளனையதுகண்டுதந்தையைச்
சிந்தையிலுன்னியோர்செங்கைநீட்டியே
யந்தவெம்படையினையருளிற்பற்றினன்
றந்தவன்வாங்கியதன்மையென்னவே.

(இ - ள்.) கந்த வேள் - முருகமூர்த்தி, அனையது கண்டு - அந்தஅஸ்திரம்வருகின்ற அத்தன்மையைப் பார்த்து, தந்தையை சிந்தையில் உன்னி - தனது பிதாவான சிவபிரானை மனத்திலே தியானித்து, ஓர் செம் கை நீட்டியே - (தனது பன்னிரண்டுகைகளுள்) ஒரு சிவந்த கையை நீட்டி, அந்த வெம் படையினை - உக்கிரமான அந்த அஸ்திரத்தை, தந்தவன் வாங்கிய தன்மை என்னவே - பிரயோகித்தவன்தானே மீண்டுவாங்கிக்கொண்ட தன்மைபோல, அருளின் பற்றினான் - கருணையோடு பிடித்துக்கொண்டான்.

அந்தஅஸ்திரத்தால் தனக்கு ஊறுபாடுஉண்டாதலைத் தடுக்கும் கருத்தினாலன்றி, உலகத்துக்கு அழிவுஉண்டாதலை நீக்கவேண்டுமென்னுங் கருத்தினாற் கைப்பற்றினனென்பார், 'அருளிற் பற்றினான்' என்றார். அஸ்திரத்துக்கு இலக்கான குமாரன் அஸ்திரத்துக்கு அதிதேவதையான சிவபிரானது வடிவமே யாதலால், தனக்குஉரியதைத் தான்கைப்பற்றினானென்ற கருத்துத் தோன்ற, 'தந்தவன் வாங்கிய தன்மை யென்ன' என்றார். ஓர் அஸ்திரத்தை உபஸம்ஹாரஞ்செய்த வீரன் தானே மீண்டும் உபசங்காரஞ்செய்தால, அது எங்ஙனம் அவன்கையில் வந்து அமையுமோ, அங்ஙனம் தந்தை தந்ததனை மைந்தன் கையில் அமையப்பெற்றனன் என்க; தந்தையே மைந்தனாதல், இதற்குக் காரணம். சிவபிரான்தானே முருகமூர்த்தியாயினமையை "அகைதி லாறுமுகத்தொடு மீராறத்தமொடுங் கமலத்தினிடத்திற், சகசானே முருகேசனெனச் சிந்தைகவிருந்திட வண்டர்கள்கண்டார்" என்ற கந்தபுராணச்சருக்கத்தா லுணரலாம். ஒருவன் தான் பிறனுக்கு இரவலாகக் கொடுத்ததொரு பொருளை மீளவும்பெற்றுக்கொள்ளும்பொழுது அதனைப் பிறனதென்றுகருதாமல் தனதென்றகருத்துடனே யேற்றுக்கொள்ளுமாறு போல, முன்பு சிவபிரான்தானே தாரகாசுரனுக்குத் தந்தருளியதாம் அசிவபிரானையே தெய்வமாகக்கொண்டதுமான அந்தஅஸ்திரம் நெருங்கிவரும்பொழுது அதனைப் பகைவனேவியதென்றுகருதாது தந்தைபொருளென்றேகருதி ஸ்வாதீநத்துடன் இனிதின் ஏற்றுக்கொண்டனன் சிவகுமாரனும் சிவபிரானதுசொரூபமுமான சுப்பிரமணியக்கடவுளென்பது விளங்குகிறது. (கஎ0)

களக. நெற்றியில்விழியுடைநிமலன்காதலன்
பற்றியபடையினைப்பாணிசேர்த்தினான்
மற்றதுதாரகவலியன்கண்ணுறீஇ
யிற்றதுநந்திருவினியென்றேங்கினான்.

(இ - ள்.) நெற்றியில் விழி உடை நிமலன் காதலன் - நெற்றியில்(நெருப்புக்) கண்ணையுடைய மாசற்றகடவுளான சிவபிரானது குமாரன், பற்றிய படையினை பாணி சேர்த்தினான் - (அங்ஙனம் தான் கையினாற்)பிடித்த அந்த அஸ்திரத்தைத் தன்கையிலேயே வைத்துக்கொண்டான்; மற்று - பின்பு, தாரகன் வலியன் - வலிய தாரகாசுரன், அது கண்ணுறீஇ - அத்தன்மையைப் பார்த்து, இனி நம் திரு இற்றது என்று ஏங்கினான் - இனிமேல் நமது செல்வம் அழிந்திட்டதாமென்று கலங்கினான்; (எ - று.)

சூரியன் வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணுமாக இறைவனுக்குக் கண்மூன்றும் மூச்சுடராதலால், 'நெற்றியில் விழியுடை நிமலன்' என்றார். பாணி - வடசொல். கண்ணுறீஇ - கண்ணுற்று; சொல்லிசையளபெடை. 'இனி இற்றது' - காலவழுவமைதி. 'இனி' என்றது - ஒப்புயர்வற்றவனும் யாவர்க்குந்தலைவனுமான முழுமுதற்கடவுளது என்றும் எக்குந் தவறாத அஸ்திரமும் இவனை யாதோருறுஞ் செய்ய மாட்டாமல் இவன்கைப்பட்டபின்பு என்றபடி. 'இனி' என்பது - இடைச்

சொல். அந்தஅஸ்திரத்தினுஞ் சிறந்ததோரஸ்திரம் இல்லாமையால், எக்கக்கொண்டன னென்க. (ககக)

களஉ. தேவர்கடேவனார்தெய்வத்தொல்படை
யேவினனதனையுமெதிர்ந்துபற்றினன்
மூவிருமுகமுடைமுதல்வன்வன்மையை
நாவினிலொருவரானவிறற்பாலதோ.

இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) தேவர்கள் தேவனார் - தேவாதிதேவரான சிவபெருமானது, தெய்வம் தொல் படை - தெய்வத்தன்மையுள்ள பழமையான அஸ்திரத்தை, ஏவினன்-பிரயோகித்தேன்; அதனையும் - அந்தஅஸ்திரத்தையும், எதிர்ந்து பற்றினன் - எதிர்கோர்த்து பிடித்துக்கொண்டான்; (ஆதலால்), மூ இரு முகம் உடை முதல்வன் வன்மையை-ஆறுதிருமுகங்களையுடைய இத்தலைவனது வலிமையை, நாவினில் நவிறல் - நாவினுற் சொல்லுதல், ஒருவரால் பாலதோ - ஒருத்தரால் ஆகுந்தன்மையதோ? [அன்று என்றபடி]; (எ-று.)

உம்மை - உயர்வுசிறப்பு. இச்செய்யுள் - தாரகன் மனத்திற்கருதியதைக் கூறியது. ஏவினன் - தன்மையொருமை. படர்க்கையொருமையாகக்கொண்டு இச்செய்யுளைக் கவிக்கூற்றென்றலும் ஒன்று. முதற்பெருங்கடவுளே அறுமுகமூர்த்தியாகஅவதரித்தன னாதலால், 'மூவிருமுகமுடைமுதல்வன்' எனத்தகும்; அதனை, கீழ்த் திருவவதாரப்படலத்தில் "மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினு லளக்கொணுமல், நிறைவுடன்யாண்டுமாகி நின்றிடு நிமலமூர்த்தி, அறுமுகவுருவாய்த்தோன்றி யருளொடு சரவணத்தின்,வெறிகமழ்கமலப்போதின்வீற்றிருந்தருளினனே" என்றதனு லுணர்க. 'தேவனார்' என்றது, உயர்வுப்பன்மை. நாவினில் நவிறல் என இயையும். நவிறல் = நவில் + தல். (கசஉ)

களங. ஆயினுமரன்மகனறத்தின்போரலாற்
றீயதோர்கைதவச்செருவதுன்னலான்
மாயைகளாற்றியேமறைந்துநின்றுநா
னேயெனவியற்றுவனமரென்றெண்ணினன்.

(இ - ள்.) ஆயினும் - அங்ஙனமாயினும், அரன் மகன் - சிவகுமாரனான இவன், அறத்தின் போர் அலால் - தருமமாகச்செய்யும் யுத்தத்தையே யல்லாமல், தீயது ஓர் கைதவம் செரு அது உன்னலான் - தீமையையுடையதொரு வஞ்சனையாற் செய்யும் போரை அறியமாட்டான்; (ஆதலால்), நான்—, மாயைகள் ஆற்றி - மாயைகளைச் செய்து, மறைந்து நின்று—, ஏயென - விரைவாக, அமர் இயற்றுவன் - போர்செய்வேன், என்று எண்ணினன்—.

சத்துவகுணமூர்த்தியான சிவபிரானது குமாரன் தமோகுணகாரியமான மாயைச்செயலை அறிந்திரான்; ஆதலால், இவனை மாயையில் மறைந்துநின்று பொருதுவெல்வே னென்று கருதினன் என்பதாம். அறத்தின் போர் - தருமயுத்தம். உன்னலான், அல் - எதிர்மறையிடைநிலை. கைதவம்-வடசொல். (கசங)

களச. தையனு மிவ்வகை கருத்தி லுன்னியே
யொய்யென வேகிர வுஞ்ச வெற்பின்முன்
னையமொ டேகிநீ வல்ல மாயைகள்
செய்குதி செய்குதி யென்று செப்பினன்.

(இ - ள்.) கையனும் - வஞ்சகனான அவ்வசுரனும், இ வகை கருத்தில் உன்னி - இவ்வாறு மனத்தில் எண்ணி, ஒய்யெனவே - மிகவிரைவாக, கிர

வுஞ்ச வெற்பின் முன் - கிரௌஞ்சகிரியின் எதிராக, வையமொடு எதி - தேருடன்சென்று, நீ வல்ல மாயைகள் செய்குதி செய்குதி என்று செப்பினன் - 'நீ செய்ய அறிந்துள்ள மாயைகளையெல்லாம் (இப்பொழுது இக்குமாரனமுன்) செய்வாயாக செய்வாயாக' என்று (அம்மலையைநோக்கிச்) கூறினான்; (எ - று.)

வஞ்சகனை 'கையன்' என்பது - கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுட் கற்காநாட்டினின்று தமிழில் வந்து வழங்கிய திசைச்சொல். முன் - இடமுன். வையம் என்பது - தேராதலை, ''வையம் பற்றிய மகளைய ரெண்ணிலர்'' எனக் கம்பராமாயணத்திலுங் காண்க; ''வையம் பூண்கல்லா சிறு குண்டை'' என்ற நாலடியாரிலும் அது. செய்குதி என்ற ஏவலொருமை முற்றில், கு - சாரியை. அடுக்கு - சினமும், விரைவும், மிகுதியும் பற்றியது.

வேறு.

கஎ௫. செப்பிய விறுவரை கிரவுஞ்சந் திகழ்வுறு மாயைபி
னிகழ்வுன்னி, முப்புர வகைபல வெனநிற்ப முரணுறு தாரக முதல்
வன்ற, னப்புர நிருதர்க ளெனநின்ற னகல்வரை பலபல முகிலாக,
வொப்பறு சூரன திளையோனு முருமென வவையிடை யுலவுற்
றான்

இதுமுதல் நான்கு கவிகளில், கிரவுஞ்சகிரியும் தாரகாசுரனுங் கூடிச் செய்த மாயைவகைகள் கூறப்படுகின்றன.

(இ - ள்.) செப்பிய இறு வரை-(இவைஎம் தாரகன்) சொன்ன வளவிலே,—கிரவுஞ்சம் - கிரௌஞ்சமலை, திகழ்வுறு மாயையின் நிகழ்வு உன்னி - (தன்னிடத்திலே) விளங்குகின்ற மாயையினது விளைவைச் சிந்தித்து, முப்புரம் வகை பல என நிற்ப - அநேக திரிபுரவர்க்கங்கள் போல வடிவங்கொண்டுநிற்க,—முரண் உறு தாரகன் முதல்வன் தான் - வலிமைமிக்க தாரகனாகிய அசுரராசன் தான், அ புரம் நிருதர்கள் என நின்றான் - அந்தத்திரிபுரங்களில் வசிக்கின்ற அசுரர்கள்போலத் தோன்றிநின்றான்; (மற்றும்), அகல் வரை - பரந்த அந்தமலை, பல பல முகில் ஆக - மிகப்பலமேகங்கள் போலத் தோன்றிநிற்க, ஒப்பு அறு சூரனது இளையோனும் - ஒப்பில்லாத சூரபதுமனது தம்பியான தாரகனும், அவையிடை உரும் என உலவுற்றான் - அம்மேகங்களினிடையே (தோன்றுகின்ற) இடிகள்போல வடிவங்கொண்டு உலாவிக்கொண்டிருந்தான்; (எ - று.)

செப்பிய இறுவரை - இவ்வாறுசொன்ன சொற்கள் முடியுமளவில்; சொல்லிமுடித்தவுடனே யென்றபடி: சொல்லிய முடிவில் எனினுமாம். மூந்திய பொருளில், 'செப்பிய' என்றது - இறந்தகாலப் பலவின்பால்வினையாலணையும்பெயர்; இப்பொருளில், இறந்தகாலப்பெயரெச்சம். இனி, சீவகசிந்தாமணியில் ''இலக்குபொன் னிறுவரை யனைய வேந்தலுக்கு'', ''இரும்பிடிதுறுகுழ விறுவரை நின்றதேபோல்'' என்ற இடங்களில் 'இறுவரை' என்றதற்கு - 'பெரியமலை' என்று நச்சினார்க்கினியர் உரை கூறியுள்ளார்; அதன்படி, செப்பிய இறு கிரவுஞ்சம் வரை - சொல்லப்பட்ட பெரிய கிரவுஞ்சமலை யென்று பொருள்கூறவுந் தகும். 'இருவரை' என்ற பாடத்திற்கும் - பெரிய மலை யென்று பொருளாம். திகழ்வுறு மாயையின் நிகழ்வு உன்னி-தான் நன்றாகப் பயின்றுள்ள பலவகைமாயைகளைச் செய்யக்கருதி; திகழ்வுறு - சிறப்புப்பெற்று விளங்குகின்ற எனினுமாம். முரண் - பகைமையும், போரும், கொடுமையும், மாறுபாடுமாம். முதல்வன் - அசுரர்தலைவன். அரக்கரைக்குறிக்கின்ற 'நிருதர்' என்ற பெயரால் அசுரரைக்கூறியது, சனம்

களுக்குத் தீமைசெய்வதில் இவ்விருதிறத்தாரும் ஒத்திருக்குந் தன்மைபற்றி யென்க. அகல் வரை - வினைத்தொகை; அகன்ற, அகல்கிற, அகலும் என விரியும்; அகலமாகிய மலையெனப் பண்புத்தொகையாகக் கொள்ளுதலு மொன்று. ஊரும் - சாதிப்பெயர். உலவுற்றான் - பலவிடத்துந்தோன்றினின் றான் என்க; இதில் உலாவு என்னும் பகுதி இடைகுறைந்'உற'என்னுந் துணை வினையோடு சேர்ந்து ஒருசொற்றன்மைப்பட்டது.

இதுமுதல் ஏழு கவிகள் - பெரும்பாலும் மூன்று ஆறுஞ்சீர்கள் மாச் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (கஎரு)

கஎசு. வேலைகளுருவினைவரைகொள்ளவிசயமதுடையதோரசுரேசன்
காலமதிறுதியிலுலகுண்ணுங்கனைலொலியனலிகளெனநின்றான்
சீலமின்முதுகிரிநெடுநேமித்திருவரைசூழ்தருமிருளாக
மால்கரிமுகமுளவவுணன்றான்வரையறுபாரிடநிரையானான்.

(இ - ள்.) (மீண்டும்), வரை - கிரவுஞ்சமலை, வேலைகள் உருவினை கொள்ள - கடல்களின்வடிவத்தை யெடுத்துக்கொள்ள,—விசயம்அது உடையது ஓர் அசுர ஈசன் - வெற்றியையுடைய தன்மையையுடைய ஒப்பற்ற அசுர ராசனான தாரகன், காலம்அது இறுதியில் உலகு உண்ணும் கனை ஒலி அனலிகள் என நின்றான் - கற்பாந்தகாலத்தில் உலகங்களை அழிக்கின்ற முழங்கு கிற ஒலியையுடையஅக்கினியின் வடிவங்கள்போல (அக்கடல்களில்) தோன்றிநின்றான்; (பின்னும்), சீலம் இல் முதுகிரி - நல்லொழுக்கமில்லாத பழமையான அந்தமலை, நெடு நேமி திரு வரை சூழ்தரும் இருள் ஆக - உயர்ந்த அழகியசக்கரவாளகிரியைச் சூழ்ந்துள்ள பேரிருள்போலத் தோன்ற,— மால் கரி முகம் உள அவுணன் - பெரிய யானைமுகத்தையுடைய தாரகாசுரன், தான்—, வரை அறு பாரிடம் நிரை ஆனான் - (அப்பேரிருளில்) அளவில்லாத பேய்க்கூட்டங்கள்போல வடிவங்கொண்டு நின்றான்; (எ - று.)

விஜயம், ஸீலம் - வடசொற்கள். பிரளயகாலத்திற் பெருந்தீப் பற்றி யெழுந்து உலகையழித்திடு மென்றல்,புராணக்கொள்கை. காலமது இறுதி - ஊழிகாலத்தின் முடிவு. அனலி என்பதை அநல என்னும் வடசொல்லின் திரி பென்றாவது, அனலையுடைய தென்ற பொருளில் இகரவிகுதிபெற்ற தமிழ்மொழி யென்றாவது கொள்க: அனல் - வெப்பம். பூமியைச் சூழ்ந்துள்ளதான சக்கரவாளகிரியைச் சுற்றிலும் பெரும்புறக்கடலும், அதனைச்சுற்றிலும் இருளும் சூழ்ந்துள்ளன என்னும் நூற்கொள்கையை "தரையது சூழ்ந்துநிற்குஞ் சக்கரவாளச்சையம்," "அன்னதற்கப்பால் வேலைக்கரசனும் புறத்திலாழி, பின்னதுதனக்குமப்பாற் பேரிருள்சேர்ந்தனாலம்" என மேல்வரும் அண்டகோசப்படலத்துச் செய்யுள்களாலும் உணர்க; "ஆழியைத், துன்னிவேறு சூழ்கிடந்த துகளுகுவிக்கிருட்பிழம்பு" என்று கம்பர் கூறியதுங் காணத்தக்கது. மால் - உரிச்சொல். (கஎசு)

கஎஎ. இந்திரன்முதலுளசுரர்வைகுமேழுடனொருதிசைவேழம்போ
லந்தநெடுங்கிரிவரரோடுமருங்கினிலுறுகுலகிரியாகித்
தந்தியின்முகமுளவவுணன்றான்சடசடமுதிரொலியுடன்வந்தான்
முந்தியதந்தமதுருமாறிமுறைமுறைநின்றதோர்திறனேபோல்.

(இ - ள்.) முந்திய தம் தமது உரு முறை முறை மாறி நின்றது ஓர் திறனே போல் - (மலைவடிவமான கிரவுஞ்சாசுரனும் யானைவடிவமான தாரகாசுரனும்) முன்புள்ள தங்கள்வடிவத்தைத் தம்மில் ஒருத்தர்க்கொருத்தர்

மாற்றிக்கொண்டு நின்றதொரு தன்மையே போல,—அந்த நெடுங் கிரி - உயர்ந்த அந்தக் கிரவுஞ்சமலை, இந்திரன் முதல் உள சுரர் வைகும் எழுடன் ஒரு திசை வேழம் போல் - இந்திரன் முதலாகவுள்ள தேவர்கள் தங்குகின்ற எட்டுத்திக்குக்களிலு முள்ள (எட்டு) யானைகள் போல வடிவங்கொண்டு, வரவோடும் - வந்தவளவிலே, தந்தியின் முகம் உள அவுணன் - யானைமுக முள்ள தாரகாசுரன், தான்—, அருகினில் - (அவற்றின்) சமீபத்தில். உறு குலகிரி ஆகி - பொருந்திய (எட்டுக்) குலபர்வதங்களின் வடிவமாய், சடசட முதிர் ஒலியுடன் வந்தான் - சடசடவென்பதுபட மிக்க வோசையுடனே வந்தான்.

கிரவுஞ்சமலை தனது மலைவடிவத்தைவிட்டு யானைவடிவத்தையும், யானைமுகவசுரேசன் தனது யானைமுகவடிவத்தை விட்டு மலைவடிவத்தையுங் கொண்டதற்கு, கவி இவ்விருவரும் தமது பழையவடிவத்தை ஒருத்தரோடொருத்தர் மாற்றிக்கொண்டாற்போன்றதென்று உவமை கூறினார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. ஒருவர்க்கொருவர் ஒரு பொருளை மாற்றிக் கொண்டனர் என்பது படக் கூறியதனால், இதில் பரிவர்த்தநாலங்காரமென்னும் மாற்றுநிலையணி தோன்றுமாறும் உணர்க. கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்ற எட்டுத்திசைகளுக்கும், முறையே இந்திரன் அக்கினி யமன் நிருருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் என்ற எண்மரும் திக்பாலகரும், ஐராவதம் புண்டரீகம் வாமனம் குமுதம் அஞ்சனம் புஷ்பதந்தம் சார்வபௌமம் சுப்பிரதீகம் என்ற எட்டும் திக்கஜங்களு மாதல் அறிக. மாலியவான் கந்தமாதனம நிஷதம் ஏமகூடம் இமயம் நீலம் சுவேதம் சிருங்கம் என்பன, அஷ்டகுலபர்வதங்களாம்; "மன்னியவிமயத்தோடு மந்தரங் கைலை விந்தம். சொன்னவள் நிடத மேமகூடமே நீலவெற்பு, துன்னிய கந்தமாதனத் தொடு குழ்வெற் பெட்டாம்" என்றது முண்டு. குல கிரி - சிறந்தமலை. எழுடனொரு திசை - ஏழோடுகூடிய ஒன்றாகிய திக்கு. சடசட - ஈரடுக்கு ஒலிக்குறிப்பு; சப்தாநுகரணம். (கஎஎ)

கஎஅ. வாயுவி னுருவென மலைசெல்ல மதகரிமுகமுள பதகன்றான்
தேயுவி னுருவென வரலுற்றான் றிரியவுநெடுவரை விரைவோடுங்
காய்கன லுருவொளிகிழிகளாகிக் ககனம திடையுற மிடைகாலை
யாயிரகோடி வெய்யவரேபோ லலமர லுற்றன னறமில்லான்

(இ - ள்.) (இன்னும்), மலை - அந்தக்கிரவுஞ்சகிரி, வாயுவின் உரு என செல்ல - காற்றின் வடிவமாய் வர,—மத கரி முகம் உள பதகன் - மதங்கொண்ட யானையின் முகத்தையுடைய பாவியான தாரகன், தான்—, தேயுவின் உரு என வரல் உற்றான் - (அவ்வாயுவின் நண்பனான) அக்கினியின் வடிவமாய் வந்துசேர்ந்தான்; திரியவும் - மறுபடியும், நெடு வரை - உயர்ந்த அந்த மலை, விரைவோடும் - விரைவாய், காய் கனல் உரு ஒளிகிழிகள் ஆகி - கொதிக்கின்ற நெருப்புப்பொறிகளைச் சிந்துகிற அனற்கொள்ளிகளின் வடிவமாய், ககனமது இடை உற - ஆகாயத்தினிடத்தே பொருந்த, மிடை காலை - நெருங்கிநிறைந்தபொழுது,—அறம் இல்லான் - தருமசெய்கையில்லாதவனான தாரகாசுரன், ஆயிரம் கோடி வெய்யவரே போல் - மிகப்பல சூரியர் போல வடிவங்கொண்டு, அலமரல் உற்றனன் - திரியத்தொடங்கினான்.

வாயு, ககனம், கோடி - வடசொற்கள். மதகரி - வடமொழிப்புணர்ச்சியாதலின், வருமொழி முதல்வலி இயல்பு. பதகன் - பாதகன் என்றதன் குறுக்கல். தேயு - தேஜஸ் என்னும் வடசொல்லின் சிதைவு. வெய்யவர் - உஷ்ணகிரணமுடையவர். அலமரல், அலமா - பகுதி. அறமில்லான்-பாவி.

கஎகூ. அவ்வகைதாரகன் வரையோடுமௌவறுமாயையின்வடிவெய்தி
வெவ்விடையுஞ்செறிதரலோடுமெம்பெருமானவனிலைகாணு

தெவ்வலிகொண்டுறுமிவனுயிர்சிந்துவனென்றுளமிசைகொண்டே
கைவருவேற்படைதனைநோக்கியினையனசிலமொழிகழறுற்றான்.

(இ - ள்.) அவனை - அவ்வாறு, தாரகன்—, வரையோடும் - கிரவுஞ்ச கிரியுடனே, அளவு அறு மாயையின் வடிவு எய்தி - அளவில்லாத மாயை வடிவங்களைக் கொண்டு, எ இடையும் - எல்லாவிடங்களிலும், செறிதரவோடும் - நிறைந்துநெருங்கியவளவிலே,—எம் பெருமான் அவன் - எமது தலைவனான அம்முருகக்கடவுள், இவை காணூ - இவற்றைக் கண்டு, தெவ்வலி கொண்டு உறும் இவன் ஆவி சிந்துவன் என்று உளம்மிசை கொண்டு - 'பகைதற்குரிய வலிமையை மிகுதியாகக்கொண்டுள்ள இவ்வசுரனதுஉயிரை (இப்பொழுது) ஒழிப்பேன்' என்று திருவுள்ளங்கொண்டு, கை வரு வேல் படைதனை நோக்கி-(தனது)கையிலுள்ள வேலாயுதத்தைப் பார்த்து, இனையன சில மொழி கழறுற்றான்-இத்தன்மையனவான சில சொற்களைக் கூறத் தொடங்கினான்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

எவ்விடையும் - நாற்புறத்தும். உளமிசை கொள்ளுதல் - மனத்தில் நினைத்தல்; 'மிசை' என்றது, ஏழாம்வேற்றுமைசொலலுருபாய்நின்றது; "மேல்" என்பதுபோல. செறிதரவோடும்—தா - துணைவினை. கழறுற்றான் —கழறு - பகுதி, உறு - துணைவினை (கஎக)

கஅ0. தாரகனென்பதோர்பேரோனைச்சஞ்சலமுறுகிரவுஞ்சத்தை, யோரிறைசெல்லுமுனுடல்கீறியுள்ளுயிருண்டுபுறத்தேகிப், பாரிடர்தம்மையிலக்கத்தொன்பதின்மர்களாகவுரைக்கின்றவீரரை மீட்டிவண்வருகென்றேவேற்படைதன்னைவிடுத்திட்டான்

(இ - ள்.) 'தாரகன் என்பது ஓர் பேரோனை - தாரகனென்னும்பெயருள்ள அசுரனையும், சஞ்சலம் உறு கிரவுஞ்சத்தை-கலக்கத்தை மிகுதியாகச செய்பவல்ல கிரவுஞ்சகிரியையும், ஓர் இறை செல்லும் முன் - ஒரு கணப்பொழுது கழிவதன்முன்னே, உடல் கீறி - உடம்பைப் பிளந்து, உள் உயிர் உண்டு-அவ்வுடம்பினுள்ளேயுள்ள உயிரைக் கவர்ந்துகொண்டு, புறத்து ஏகி-வெளியே சென்று, பாரிடர்தம்மை - பூதவீரர்களையும், இலக்கத்து ஒன்பதின்மர்கள் ஆக உரைக்கின்ற வீரரை-லக்ஷத்தொன்பதுபேராகக்கூறப்படுகின்ற வீரர்களையும், மீட்டு - மயக்கந்தெளிவித்து அழைத்துக்கொண்டு, இவண் வருக - இவ்விடத்திற்கு வருவாயாக,'என்று-என்று கட்டளையிட்டு, வேல் படைதன்னை விடுத்திட்டான் - (தனது) வேலாயுதத்தை மேலேவினான், (முருகக்கடவுள்); (எ - று.)

'சஞ்சலமுறு கிரவுஞ்சம்' என்றதற்கு - (மற்றைமலைகள்போல அசலமாய்த் தொழிலற்றுநில்லாமல் மாயையாற்) புடைபெயர்ந்து பலதொழில் செய்யுங் கிரவுஞ்ச மென்றும் பொருள்கூறலாம்; நிலைபெயர்தலையுடைய கிரவுஞ்சமலை யென்க. ஒன்பதின்மர் என்ற பெயரில், இன் - சாரியை, ம் - எழுத்துப்பேறு. வருகென்று - விகாரம்.

"மையல தொழிற்கிட வெழுந் தவுணர்மன்னன், செய்ய முருகன் புடை சிவன்படை செலுத்தக்,கைகொடு பிடிப்ப வதுகண்டு பலமாயை,வெய்ய மலையோடு செய வேலினை விடுத்தான்" என்பது,கந்தபுராணச்சுருக்கம்.

கஅக. சேயவன் விட்டிடு தனிவைவேல் செருமுய றாரகன் வரையோடு, மாயிடை செய்தபு ணர்ப்பெல்லா மகிலமு மழிதரு பொழுதின்கண், மாயையி னாகிய வுலகெங்கு மலிதரு முயிர்களு மதிருடுன், தூயவன் விழியழல் சுடுமாபோற் றுண்ணென வட்டது சூர்போற்ற.

(இ - ள்.) சேயவன் - செந்நிறமுள்ளவனான முருகக்கடவுள், விட்டிடு - விசியெறிந்த, தனி வை வேல் - ஒப்பற்ற கூர்மையுள்ள அந்த வேலாயுதமானது,—செரு முயல் தாரகன் வரையோடும் அ இடை செய்த புணர்ப்பு எல்லாம் - போரைக்கத்தொடுசெய்யுந்தன்மையுள்ள தாரகாசுரன் கிரவுஞ்சகிரியோடு அவ்விடத்துச்செய்த மாயைக ளெல்லாவற்றையும்,—அகிலமும் அழிதரு பொழுதின்கண் - எல்லாப்பொருள்களும் அழிகின்ற கற்பாந்தகாலத்திலே, மாயையின் ஆகிய உலகு எங்கும் மலிதரும் உயிர்களும் - மாயையினாலாகிய உலகமுழுவதையும் அவற்றிலெங்குஞ்சிறைந்துள்ள பிராணிவர்க்கங்களையும், மதி சூடும் தூயவன் விழி அழல் சுடும் ஆறு போல் - சந்திரனைத்தரித்த பரிசுத்தகுணமுள்ளவனான சிவபிரானது (நெற்றிக்) கண்ணின் நெருப்பு எரித்தழிக்கும் விதம்போல,—சுரர் போற்ற - தேவர்கள் துதிக்க, துன்னென அட்டது - விரைவில் அழித்திட்டது; (எ - று.)

கற்பாந்தகாலத்திற் சர்வசங்காரஞ்செய்கின்ற காலாக்கினிருத்திரமூர்த்தியினது நெற்றிக்கண்ணின் நெருப்பு மாயையின்காரியமானஉலகங்களையும் அவற்றிலுள்ள சராசரப்பொருள்களனைத்தையும் எளிதில் விரைவிலழித்தல்போல, முருகக்கடவுளின் வேலாயுதம், கிரவுஞ்சகிரி அதிலுள்ள தாரகாசுரன் என்பவரது பலவகைமாயத்தோற்றங்களையெல்லாம் ஒருசேர அழித்தது என்பதாம். உவமையணி. பிரபஞ்சத்தோற்றத்திற்கு மாயை முதற்காரணமென்ற நூற்கொள்கை பற்றி, 'மாயையினாகிய உலகு' என்றார். சேயவன் என்பதில், பகுதியாகிய செம்மையென்பது - ஈறுபோய் ஆதிநீண்டு இடைநின்ற மகரம் யகரமாத்திரிந்து 'சேய்' என நின்றது. அகிலம் - வடசொல். ஆ - விகாரம். அட்டது, அடு - பகுதி: அடுதல் - அழித்தல். புணர்ப்பெல்லாம் அட்டது என்க. அழிதரு, தா - துணைவினை. (கஅக)

வேறு.

கஅஉ. அரண்டரு கழற்கா லைய னறுமுகத் தெழுந்த சீற்றந்
திரண்டொரு வடிவின் வேறாய்ச் சென்றதே யெனவு நான்கு
முரண்டரு தடந்தோ ளண்ணன் முத்தலை படைத்த சூல
மிரண்டொரு படையாய் வந்த தென்னவு மேகிற்றவ்வேல்.

(இ - ள்.) அரண் தரு - (அடியார்க்குப்) பாதுகாவலைச் செய்கின்ற, கழல் கால் - வீரக்கழலை யணிந்த திருவடியையுடைய, ஐயன் - தலைவனான முருகக்கடவுளினது, அறு முகத்து - ஆறுதிருமுகங்களிலும், எழுந்த - வெளிதோன்றிய, சீற்றம் - கோபமானது, ஒரு வடிவின் திரண்டு - ஓராயுதவடிவமாகச்சேர்ந்து பரிணமித்து, வேறு ஆய் சென்றதே எனவும் - நீங்கித் தனியே போனதுபோலவும்,—முரண் தரு - வலிமை மிக்க, தட - பெரிய, நான்கு தோள் - நான்கு திருத்தோள்களையுடைய, அண்ணல் - தலைவனான சிவபிரானது, முத் தலை படைத்த சூலம் - மூன்று நுனிகளையுடைய சூலாயுதமானது, இரண்டு ஒரு படை ஆய் வந்தது என்னவும் - மற்றமோராயுதவடிவமாயமைந்து சென்றதுபோலவும்,—அ வேல் - (முருகக்கடவுள்பிரயோகித்த) அந்த வேலாயுதமானது, ஏகிற்று - சென்றது; (எ - று.)

முருகக்கடவுள் தாரகன்மீது கோபங்கொண்டபொழுது அப்பிரானது ஆறுமுகங்களிலுங் காணப்பட்ட கோபாக்கினி ஒருங்குசேர்ந்து ஒருவேற்படையாகிப் போயினாற்போலவும், சர்வசங்காரஞ்செய்கின்ற சிவபிரானது முத்தலைச்சூலாயுதமே மற்றும் ஒருவேலாயுதமாய் அமைந்தாற்போலவும், குமாரனதுவேல் அதியுக்கிரமாய்ப் பகைவர்மீது சென்றதென்பதாம். தற்குறிப்பேற்றவணி.

அரண் தரு - (யாவர்க்கும்) அடைக்கலமாந்தன்மையைச் செய்கின்ற வென்க. வேறுஆய் ஒருவடிவின் திரண்டு - வேறுபட்டு ஒருருவமாகத்திர

*ண்டு எனவுந் தரும். மூரண் தரு - போரை விளக்கின்ற எனினுமாம். சிவ பிரான் நான்குதோள்களையுடைய னுதலை, "முக்கண் நாற்றோள் ஐவாயரவோ டாறுபொதிசடையோன்" எனப் பிறர் கூறியவாற்றாலும் அறிக. முத்தலை - மூன்றுகவர்பட்டநுனி. 'இரண்டு' என்ற சொல் 'இரண்டாவது' என்னும் பொருளில் வருதலை, "மீதிரண்டு கிடையாத குறையன்றோ களைத்தவித்தான் சிறுவன்" என வில்லிபுத்தூரார்பாரதத்திலுங் காண்க. இரண்டொருபடையாய் - வேறோராயுதமாகி யெங்க. நான்கு மூரண்தருதடந்தோ ளண்ணல், முத்தலைபடைத்தசூலம், இரண்டு, ஒருபடையாய் என்றவற்றில், நான்கு மூன்று இரண்டு ஒன்று என்ற எண்கள் முறையே அமைந்து முரண்தொடையாதல் காண்க. இனி, 'சூலமிரண்டு ஒருபடையாய வந்ததுஎன்னவும்' என்ற சொற்போக்கு சூலாயுதமிரண்டுசேர்ந்து ஒருவேலாயுதவடிவமாய் வந்ததுபோலவும் என்ற பொருள்கொள்ள இடந் தருதலால், அவ்வணம் பொருள்கொண்டு, சூலமிரண்டு - எக்காலத்தும்நித்தியமாயுள்ள பரமசிவனது கையிற் பொருந்திய தொன்றும், பிரமனது செருக்கை யடக்குதற்பொருட்டு அப்பெருமான் தனது சங்கற்பத்தால் தனது அம்சமாய்த் தோன்றுவித்த வைரவமூர்த்தியின் கையி லுள்ள தொன்றும் ஆக இரண்டும் என்பாரு முளர். * முருகக்கடவுளின் வேற்படை ஒவ்வொருபக்கத்துக்கு மும்மூன்றுமுனைகளாக இருபக்கத்தும் ஆறுமுனைகளையுடைமையால், அறுமுகத்தெழுச்சிற்றம் ஒன்றானவடிவமும், முத்தலைச்சூலமிரண்டு ஒன்றான வடிவமும் அதற்கு உவமையாகும்*

*இதுமுதல் இருபத்திரண்டு கவிகள் - இப்படலத்தின் ௨௧ - ஆங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள்.* (௧அ௨)

---

* இச்செய்யுளின் பின்னிரண்டடிகளின் பொருளைப்பற்றிச் சில பெரிய வித்துவான்களை முன்பு வினவியதற்கு அவர்கள் அளித்த உத்தரங்கள் வருமாறு:—

*௧. 'முத்தலைச்சூலம்' எனவே, அதற்கு மூன்றுகூருடைமை பெறப்படுகின்றது. அது இரண்டு ஒன்றானால், ஆறுகூர்கள் ஆகின்றன. கந்தசுவாமியுடைய வேலுக்கு ஆறுகூர் சொல்லப்பட்டிருக்கின்றது. அது, சில இடங்களில் அறுமுகக்கடவுள்விக்கிரகத்திற்கு ஆயுதமாகக்கொடுத்திருக்கின்ற வேல்களிலும் இருக்கின்றது. கந்தசுவாமியுடைய வேலுக்கு ஆறுமுனை என்பதை, மூன்றாகாட்பாறுகோபன்யுத்தப்படலம் - ௨௧௨ - ஆம் பாட லாகிய*

*"அத்தமி லொளியின் சீரா லறுமுகம் படைத்த பண்பா*
*லெத்தைக ணின்றும் வந்த வியற்கையாற் சத்தி யாம்பேர்*
*தத்திடும் பலுவல் பெற்ற தன்மையாற் றனிவேற் பெம்மான்*
*கந்தனே யென்ன நின்னைக் கண்ணெக் கவலை தீர்த்தேம்"*

*(இது. வேலாயுதத்தைத் துதித்தது.)*

*என்றதனால் அறியலாம். சிவபிரானுக்கு முத்தலைச்சூலம் ஒன்றே. அது இரண்டாய் ஒன்றுசேர்ந்தால் அது இவ்வேலுக்கு உவமையாகும் என்றது, 'இரண்டொருபடையாய்' என்றதன் கருத்து. வேலுக்கு ஆறுமுனை யென்று வேறுநூல்களிலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.*

*௨. வேலாயுதம் பலவடிவமாகக் காணப்படுகின்றது. அவற்றில் ஆறுகூர்மையையுடைய வடிவத்திற்கு 'முத்தலை படைத்த சூல மிரண் டொருபடையாய் வந்த தென்னவு மேகிற்று' என்பது சிறப்பப்பொருத்தமுடையதாக இருக்கின்றது. 'சூலம்இரண்டு ஒருபடையாய்' என்றதை இவ்பொரு*

கஅ௩. முடித்திடலரியமாயமூரிநீர்க்கடலைவற்றக்
குடித்திடுகின்றசெவ்வேற்கூற்றம்வந்திடுதலோடுங்
கடித்திடுமெயிற்றுப்பேழ்வாய்த்தாரகனிதனைப்பற்றி
யொடித்திடுகிற்பேனென்றுவொல்லெனவுருத்துவந்தான்.

(இ-ள்.) முடித்திடல் அரிய -(எவராலும்) அழித்திடுதற்கு அருமையான, மாயம் -(கிரௌஞ்சமும் தாரகனும் செய்த)மாயைகளாகிய, மூரி நீர் கடலை - பழமையான நீர்நிறைந்த சமுத்திரத்தை, வற்ற குடித்திடுகின்ற - வறண் டொழியும்படி குடிக்கின்ற, செவ் வேல் கூற்றம் - சிவந்தவேலாயுதமாகிய யமன், வந்திடுதலோடும் - (அருகில்)வந்தவளவிலே,—கடித்திடும் எயிறு பேழ் வாய் தாரகன் - பருத்த பற்களையும் திறந்த வாயையுமுடைய தாரகாசுரன், இதனை பற்றி ஒடித்து இடுகிற்பேன் என்று -'இவ்வேலாயுதத்தைக் கையாற் பிடித்து ஒடித்து எறிந்துவிடுவேன்' என்று துணிந்து, உருத்து - கோபித்து, ஒல்லென வந்தான் - விரைவாக எதிரில் வந்தான்; (எ - று.)

மாயக்கடலை வற்றக்குடித்திடுகின்ற - மாயைகளையெல்லாம் இருந்த இடந்தெரியாதபடி ஒழித்திடுகின்றவென்றவாறு. சுந்தரபாண்டியவடிவமான சிவபிரான் தனதுபுதல்வனும் முருகக்கடவுளின் அம்சமுமான உக்கிரபாண்டியனுக்குக் கொடுத்த வேலாயுதம் அவனுக்குப்பகையாய்வந்தெதிர்த்துப்பொங்கிவந்த கடலை வற்றச்செய்யலுற்றது என்ற தன்மையைக் கருதி'மாயமூரி நீர்க்கடலை வற்றக் குடித்திடுகின்ற செவ்வேற்கூற்றம்' என உருவகமுரைத்தன ரென்னலாம். கொடியபிராணிகள் பெரும்பாலும் வாய்திறந்திருத்தல் இயல்பாதலின், 'பேழ்வாய்த் தாரகன்' என்றார். இடுகிற்பேன் என்றதில், கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை; இடுதல் - வீசிப்போகடுதல். மூரி-வலிமையும், பெருமையுமாம். தங்களை அழித்தல்பற்றி, வேலைக் கூற்ற மென்றார். 'கடித்திடும்' என்பது, தாரகனுக்கு அடைமொழியுமாம். எயிறு - தந்தமுமாம். தடித்து இடும் எயிறு - மின்னல்போல (ஒளியை) வீசுகின்ற தந்தம் எனவுரைக்கும். (கஅ௩)

ஞவமையாகக் கொண்டு, ஆறுகூறுண்மைபற்றிய வடிவுவமை யென்று சொல்வது, நேர். 'அறுமுகத் தெழுந்த சீய்றுந் திரண் டொரு வடிவின் வேறு ய்ச செனறதே யெனவும்' என்றதும் இதனை வலியுறுத்துகின்றது.

௩. சிவபிரானது முத்தலைச்சூலமும் இரண்டாவதொருபடைக்கலமான மழுவுஞ் சேர்ந்து ஒரு வேலாகி வந்ததுபோலவு மென்று சொல்லலாம்; அதற்கு மேற்கோள்:—

"ஆதிபரை கங்கை தெய்வானை வள்ளி யரன் முருகன்
கோதிலிடப மயில் கொன்றைமாலை குளிர்கடப்பஞ்
சோதிமுகமைந்து மாறுமுக மழுச்சூல் கதிர்வே
லோதியவைக்தெழுத் தாறெழுத்தாஞ் சுடருற்பனமே."

(இது, பரமசிவனே முருகக்கடவுளாகப் பரிணமித்தன னென்பதை அங்கங்களோடு விளக்கிக்காட்டும்.)

இப்படிசொல்வதில்,சிவபிரானது சூலம் தனியே முருகக்கடவுளின்வேலுக்கு ஒப்பாகமாட்டாதென்று சிவபிரானை இழிவுபடுத்தியதாகிய குற்றம் நேருமோ வெனின்,நேராது. எல்லாவிதத்திலும் முருகக்கடவுளின் மகிமையைக் கூறுவதே புராணத்தின் போக்காம். அன்றியும், அழித்தலையே செய்கின்ற சூலத்தினும் அழித்தலோடு காத்தலையுஞ் செய்கின்ற வேல் இருமடங்கு சிறந்ததாதல் இங்கே நன்குவிளங்கும்.

௧௮௪. அச்சமோர்சிறிதுமில்லாவவுணர்கோனுவணன்மேற்செ
னச்சரவென்னச்சிறிதணுகலுமவன்மார்பென்னும்
வச்சிரவரையின்மீதுவானுருமேறுற்றென்னச்
செச்சையந்தெரியல்வீரன்செலுத்தும்வேல்பட்டதன்றே.

(இ - ள்.) அச்சம் ஓர் சிறிதும் இல்லா - பயம் சிறிதும் இல்லாத, அவுணர் கோன் - அந்த அசுரராசன், உவணன்மேல் செல் நஞ்சு அரவு என்ன - கருடன்மீது எதிர்த்துச்செல்கின்றதொரு விஷசர்ப்பம்போல, சிறி தணுகலும் - (அவனை)க்கோபித்துச்சமீபித்தவளவிலே,—அவன் மார்பு என்னும் வச்சிரம் வரையின் மீது - அவனதுமார்பாகிய வச்சிரத்தின்மயமான மலையின்மேல், வான் உரும் ஏறு உற்று என்ன - சிறந்த பேரிடி விழுந்தாற்போல, அம் செச்சை தெரியல் வீரன் செலுத்தும் வேல் பட்டது - அழகியவெட்சிப்பூமாலையையுடைய சிறந்தவீரனை முருகக்கடவுள் பிரயோகித்த வேலாயுதமானது தாக்கிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

'அவுணன்மேற் செல் நச்சரவு' என்ற இல்பொருளுவமை, தன்னை யழிப்பதனைத் தான் அழிக்கக்கருதி அச்சமில்லாமல் எதிர்த்துச்சென்று ஒரு நன்மையும் பெறாமல் உடனே தான் அதனால் அழிக்கப்படுதலை விளக்க வந்தது. நஞ்சு+அரவு=நச்சரவு: வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று; நஞ்சையுடைய நாக மென இரண்டனுருபும் பயனு முடன் தொக்க தொகை. வேறொன்றால் அழிதற்கரிய தென்றற்கு, 'வச்சிரவரை' என்றார். ஏறு - ஆண்பாற்பெயர்; சிறந்ததையும் பெரியதையும் ஆண் என்றல் மரபாதலால், 'உருமேறு' எனப்பட்டது. இனி, உரும் ஏறற்றென்ன என எடுத்து, இடி பாய்ந்தாற்போல என்றலும் ஒன்று. உருவகத்தை அங்கமாகக் கொண்டு வந்த உவமையணி. வான உரும் - வானத்திற்தோன்றும் இடியுமாம். செச்சை யென்பது - வெட்சிமாமாதலை, "வெட்சி வெள்ளாட் டாண்பெயர் செச்சை" என்ற பிங்கலந்தையாலும் அறிக; இது முதலாகு பெயராய், அதன் மலரைக் குறித்தது. வெட்சிப்பூமாலை முருகக்கடவுளுக்கு உரியதாதலை, "கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்" என்ற திருமுருகாற்றுப்படையாலும் உணரலாம். உவணன் - ஸுபர்ணன் என்னும் வடசொல்லின் விகாரம். அழகிய இறகுகளை யுடையா னென்று பொருள்: ஸுவர்ண னெனக்கொண்டு, அழகிய நிறமுடையா னென்றும், பொன்னிறமானவ னென்றுங் கூறலு முண்டு. அணுகலும் பட்டது என இயையும். (௧௮௪)

௧௮௫. தாரகன்மார்பமென்னுந்தடம்பெருவரையைக்கீண்டு
சிறியகிரவுஞ்சத்திற்சேர்ந்துபட்டுருவிச்சென்று
வீரமும்புகழுங்கொண்டுவிளங்கியதென்னவங்கட்
சோரியுந்துகளுமாடித்தண்ணெனமீண்டதன்றே.

(இ - ள்.) (அவ்வேலாயுதமானது,) தாரகன்-தாரகாசுரனது, மார்பம் என்னும் - மார்பாகிய, தட பெரு வரையை - மிகப்பெரியமலையை, கீண்டு - பிளந்துகொண்டு, சிறிய கிரவுஞ்சத்தில் சேர்ந்து பட்டு - (மாயவலிமைச)சிறப்புள்ள கிரௌஞ்சமலையிற் சேர்ந்து தாக்கி, உருவி சென்று - (அதனையும்)முற்றத்துளைத்துக்கொண்டு சென்று, வீரமும் புகழும் கொண்டு விளங்கியது என்ன - (அவ்வசுரர்களது) பராக்கிரமத்தையுங் கீர்த்தியையுங் கவர்ந்து கொண்டு விளங்கினாற் போல, அங்கண் சோரியும் துகளும் ஆடி - அவ்விடங்களில்தோன்றிய இரத்தத்திலும் புழுதியிலும் படிந்து, தண்ணென மீண்டது - விரைவாகத் திரும்பிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

வீரத்தைச் செந்நிறத்ததாகவும் புகழை வெண்ணிறத்ததாகவுங் கூறுதல் கவிசமய மாதலால், அவ்விரண்டிற்கும் முறையே செந்நீரையும் நகையையும் உவமைகூறின ரென்க. உபமானத்தைநோக்கி, இங்கே, நகை - வெண்ணொளியென்க. தாரகனது மார்பினின்று பெருகுகின்ற சோரியிலும், கிரௌஞ்சமலையினின்றுஎழுந்த நகையிலும் என முறையே கொள்க; முறைநிரனிறைப்பொருள்கோள். நகைகூறியதனால், வேல்பாய்ந்து ஊடுருவியபொழுது அம்மலை பொடிபட்டதென விளங்கும். நட, பெரு - ஒருபொருட்பன்மொழிகள். (கஅ௫)

கஅசு மீண்டிடுசீற்றவைவேல்வெற்பினுட்டுஞ்சுகின்ற
வாண்டகைவீரர்தம்மையாயிடையெழுப்பிவான்போய்
மாண்டருகங்கைதோய்ந்துவாலியவடிவாயையன்
றூண்டியகரத்தில்வந்துதொன்மைபோலிருந்ததம்மா.

(இ - ள்.) மீண்டிடு - (அவ்வாறு) திரும்பிய, சீற்றம் வை வேல் - கோபத்தையுடைய கூரிய வேலாயுதமானது,—வெற்பினுள் துஞ்சுகின்ற ஆண்தகை வீரர்தம்மை - கிரௌஞ்சமலையினுள்ளே மயங்கிக்கிடக்கின்ற பராக்கிரமமுடைய (வீரவாகு முதலிய) வீரர்களையெல்லாம், ஆயிடை எழுப்பி - அவ்விடத்திலே எழுந்திருக்கச்செய்து, (பின்பு), வான் போய் - வானத்திலே சென்று, மாண் தரு கங்கை தோய்ந்து - மாட்சிமைமிக்க தேவகங்காநதியில் நீராடி, வாலிய வடிவு ஆய் - தூய்மையடைந்த உருவமுடையதாய், ஐயன் தூண்டிய கரத்தில் வந்து - முருகக்கடவுள் ஏவிய திருக்கையிலே வந்துசேர்ந்து, தொன்மை போல் இருந்தது - முன்போலவே யிருந்தது; (எ - று.)—அம்மா - ஈற்றசை; வேலின் அற்புதசெய்கைகளைப்பற்றி வந்த வியப்பிடைச்சொல்லுமாம்.

முன்னர்ச் சோரியுந் தசையுமாடி மாசடைந்ததனால், பின்னர் ஆகாசகங்கையில்நீராடித் தூய்மையடைந்ததென்க. சீற்றவைவேல - முருகக்கடவுளின் கோபத்தை அவனதுவேலாயுதத்தின்மேல் ஏற்றிக்கூறினர்; இது, உடையவனது தன்மையை உடைமையின்மேல் உரைக்கும் உபசாரவழக்கு. ஆயிடை - அப்பொழுது என்றுமாம். வாலிய - குறிப்புப்பெயரெச்சம்; வால் - பகுதி. பரிசுத்தகுணம்; இ - சாரியை.

"வென்றிபுனை யஃகமது விஞ்சைதரு குன்றை, வன்றிறல்கொ டாரகனை வல்லையி லழித்தே, யொன்றுதிறல் வீரரை யெழுப்பி யுயர் கங்கை, சென்றதனி லாடிபு திரும்பியதை யன்றே" என்பது, கந்தபுராணச்சுருக்கம்.

கஅஎ. தண்டமதியற்றுங்கூர்வேற்றாரகவவுணன்மார்பும்
பண்டுளவரையும்பட்டுப்பறிந்தபேரோசைகேளா
விண்டதுஞாலமென்பார்வெடித்ததுமேருவென்பா
ரண்டமதுடைந்ததென்பாராயினரகிலத்துள்ளோர்.

(இ - ள்.) தண்டமது இயற்றும் - (கொடியோர்க்குத்) தண்டனையைச் செய்கின்ற, கூர் வேல் - கூரிய (முருகனது) அந்த வேலாயுதமானது, தாரகன் அவுணன் மார்பும் - தாரகாசுரனது மார்பிலும், பண்டு உள வரையும் - பழமையாய் [நெடுங்காலமாக] உள்ள கிரௌஞ்சகிரியிலும், பட்டு - தாக்கி, பறிந்த - பிளந்துசென்றதனாலாகிய, பேர் ஓசை - பெரிய ஆரவாரத்தை, கேளா - கேட்டு,—அகிலத்து உள்ளோர் - உலகமுழுவதும் உள்ளவர்களெல்லாரும், ஞாலம் விண்டது என்பார் - பூமி பிளந்ததென்று சொல்லுபவர்களும், மேரு வெடித்தது என்பார் - மகாமேருகிரி வெடித்ததென்று சொல்லுபவர்

களும், அண்டமது உடைந்தது என்பார் ஆயினர் - அண்டகோளம் உடைந்ததென்று சொல்லுபவர்களு மானார்கள்; (எ - று.)

தாரகன்மார்பும் கிரவுஞ்சகிரியும் பிளவுபட்ட ஓசையென்பதை யுணராமற் பலர் பலவாறகூறின ரென்க. இது,அவ்வோசையின் மிகுதியை வருணித்தவாறும். பறித்த நுசை - பெயரெச்சம், காரணப்பொருளது; 'சங்குசுட்ட சுண்ணாம்பு' என்றவிடத்துப் போல. (௧அஎ)

௧அஅ. வடித்ததையன்னகூர்வேன்மார்பையூடறுத்துச்செலத்
தடித்திடுகின்றயாக்கைத்தாரகனனந்தகோடி [ப்
பிடித்தொகையென்னவார்த்திட்டிம்மெனவெழுந்துதுள்ளி
படித்தலந்தன்னில்வீழ்ந்துபதைபதைத்தாவிவிட்டான்

(இ - ள்.) வடித்ததை அன்ன நெருப்பிலிட்டுக்காய்ச்சி யடித்து அராவிக் கூர்செய்தாற போன்ற, கூர் வேல் - கூரிய அந்தவேலாயுதமானது, மார்பை ஊடு அறுத்து செல்ல - (தாரகனது) மார்பை இடையிலே பிளந்துகொண்டு சென்றளவில்,—தடித்திடுகின்ற யாக்கை தாரகன் - மேன்மேற் பருக்கின்றஉடம்பையுடைய அத்தாரகாசுரன்.அனந்தகோடி இடி தொகை என்ன ஆர்த்திட்டு அநேககோடி யிடிகளின் தொகுதிபோல ஆரவாரித்து. இம்மென எழுந்து துள்ளி - (மிக்ககோபவினால்) விரைவாக எழும்பிக் குதித்து, படி தலந் தன்னில் வீழ்ந்து - பூமியில் விழுந்து, பதைபதைத்து - மிகத்தடித்து, ஆவி விட்டான் - உயிர்நீங்கினன்; (எ - று.)

முருகக்கடவுளின் வேல் மற்றை வேல்கள் போலச் செயற்கையாலமைத்ததன்றிப் பரமசிவனால் மனத்தினால் சிருஷ்டிக்கப்பட்டு இயற்கையிற் கூர்மையுடையதாதலால்,'வடித்ததையன்ன'என்று உவமைகூறினர்; இனி, 'வடித்ததை யன்ன' என்பதற்கு - பலபடைக்கலங்களுள்ளுந் தேர்ந்தெடுத்ததுபோன்ற என்று உரைப்பாரும் உளர். இம்மென - விரைவுக்குறிப்பு; "இம்மென்று முன்னே யெழுநூறு மெண்ணூறும், அம்மென்றா லாயிரம் பாட் டாகாதோ" என்பது, காளமேகப்புலவர்வாக்கு பதைபதைத்து-இரட்டைக்கிளவி. (௧அஅ)

௧அகூ. தடவரையனையமொய்ம்பிற்றாரகன்வேலாற்பட்டுப்
புடவியில்வீழாநின்றான்பொள்ளெனவானிற்றுள்ளிக
கடலுடைந்தென்னவார்க்குங்காலையிற்கலக்கமெய்தி
யுடுகணமுதிர்ந்ததஞ்சியோடினனிரவியென்போன்

(இ - ள்) தட வரை அனைய - பெரிய மலை போன்ற, மொய்ம்பின் - வலிமையையுடைய, தாரகன்—, வேலால் பட்டு புடவியில் வீழாநின்றான் - வேலாயுதத்தால் எறியப்பட்டுத் தரையிலே விழுகின்றவன், பொள்ளென வானில் துள்ளி - (வருத்தம்பொறாமல்) விரைவாக வானத்தின்மீது எழும்பிக்குதித்து, கடல் உடைந்து என்ன ஆர்க்கும் காலையில் - கடல்பொங்கிக் கரைபுரண்டாற்போல ஆரவாரிக்கும்பொழுது, (அப்பேருமுழக்கத்தால்), உடு கணம் - நக்ஷத்திரங்களின்கூட்டம், கலக்கம் எய்தி - கலக்கமடைந்து, உதிர்ந்தது - சிதறிற்று; இரவி என்போன்-சூரியனானவன், அஞ்சி ஓடினன்-அச்சங்கொண்டு அப்பாற்சென்றான்; (எ - று.)

மொய்ம்பு - தோளுமாம். வீழாநின்றான் - நிகழ்கால வினையாலணையும்பெயர்; ஆநின்று - இடைநிலை. கலக்கம் - நிலைகலங்குதல். உடுகணம் - வடமொழித்தொடர். ரவி - வடசொல். என்போன் - முதல்வேற்றுமைச் சொல்லுருபு. உயர்வுநவிற்சியணி. (௧அகூ)

௧௧௦. தளர்ந்திடலில்லாவீரத்தாரகன்பட்டுவானிற்
கிளர்ந்தனன்வீழுமெல்லைக்கீழுறுபிலமும்பாரும்
பிளந்தனவரைகள்யாவும்பிதிர்ந்தனவதிர்ந்ததண்ட
முளந்தமொறியோலிட்டோடினதிசையில்யானை.

(இ - ள்.) தளர்ந்திடல் இல்லா - சோர்வடைதலில்லாத, வீரம் - பராக்கிரமத்தையுடைய, தாரகன் -, பட்டு - (வேலினால்) பிளக்கப்பட்டு, வானில் கிளர்ந்தனன் வீழும் எல்லை - ஆகாயத்திற்கிளம்பிக் கீழேவிழுந்தபொழுது, —பாரும் - பூமியும், கீழ் உறு பிலமும் - அதன்கீழுள்ள பாதாளலோகமும், பிளந்தன - பிளவுபட்டன; வரைகள் யாவும் - மலைகளெல்லாம், பிதிர்ந்தன - பொடிபட்டன; அண்டம் - அண்டகோளமுழுவதும், அதிர்ந்தது - கலங்கிற்று; திசையில் யானை - (எட்டுத்)திசைகளிலுமுள்ள (திக்)கஜங்கள், உளம் தடுமாறி - மனங்கலங்கி, ஓலிட்டு - வீரிட்டுக்கொண்டு, ஓடின - அப்பாற்சென்றன.

ஓலிடுதல் - ஒலிக்குறிப்பு; கலங்கிக்கூவுதல். உயர்வுநவிற்சியணி. (௧௧௦)

௧௧௧. தண்ணளிசிறிதுமில்லாத்தாரகன்கிளர்ந்துவான்போய்
மண்ணிடைமறிந்ததன்மைவன்சிறையிழந்தநாளிற்
றிண்ணியமேருவின்னுஞ்செல்லலாங்கொலென்றுன்னி
விண்ணிடையெழுந்துவல்லேவீழ்ந்ததேபோலுமன்றே.

(இ - ள்.) தண் அளி சிறிதும் இல்லா - குளிர்ச்சியான இரக்கமென்பது ஒருசிறிதுமில்லாத, தாரகன் —, கிளர்ந்து - கிளம்பி, வான் போய் - வானத்தில் தள்ளி, (உடனே), மண்ணிடை மறிந்த தன்மை - பூமியில் விழுந்திட்ட தன்மையானது, —வல் சிறை இழந்த நாளில் - வலியஇறகுகளை இழந்தகாலத்தில், திண்ணிய மேரு - வலிமையுள்ள மேருமலை, இன்னும் செல்லல் ஆம்கொல் என்று உன்னி - மீண்டும் (முன்போலப்) பறந்துசெல்லலாகுமோ வென்று கருதி, விண்ணிடை எழுந்து - வானத்திற் கிளம்பி, வல்லே வீழ்ந்ததே - (பறக்கமாட்டாமையால்) விரைவிற் கீழ்விழுந்திட்டதையே, போலும் - ஒக்கும்; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

தற்குறிப்பேற்றவணி. இவ்வுருவகனை, தாரகனது சரீரத்தின் பருமைபற்றி வந்தது; இயற்கைநிறம்பற்றிவந்த தன்று: மேரு பொன்மயமானதும், தாரகன் கருநிறத்தவனு மாதலால். அன்றி, இரத்தத்தாற் சிவந்த உடம்புக்குச் செம்பொன்மலை செயற்கைபற்றியஉவமையாதலுமாம்.

'அளியாவது - அன்புகாரணத்தால் தோன்றும் அருள்' என்பது, தொல்காப்பியவுரை. திண்ணிய - திண்மையென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; இ - சாரியை.

மலை சிறகிழந்த கதை:—பூர்வத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுடையனவாய் அவற்றால் உலகமெங்கும் பறந்து திரிந்து பலஇடங்களின் மேலும் இருந்து அவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே அழித்துவர, அதனை முனிவர்முதலியோராலறிந்த தேவேந்திரன் சினந்து சென்று தனது வச்சிராயுதத்தால் அவற்றின் சிறகுகளை அறுத்துத்தள்ளிவிட்டனன் என்பதாம். (௧௧௧)

௧௧௨. வெற்றியதாருங்கூர்வேல்வெற்பினையட்டகாலைச்
செற்றியபூழியீட்டஞ்சிதறியபொறிகளெங்கும்
பற்றியபுகையும்வந்துபரந்தனகரந்ததண்டம்
வற்றியகடல்கள்வானிற்கங்கையும்வறந்ததன்றே.

(இ - ள்.) வெற்றியது ஆரும் - சயமுள்ளதான, கூர் வேல்-கூரிய அவ் வேலாயுதம், வெற்பினை அட்ட காலை - கிரௌஞ்சகிரியைப் பிளந்தழித்த பொழுது,—(அதனினின்று), பூழி ஈட்டம் - புழுதிக்கூட்டங்கள், செற்றிய- (எங்கும்) நிறைந்தன; பொறிகள் - நெருப்புப்பொறிகள், எங்கும் சிதறிய - எல்லா இடங்களிலுஞ் சிந்தின; பற்றிய புகையும் - அந்நெருப்புப்பொறிகளோடு சம்பந்தப்பட்ட புகைகளும், வந்து பரந்தன-(எங்கும்)வந்து பரவின; (இவற்றால்),அண்டம் கரந்தது - அண்டகோளமுழுவதும் மறைந்தது; கடல்கள்—, வற்றிய - வறண்டன; வானில் கங்கையும் - ஆகாயத்திலுள்ள தேவகங்காநதியும், வறந்தது - வரட்சியடைந்தது; (எ - று.)—அன்றே-ஈற்றசை.

கடல்களும் கங்கையும் நீர்சுவறுதற்குக் காரணம், மலைத்தூள்கள் சென்றுபடிந்து நிரம்புதலும், அனற்பொறிகளின் வெப்பமு மென்க. அனற்பொறி சிதறுதலும், புகையெழுதலும், வேலின் உக்கிரதன்மையா லாயின வை. செற்றிய, சிதறிய, பரந்தன, வற்றிய - முற்றுக்கள். பற்றிய - பெயரெச்சம். இனி, 'சிதறிய' என்பதைப் பெயரெச்சமாகவும், 'பற்றிய' என்பதை முற்றாகவுங் கொண்டு, சிதறிய பொறிகள் எங்கும் பற்றிய - சிதறின அனற்பொறிகள் எங்கும் பற்றிக்கொண்டன என்று ஒருவாக்கியமாக்கிப் பொருள்கூறலும் அமையும். 'எங்கும்' என்பதைப் பிறவிடங்களிலுங் கூட்டுக. அட்ட—அடு - பகுதி. 'கங்கையும்' என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சத்தோடு உயர்வுசிறப்பு. தற்குறிப்பேற்றவணி. (கஉஅ)

கஉகூ. சிறந்திடுமாயவெற்பைத்திருக்கைவேல்பொடித்தகாலைப்
பிறந்திடுகின்றதீயைத்தீயெனப்பேசலாமோ
வறிந்தவர்தெரியிற்குன்றமவுணனாகையினான்மெய்யி
லுறைந்திடுகுருதிதுள்ளியுகுத்தவாறாகுமன்றே.

(இ - ள்.) சிறந்திடு மாயம வெற்பை - மிகச்சிறந்த மாயைகள் வல்ல அக்கிரௌஞ்சகிரியை, திரு கை வேல் - (குமாரக்கடவுளின்) திருக்கையால் எறியப்பட்ட வேலாயுதமானது, பொடித்த காலை - தூள்படுத்தியபொழுது, பிறந்திடுகின்ற - (அந்தமலையினின்று) தோன்றுகின்றதான, தீயை - நெருப்பை, தீ என பேசல் ஆமோ - நெருப்பென்று சொல்லுதல் தகுதியோ? [அன்று]; (மற்று யாதெனின்):—அறிந்தவர் தெரியின் - (அம்மலையின் வரலாற்றை) அறிந்தவர்கள் ஆலோசிக்குமிடத்து, குன்றம் அவுணன் ஆகையினால் - அந்தமலை அசுரனதுவடிவ மாதலால், மெய்யில் உறைந்திடு குருதி துள்ளி உகுத்த ஆறு ஆகும் - அவனுடம்பிற்பொருந்திய இரத்தம் மேலெழுந்து சிந்திய விதமாம்; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

செந்தீக்குச் செந்நீரை உவமைகூறினர். ஒழிப்பணி யென்னும் அபஹ்நுதியலங்காரம் இது; அதன் இலக்கணத்தைத் தண்டியலங்காரத்தில் "சிறப்பினும் பொருளினுங் குணத்தினும் உண்மை, மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்" எனக் காண்க. இது, பொருளவநுதி. உபமானத்தன்மையை ஆரோபித்தற்பொருட்டு உபமேயத்தன்மையை யொழித்த இது, வெற்றொழிப்பு எனப்படும்; "அற்றொரு தன்மை யாரோபிப்பான்,மற்றொரு தன்மை மறுத்திட லொழிப்பாம்,அதுவே யறுவகைத் தாகு மென்ப," "அவற்றுள், அல்பொருட் டன்மை மாரோபித்தற், குவமேய வியல்பை யொழித்தல் வெற்றொழிப்பே" என்றார் சந்திராலோகமுடையார். இங்கே, உபமானமாகிய செந்நீரின் தன்மையை ஏற்றுதற்பொருட்டு உபமேயமாகிய தீயின் தன்மை ஒழிக்கப்பட்டமை காண்க. இதனை அவநுதியுருவக மென்பாருமுளர். (கஉகூ)

ககச. யானுற்றகுன்றந்தன்னையெறிந்தனனென்றுசெவ்வே
டானுற்றநகரியைவந்தழிந்ததேயென்னவெற்பி
லூனுற்றநெடுவேல்பாயவுதித்திடும்பொறியினீட்டம்
வானுற்றகங்கைபுக்குவறந்திடவித்ததன்றே.

(இ - ள்.) 'யான் உற்ற குன்றந்தன்னை - நான் பொருந்தியிருத்தற்கிடமான இந்தமலையை, எறிந்தனன் - (இக்குமரன்) எறிந்திட்டான்,' என்று - என்றெண்ணிக் கறுக்கொண்டு, (அதற்கு ஈடாக), செவ்வேள் தான் உற்ற நகரியை வந்து அழிந்ததே என்ன - செந்நிறமுள்ள அம்முருகக்கடவுள் தோன்றிய கங்காநதியைச் சென்று அழிக்கத்தொடங்கியது போலவே, ஊன் உற்ற நெடு வேல் வெற்பில் பாய உதித்திடும் பொறியின் ஈட்டம் - தசை தோய்ந்த நீண்டவேலாயுதம் அம்மலையிற் பாய்ந்தவளவிலே அங்கிருந்து தோன்றிய நெருப்புப்பொறிகளின் கூட்டமானது, வான் உற்ற கங்கை புக்கு வறந்திடவித்தது - ஆகாயத்திற்பொருந்திய கங்காநதியிற் சேர்ந்து அதனை வற்றச்செய்தது; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்: தேற்றமுமாம்.

கிரௌஞ்சகிரியின்மீது முருகனது வேல் பாய்ந்தவளவில் உண்டான அனற்பொறிக்கூட்டம் மேலெழுந்து தேவகங்காநதியைத் தனது வெப்பத்தினால் வறளச்செய்த தன்மை எதுபோன்றதென்றால்,—அம்மலையினின்று தோன்றிய அவ்வனல் 'எனக்குஇடமாயிருந்தஇம்மலையை இக்குமரன் பிளந்தொழித்தலால், அதற்குமாறாக அவனது தோற்றத்திற்குஇடமான கங்காநதியை முற்றவும்வற்றியழியும்படி செய்வேன் யான்' என்று கறுவி அதனை வற்றுவித்தாற்போன்றதென்பதாம் தற்குறிப்பேற்றவணி. தனதுபகைவன் தன்னால்வெல்லமுடியாதவாறு மிகவலியவனாயுள்ளபோது அவனையெதிர்க்க முடியாமையால் அப்பகைவனைச்சேர்ந்தவனையாவது தனதுதிறத்தால்வெல்லுதலாகிய விரற்கோளணியும் இச்செய்யுளில்தோன்றுதல் காண்க; அது, வடமொழியில் ப்ரத்யநீகாலங்கார மெனப்படும். சுப்பிரமணியனது உற்பத்திக்குக் காரணமாய்ப் பரமசிவனது ஆறுதிருமுகங்களினின்றுந் தோன்றிய ஆறுஅனற்பொறிகள் கங்கையிற் சேர்ந்திருந்த தன்மை, கதைத்தொடர்ச்சியிற் கூறப்பட்டது "ஆர்த்திடுகங்கையினகத்தமைத்தானரோ", "ஆனருள் முறையினை யறிந்து கங்கை தன், சிரமிசை யேந்தியே சென்றோர் கன்னலிற், சரவண மெனுந்தடந்தன்னிற் சேர்த்தனள்" எனத் திருவவதாரப்படலத்திற் கூறியமை காண்க. முன்னே தாரகனதுமார்பிற்பாய்ந்து அவனது தசையைக் கவர்ந்துகொண்டு சென்றதாதலால், 'ஊனுற்ற நெடுவேல்' எனப்பட்டது. (ககச)

ககரு. திறலுடைநெடுவேலட்டசிலம்பினிற்சிதறித்தோன்றும்
பொறிகளுந்துகளுமார்ப்பும்பொள்ளெனச்செறிந்ததன்மை
மறிகடன்முழுதுமங்கண்வடவையுமடைந்தொன்றாகி
யிறுதியிலுலகங்கொள்ளவெழுந்ததுபோலுமாதோ

(இ - ள்.) திறல் உடை - வலிமையையுடைய, நெடு - நீண்ட, வேல் - வேலாயுதம், அட்ட - பிளந்தழித்த, சிலம்பினில் - கிரௌஞ்சமலையினின்று, சிதறி தோன்றும் - வெளிச்சிதறிக் காணப்பட்ட, பொறிகளும் - அனற்பொறிகளும், துகளும் - தூசிகளும், ஆர்ப்பும் - ஆரவாரமும், பொள்ளென - விரைவாக, செறிந்த - ஒருங்குகூடியெங்கும்பரவிய, தன்மை - தன்மையானது,—இறுதியில் - கற்பாந்தகாலத்தில், உலகம் கொள்ள - உலகங்களைக் கவர்ந்துகொண்டழிக்கும்பொருட்டு, மறி கடல் முழுதும் - (அலைகள்)புரளுகின்ற கடல்க

னைத்தும், அக்கண் வடவையும்-அக்கடலினிடத்துள்ள படபாமுகாக்கினியும், ஒன்று ஆகி அடைந்து - ஒருங்குசேர்ந்து, எழுந்தது போலும்-மேலெழுகின்ற தன்மையை யொக்கும்; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

உவமையணி. இவ்வனற்பொறித்தொகுதிக்குப் படபாமுகாக்கினியும், துகள்நிறைவுக்குக் கடலெழுச்சியும், ஆரவாரத்துக்கு இரண்டும் உவமையென்க. வடவை-படபா என்ற வடசொல்லின் விகாரம்; பெண்குதிரையைக் குறிக்கின்றஇச்சொல் அதன்முகத்திலுள்ள அக்கினிக்குத் தானியாகுபெயர்.

ககசு. தந்தியின்வதனங்கொண்டதாரகவவுணன்மார்பிற்
சிந்துறுகுருதிச்செந்நீர்திரைபொருதலைத்துவீசி
யந்தமினீத்தமாகியயிற்படையட்டகுன்றில்
வந்திடுபூழைபுக்குமறிகடன்மடுத்ததன்றே

(இ-ள்.) தந்தியின் வதனம் கொண்ட - யானைமுகத்தையுடைய, தாரக அவுணன் - தாரகாசுரனது, மார்பின் - மார்பினின்று, சிந்துறு - பெருகிய, செம் குருதி நீர் - சிவந்த இரத்தப்பெருக்கு, திரை பொருது அலைத்து வீசி - அலைமோதி வீசியடித்துக்கொண்டு, அந்தம் இல் நீத்தம் ஆகி - வரம்பற்ற வெள்ளமாய், அயில் படை அட்ட குன்றில் வந்திடு பூழை புக்கு - (குமரனது) வேலாயுதம் பிளந்தழித்த கிரௌஞ்சகிரியில் (அவ்வேல்பாய்தலால்) உண்டான பெருந்துளைவழியாய்ப் பிரவேசித்துச்சென்று, மறி கடல் மடுத்தது - அலைமோதப்பெற்ற கடலில் விழுந்து அதனை நிறைத்தது; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை.

'அயிற்படையட்ட' என்பது - குன்று, பூழை என்னும் இரண்டனோடும் இயையும். அயிற்படையட்டதனால் ஆகிய துவார மென்க. அலைத்தல்-பக்கங்களிலுள்ளபொருள்களை நிலைபெயர்த்தல். வீசுதல் - அவற்றைத் தூரத்தி லெறிதல். குருதிச் செந்நீர்-ஒருபொருட்பன்மொழி யெனினுமாம். வதனம்-வடசொல். அயிற் படை - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மறிகடல் - வினைத்தொகை. தொடர்புயர்வுநவிற்சியணியின்பாற்படும். (ககசு)

ககஎ. விட்டவேன்மீண்டுகந்தவேள்கரதநிருப்பத்தீயோன்
பட்டதும்வெற்புமாய்ந்தபான்மையுமவுணர்யாருங்
கெட்டதுநோக்கிமாலுங்கேழ்கிளர்கமலத்தேவு
முட்டிலாமகத்தின்வேந்துமுனிவருஞ்சுரருமார்த்தார்.

(இ - ள்.) விட்ட வேல் - (முருகக்கடவுள்) பிரயோகித்த வேலாயுதமானது, மீண்டு-திரும்பிவந்து, கந்த வேள் கரதது இருப்ப-அக்கடவுளின் திருக்கையிற்சேர்ந்திருக்க,—தீயோன் பட்டதும் - கொடிய தாரகாசுரன் இறந்ததையும், வெற்பு மாய்ந்த பான்மையும் - (கிரௌஞ்ச)கிரி அழிந்த தன்மையையும், அவுணர் யாரும் கெட்டதும்-அசுரர்களெல்லாரும் அழிந்திட்டதையும், நோக்கி - பார்த்து,—மாலும்-திருமாலும், கேழ் கிளர் கமலம் தேவும் - ஒளிவிளங்குகின்ற தாமரைமலரில் தோன்றிய பிரமதேவனும், முட்டு இலா மகத்தின் வேந்தும் - குறைவில்லாத யாகங்களுக்குத் தலைவனான இந்திரனும், சுரரும் - மற்றைத்தேவர்களும், முனிவரும் - இருடிகளும், ஆர்த்தார் - (மகிழ்ச்சியால்)ஆரவாரித்தார்கள்; (எ - று.)

முட்டிலா மகத்தின் வேந்து - நூறுஅசுவமேதயாகங்களைக் குறைவறச் செய்த இந்திரன். முட்டில்லாமை - யாகத்துக்கு அடைமொழி. முட்டு - மந்திரலோபம், கிரியாலோபம், திரவியலோபம் முதலியன. முட்டில்லாமையை இந்திரனுக்கு அடைமொழியாகக்கொள்ளின், மனத்துயரொழிந்த இந்திர னென்க. மகம் - வடசொல். (ககஎ)

௧௯௮. ஆடினர்குமரற்போற்றியங்கைகளுச்சிமீது
கூடினர்தண்பூமாரிதூர்த்தன ரவனைச்சூழ்ந்து
பாடினர்தொழுதுமுன்னம்பன்முறைபணிந்துநின்றார்
நீடியவுவகையென்னுநெடுங்கடலாழுநீரார்.

(இ - ள்.)(இங்ஙனம் மகிழ்ந்து ஆரவாரித்த தேவர்களும் முனிவர்களும்),— நீடிய உவகை என்னும் நெடுங் கடல் ஆழும் நீரார் - மிக்க களிப்பென்கிறபெருங்கடலினுள்ளே மூழ்கியழுந்திய தன்மை யுடையவர்களாய், ஆடினர்-கூத்தாடினார்கள்; குமரன் போற்றி - குமாரக்கடவுளைத் துதித்து, அம் கைகள் உச்சிமீது கூடினர்-அழகிய கைகளைத் தலையின்மேற் குவித்துத் தொழுதார்கள்; தண் பூ மாரி தூர்த்தனர் - தேனினுல்நனைந்த பூமழையைப் பொழிந்தார்கள்; அவனை சூழ்ந்து-அம்முருகக்கடவுளைப் பிரதக்ஷிணஞ்செய்து, பாடினர்-கீதம்பாடினார்கள்; தொழுது-அஞ்சலிசெய்து, முன்னம்-எதிரில் வந்து, பல் முறை பணிந்து நின்றார் - பலமுறை வணங்கி நின்றார்கள்; (எ - று.)

குமரற்போற்றி ஆடின ரென்றும், சூழ்ந்து தொழுது பாடின ரென்றும் இயைத்தலுமாம். அங்கைகள் - அகங்கைக ளென்பாரு முளர். சூழ்ந்து - சுற்றிலுங் கூடிநின்று எனினுமாம். தொழுதல - கைகூப்புதல். பணிதல் - ஸாஷ்டாங்கநமஸ்காரஞ் செய்தல். ஆடுதல முதலியன, ஆனந்தத்தின் செயல். முன்னம் - இடமுன்: சந்நிதானத்தி லெனக. தண் பூமாரி-குளிர்ச்சியான புஷ்பவர்ஷம். (௧௯௮)

௧௯௯ ஆங்கதுகாலைதன்னிலளப்பிலா மாயைவல்ல
வோங்கலதிறப்பவங்கணுறங்கியவீரரெல்லாந்
தீங்குறுமையனீங்கிக்கதுமெனச்சென்றுசெவ்வேள்
பூங்கழல்வணங்கிநின்றுபோற்றியேபுடையினின்றார்.

(இ - ள்.) ஆங்கு அது காலைதன்னில் - அச்சமயத்திலே, அளப்பு இலா மாயை வல்ல ஒங்கல் அது இறப்ப - அளவில்லாத மாயைகள் வல்ல கிரௌஞ்சகிரி அழிந்திட, அங்கண் உறங்கிய வீரர் எல்லாம் - அவ்விடத்தில் மயங்கிக்கிடந்த வீரர்களெல்லாரும், தீங்கு உறு மையல் நீங்கி - கொடுமைமிக்க மயக்கந் தெளிந்து, கதுமென சென்று - விரைவிற் போய், செவ் வேள் பூ கழல் வணங்கி நின்று - சிவந்த முருகக்கடவுளினது தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரித்து எழுந்து போற்றியே-(அவனைத்)துதித்துக்கொண்டே, புடையில் நின்றார்-(அவனது) பக்கங்களிற் கூடிநின்றார்கள்; (எ - று.)

ஒங்கல் - உயர்ச்சி: உயர்வுள்ள மலைக்குத் தொழிலாகுபெயர்; 'அல்' - கருத்தாப்பொருள்விகுதி யெனினுமாம்: இதன்மேல், 'அது' - முதல்வேற்றுமைச்சொல்லுருபு. ஆங்கு - அசையுமாம். (௧௯௯)

௨00. வாருறுகழற்கால்வீரவாகுவேமுதலாவுள்ள
வீரர்கடம்மையெல்லாம்வேலுடைக்கடவுணோக்கித்
தாரகன்வரையுட்பட்டுத்தகுமுணர்வின்றிநீவி
ராருநொந்தீர்கள்போலுமாயையூடழுந்தியென்றான்.

(இ - ள்.) (அப்பொழுது), வேல் உடை கடவுள் - வெற்றிவேலையுடைய முருகக்கடவுள்,—வார் உற கழல் கால் வீரவாகுவே முதல் ஆ உள்ள வீரர்கள் தம்மை எல்லாம் நோக்கி - கட்சி பொருந்திய வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய வீரவாகுமுதலாகவுள்ள வீரர்களனைவரையும் பார்த்து,—'நீவிர் ஆரும் - நீங்களெல்லாரும், தாரகன் வரையுள் பட்டு - தாரகனாலது கிரௌஞ்ச

சிவமயம்.

# சைவசித்தாந்த வைபவம்

"வேதமோடாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்பு மென்றுள்ளன
நாதனுரையிவை நாடிலிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே."

உலக மனைத்தினையும் ஆக்கி நிறுத்தி யழித்து மறைத்து அருளும் பரம கருணாநிதியாகிய பரமசிவன், சர்வான்மாக்களும் தம்மை யடைந்து வழிபட்டு உய்யும்பொருட்டு, சிருட்டி யாரம்பத்திலே வேதம் ஆகமம் என்னும் இரண்டு நூல்களையும் அருளிச் செய்து, அவ்வான்மாக்களுக்குக் கொடுத்தருளினர். அந்த நூல்களிலே சொல்லப்படும் விஷயங்களாவன: பதி பசு பாச இயல்புகளாம். வேதத்திலே பதி பசு பாச வியல்புகள் பொதுவகையாகவும், ஆகமங்களிலே சிறப்பு வகையாகவும் ஓதப்பட்டுள்ளன. அதனால் வேதம் பொதுநூலெனவும், ஆகமம் சிறப்பு நூலெனவும் சொல்லப்படும்.

ஆன்ம வர்க்கம் அபக்குவர் பக்குவர் என்னும் வேறுபாட்டால் உலகரும், சத்திநிபாதரும் என இருவகைப்படுதலின், உலகர் பொருட்டு வேதத்தைப் பொதுவகையாகவும், சத்திநிபாதர் பொருட்டு ஆகமத்தைச் சிறப்பு வகையாகவும் பரமசிவன் அருளிச் செய்வாராயினர்.

இனி, வேதத்திலும் பொதுவும் சிறப்புமென இருவகை யியல்புகள் உள்ளன. எனினும், ஆகமத்திற் கூறப்படும் சிறப்பியல்பை நோக்க வேதத்திலுள்ள சிறப்பியல்பு பொது வியல்பாய் நிற்கும். ஆகமத்திலும் பொதுவியல்பு, சிறப்பியல்பு என இருவகை யியல்புகள் உள்ளன. ஆயினும், வேதத்திலுள்ள சிறப்

பியல்பை நோக்க ஆகமத்திலுள்ள பொதுவியல்பு சிறப்பியல்பாக நிற்கும். அன்றியும், வேதத்திலுள்ள சிறப்பியல்பு அருகி நடந்து இலைமறை காய்போல அரிதினுணரப்படும். ஆகமத்திலுள்ள சிறப்பியல்பு தெளிந்த பொருளாய் வெள்ளிடை மலைபோல் எளிதினுணரப்படும். பயன்தரு முறையினும் வேதத்திலுள்ள கன்மகாண்டம் பந்த நிலையினதாகிய போகத்தையே பெரிது முதவும். ஞானகாண்டம் முத்தியை யுதவுமேனும் பிரமபத விண்டுபத நிலைகளையே பெரிது முதவும். சிறுபான்மை உண்மை முத்தியை யுதவும் பகுதிகளு முளவாம். ஆகமத்திலுள்ள கன்மகாண்டம் பந்தத்தை யகற்றி முத்தி வகையுட்பட்ட சாலோக்கியாதி பதங்களைக் கொடுக்கும். ஞானகாண்டமோ அபரமுத்தியின் மேற்பட்ட அபரமுத்தி பரமுத்திகளை அருளும்.

இவ்வாறு வேதம் ஆகமம் இரண்டும் வேண்டப்பட்டு, ஒத்து ஒழுகுவனவாம். அன்றி அவை தம்முண் மாறுபட்டனவாகா. சர்வஞ்ஞனாகிய முதல்வன் மாறுபாடுற உரையானென்பதும் உணரற்பாலதாம்.

இவ்வுண்மை இதன் மகுடத்திலங்கும் "வேதமொடாகமம் மெய்யாம்" என வெழுந்த திருமந்திரத்தானும், "வேதசாரமிதந் தந்திரம்" எனக் கிரியாபாதத்தும், "வேதாந்தார்த்த மிதஞ்ஞானம்" என ஞானபாதத்தும் ஓதும் காமிக வசனத்தானும், "வேதத் தொழி பொருள் வேதாந்தத் தீதில் பொருள்கொண்டுரைக்குநூல் சைவம்" எனவும் "வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திற லிங்குத் தெரிக்கலுற்றும்" எனவும் வரும் சித்தாந்தநூற் செய்யுட்களானும் இனிது போதரும்.

பரமசிவன் அருளிய நூலும் பொருளும் இங்ஙனமிருக்க, இடைக்காலத்திலே இந்திரன் பொருட்டுப் பிரகற்பதி உலோகாயத நூல் செய்தார். திரிபுரத்தசுரர் தபசை யழித்து அவர்கள் வலியைக் குறைக்கும் சூழ்ச்சியால் அவர்க்குப் போதிக்கும்படி மாயோன் பிடகநூல் செய்தார். அருகன் ஆருகத நூல் செய்தான். இவை வேதத்துக்குப் புறம்பான நூல்கள். கணாதரும் அக்கபாதரும் தருக்கநூல் செய்தார். சைமினி வேதத்திற் கரும

காண்டத்தை மேற்கொண்டு மீமாஞ்சை நூல் செய்தார். கபிலர் சாங்கியநூல் செய்தார். இவை வேதத்தைத் தழுவிய நூல்கள். இன்னும், மாயோன் பாஞ்சராத்திர நூல் செய்தார். சுக்கிரன் தேவர்க்குக் கேடு சூழ்ந்து அசுரர் தலைவனாகிய சூரபன்மனுக்கு மாயாவாதம் போதித்தார் பதஞ்சலி பாதஞ்சல யோகநூல் செய்தார். இந்நூற்பொருளெல்லாம் ஒவ்வோர் மதங்களாய்க் கிளைத்தன. பிரகற்பதியும் மாலும் சைமினியும் சுக்கிரனும் அவ் வந்நூல்கள் செய்தமை ஒவ்வோரேதுப்பற்றியாம். அதனால் அவையே அவர்க்கு அபிமதமென்று கொள்ளலாகாது.

துவாபரயுக முடிவில் இற்றைக்கு ஐயாயிர வருடங்களுக்கு முன் வேதவியாசர் வேதத்து ஞானகாண்டப் பொருளைத் தழுவிப் பொருள் பலபடத் தோன்றும் சூத்திர வடிவமாகப் பிரமசூத்திர மெனவொன்று செய்தார்.

எத்தனை நூல்கள் எத்தனை மதங்கள் தோன்றினும், பரம சிவன் அருளிச்செய்த முதனூலாகிய வேதசிவாகமங்களும் அவை போதிக்குஞ் சைவசமயமும் தம் நிலை தளராது விளங்கி, உயிர்களுக்கு வேண்டிய இருமைப் பயனையும் உதவி வருகின்றன. முனிவர்கள் வாக்காகிய கற்ப சூத்திரங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள் இதிகாசங்களும் பிற்காலங்களிலே தோன்றி உபபலமாய் நடக்கின்றன.

புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டத்திலே தலங்கடோறும் ஆலயங்கள் அமைய, அவற்றிற் பரமசிவன் தமக்கு ஒரு வடிவமில்லாதவராயினும் உலகத்தார் தம்மை வழிபட்டு உய்யும்படி திருமேனி கொண்டு சிவலிங்க மூர்த்தியாய் எழுந்தருள, உமாதேவியார், கணபதி, சுப்பிரமணியர் முதலாயினோரும், அரி, பிரமன், இந்திரன் முதலிய தேவர்களும், அகத்தியர், வசிஷ்டர், மார்க்கண்டேயர், பதஞ்சலி முதலிய முனிவர்களும், முசுகுந்தன், நளன், இராமன் முதலிய சக்கிரவர்த்திகளும், பல அரசர்களும், அடியார்களுமானோர் காமிக முதலிய சைவாகமங்களின்படி பூசித்துத் திருவருள் பெற்று வருகின்றனர். அம்மட்டோ! மிருகங்கள், பறவைகள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரங்கடோறும் சைவாகமப்

படி யமைந்த ஆலயங்களிலே சிவலிங்கப் பெருமானை வழிபட்டுப் பேறுபெற்றன வென்னின், வேறு யாது விளம்பல் வேண்டும்.

சிருட்டி காலந்தொட்டு இந்நாள்வரை பரமசிவனது திருவுள்ளப்பாங்கின்படி சைவசமயம் இத்துணை வைபவங்களோடுவிளங்கி உயிர்களுக்கு அருந்துணையாய் நின்று அருள்புரிந்து வருகின்றது.

இக்கலியுகத்திலே யுக வலிமையினாற்போலும் இடைக்காலத்துப் பௌத்தம், சமணம் என்னும் சமயங்கள் கதித்துச் சைவசமயத்துக்கு இடையூறு செய்யலாயின. அக்காலத்து முதல்வனாணையால் மாணிக்கவாசக சுவாமிகள், ஆளுடைய பிள்ளையார், அப்பமூர்த்திகள், முதலாயினோர் அவதரித்து அவற்றை யொடுக்கிச் சைவசமயத்தை ஓங்கச் செய்தனர். இது நிற்க;

வியாசர் இயற்றியதாய்ச் சொன்ன பிரம சூத்திரத்துக்கு இற்றைக்கு இரண்டாயிர வருடங்களுக்கு முன்னே ஸ்ரீகண்ட சிவாசாரியர் ஒரு பாஷிய மியற்றினர். அது சைவப்பகுதியுட்பட்டதாகும். அவர் காலத்திற்றானே மலையாள நாட்டிற் சங்கராசாரியர் தோன்றி வடநாடு சென்று கல்வி பயின்று வல்லுனராகித் தமக்கு வாய்த்த அறிவின்படி பிரமசூத்திரத்துக்கு ஏகான்மவாதப் பகுதியுட்பட்ட மாயாவாத பரமாக ஒரு பாஷிய மியற்றினர். சைவநல மறியாத வடநாட்டுப் பிராமணருள் ஒருசாரார் சாதியபிமானங்கொண்டு, அவரது போதனையைத் தழுவி யொழுகலாயினர். பின் இராமானுஜாசாரியர், ஆனந்த தீர்த்தாசாரியர் என்பவர்களும் பிரமசூத்திரத்துக்கு ஒவ்வோர் பாஷியமியற்றித் தத்தங் கொள்கைகளைச் சாதித்தனர். அவ்வாசிரியர்கள் கொண்ட கொள்கைகளை அவலம்பித்து நடப்பவரும் பலராயினர்.

ஸ்ரீகண்டாசாரியர் பிரமசூத்திரத்தினைச் சிவாத்துவித மதம் போதிப்பதென்பர். சங்கராசாரியர் கேவலாத்துவித பரமென்பர். இராமானுஜாசாரியர் விசிட்டாத்துவித நூலென்பர். ஆனந்த தீர்த்தாசாரியர் துவித நூலென்பர். இங்ஙனம் அச்சூத்திரம் பலரையும் மலையவைத்து இதுதான் பொருளென உண்மை யுணரவொட்டாது மறைந்து, பலரும் கலாம் விளைத்து இடர்ப்படும்படி செய்து நிற்கின்றது. வேதவியாசர் செய்த அச்சூத்திரத்தால் விளைந்த

முதற்பயன் மதக்கலகங்கள் நேர்ந்து பாதகண்டவாகிகள் மிளவு பட்டு ஐக்கியமின்றியானதேயாம்.

சைவமாந்தர் இவ்விடருட் சிக்காது வேத சிவாகம மெய்ப் பொருளுணர்ந்து, அந்நூல்வழி யொழுகி, ஆளுடைய பிள்ளையார் முதலிய சமயாசாரியர் அருளிச் செய்த தேவார திருவாசக முத லிய அருட்பாக்களை ஓதிச் சிவபெருமானை வழிபட்டு, அருளும் ஆனந்தமும் பெற்று வாழ்கின்றனர்.

தமிழ் மொழியிலே திருமூலநாயனர் திருமந்திரம் அருளிச் செய்து சைவசித்தாந்த உண்மைகளை இலங்க வைத்தார். திருக் கைலாச பாம்பரைச் சந்தான குரவர்களான மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியர், உமாபதி சிவாசாரியர் முதலாயினோர் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் முதலிய பதினன்கு சாத்திரங்களை அருளிச் செய்திருக்கின்றனர். அச்சாத் திரங்களினலே தமிழ்நாடு அடைந்த பயனுக்கு அளவில்லை.

இப்படியாகவும், இக்காலத்து அச்சங்கராசாரியாது கேவலாத் துவித மாயாவாத மதத்தை அவலம்பித்து ஒழுகுகின்றேமென்பா ருட் சிலர், தம்மளவில் அடங்கி நில்லாது சைவசித்தாந்த செல் வாகளோடு சருவி இழிமொழி பகர்ந்து நிந்தைகள் பேசிச் சைவ நெறியை இகழ்ந்து பழிபாவங்களுக்கு ஆளாகுகின்றனர். அவ ரது இழிமொழி பொதிந்த நிந்தைகளாற் சைவத்துக்கு வரும் கேடு யாதுமில்லையாயினும், அவர் சைவசித்தாந்தத்தின்மேல ஏற் றும் பழிமொழிகளால், நம்மனேர் மனம் வருந்தாவண்ணம் அவற்றைப் பரிகரித்தல் கடமையாமென மேற்கொண்டனம.

1. மாயாவாதிகளுட் கோவிலூர்க் "காசிகானந்த" னென்பா ரொருவர் கோலொன்றேந்தி "வேதபாஹ்ய பாசுபத தாந்திரிக துவித சைவ துர்வாத"மென நிந்தைமொழி தலை வைத்துச் சைவ சித்தாந்தத்தை இகழ்கின்றார். "வேதபாஹ்யமான ஆகமம்" என்கின்றார். "ஆகமத்திற் கூறுது கூறிய இவாது மார்க்கம் காம விஷ்டைக்குச் சமானமா" மென்கின்றார். "வேதபாஹ்ய பாசு பத தாந்திரிக துவித சைவம்" "அவைதிகமாயசைவசித்தாந்தம்" என்பனவாகப் பலபல நிந்தைமொழி புகல்கின்றார்.

மற்றோரிடத்தில் எமக்கோ, "பரமேஸ்வரன் பகர்ந்த பலவாகமங்களும், தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலிய மகிமை வாய்ந்த பொது நூல்களும், சிரோபூஷணமாக வுடன்பாடேயாம்" என்றார். இஃதுண்மையானால் ஆகமத்தை நிந்தித்தலும் அதிற் கூறப்படும் சைவசித்தாந்தத்தை இகழ்ந்தலும் என்ன மயக்கமோ! திருமந்திரத்தில் "வேதமோடாகமம் மெய்யாம்" "இரண்டந்தம்பேதமதென்பர் பெரியோர்க்கபேதமே" என்பவற்றை யுணராததென்னையோ. இவர் பரமேசுவரன் பகர்ந்த ஆகமம் எனத் தெரிந்தும அவ்வாகமத்தை நிந்தித்தலும், அதிற் சிவன் பகர்ந்த சைவசித்தாந்தத்தினை நிந்தித்தலும் சர்வஞ்ஞராகிய சிவனுக்குச் சம்மதமாகுமா! அவரவர் செய்தவினைக்கு ஏற்ற பயனளிக்கும் பரமசிவன் இந்நிந்தைக்குப் பயனளிக்கமாட்டாரோ. சிவநிந்தை சிவசாத்திரநிந்தை சைவநிந்தையாகிய இவ்வதிபாதகங்கட்குக் கழுவாயு முண்டுகொலோ!!

2. "தூர்வையாசகப் படல"த்தை யெழுதினோர் "நானே பிரமமெனக் கொண்ட மார்க்கம் வேத சிவாகமாதி சகல சாஸ்திர விரோத"மாம் என்றதைப்பற்றி வருந்தினர். வேத சிவாகமங்களும் அவற்றின் வழிவந்த சகல சாஸ்திரங்களும் நாம் பாசபந்தமுடைய பசுக்களென்றும் நமக்குப் பதியாய்ப் பிரமமாயுள்ளவர் பசுபதியெனப் பெயரிய பரசிவமே யென்றும் கூறுவதால், பசுவாகிய நாமே பிரமமென்பது அவற்றிற்கு விரோதமேயன்றோ! இவர் அது கேட்டு வருந்துவதெற்றுக்கு.

3. இவர் அவ்விடத்துத் திருமந்திரம் ஒன்றைக் காட்டினர். அதில் அவமற்ற வேதாந்த சித்தாந்தம் சிவனைப் பரமனுட் சிவனுட் காட்டும் என்றிருப்பதால், வேதாந்த சித்தாந்த மிரண்டும் அவமற்றதென்றும், அந்நெறிகள் ஆன்மாவினுள்ளே பரமான்மாவாயுள்ள சிவனைக் காட்டும் என்றும் வெளியாயிற்று. அது சைவசித்தாந்திகட்கே சாதகமாயுள்ள கொள்கையாம். அதுபற்றி இவருக்கு வந்த ஆக்கமென்னையோ. அவமற்ற வேதாந்தமென்றிருக்க ஆபாச மார்க்கமென்னலாமோ வென்கின்றார். இங்கே கூறியது சிவன் உபதிஷ்டமாகிய வேதாந்தங்களினுரைத்த கொள்கை. அக்கொள்கையும் சிவன் சிவாகமங்களில் ஞானபாத

மாகிய சித்தாந்தத்துக் கூறுங் கொள்கையும் ஒன்றென்று திருமூலரே கூறினர். அது தெரிக்கற்கே அவமற்ற வேதாந்த சித்தாந்தம் என இரண்டனையும் ஒருபடுத்துச் சண்டுங் கூறினர். பரமனாகிய பிரமம் சிவனே யென்றுங் காட்டினர். இவ்வுரைக்கு மாறுகச் சிவமென வேறில்லை, நாமே பிரமம் என்று கூறும் மதம் வேதாந்தமன்று; மாயாவாதமாம். அல்லவெனின் மாயாவாதிகள் சொல்லும் நாம பிரமமெனனுங் கொள்கை பொருத்தமற்றதெனப் பூர்வபக்கமாக வைத்து ஆகமங்களிற் பரமசிவனே கண்டித்து ஒதுக்குகின்றார். உபநிடத வேதாந்தத்தை அருளிச்செய்த சிவனே ஆகமத்தில் அவ்வாறு கூறி யொதுக்கினாராகலின், மாயாவாதக் கொள்கை ஆபாசமாகப் பட்ட மெய்யபகுந்த பேயென்னே. அவமுற்ற அவ்வே காலத்து மாயாவாதிகளும் வேதாந்திகள் எனத்தம்மைக்கூறுதலின், அவ்வாறு சொல்லைப்பொருட்டே திருமூலர் இதனை அவமற்ற வேதாந்தமென விசேடித்துப்புரைத்தார்; ஆதலின், இவர் அதுபற்றி வருந்துதற் பயனின்று.

4. இனி, பதிபசுபாசமாகிய பதார்த்த மூன்றும் அநாதி நித்தியப்பொருள்களாமென்று சகல சாஸ்திரங்களும் உரைக்கும் எனக்கூறியது வழுவென்கின்றார் நித்தியா நித்திய வஸ்து விவேகம் என்பதன் பொருளையுணரவேண்டு மென்கின்றார். அதற்குத் திருவிளையாடற் புராணத்துள்ள:—

(1) "மெய்ம்மை யாம்பொருள் விவேகமும் வேறபாடாய
பொய்ம்மை யாம்பொருள் விவேகமும் புத்தியுட்டோன்ற
விம்மையாசையு மறுமையி லாசையு மிகந்து
செம்மையாகிய கருத்தராய்ப் பாகதி சேர்வார."

(2.) "புத்தராதியோர் புறவுரை நெறிகளும் பொய்யா
நித்தவேதநூ றழுவிய வகையுரை நெறியுஞ்
சித்தமாசறத் தானருட் டெளியா வதனுன்
மித்தையாணவத் தொடக்கறு தில்லையாம் வீடும்."

(8.) "வேதவாகமச் சென்னியில் விளைபொரு ளபேதம்
பேதமாகிய பிணக்கறத் திருட்பிணி யவிழ்த்து
நாதனாகிய தன்னையு மென்னையு நல்கும்
போதனாகிய குருபரன் வருவதெப் பொழுதால்."

என்னும் பாக்களைப் பிரமாணமாகக் காட்டினர்.

திருவிளையாடற் புராணத்தில் வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலத்தில் "மெய்ம்மையாம் பொருள் விவேகமும்" என்பது 10-ம்பாட்டு. புத்தராதியோரென்பது 11-ம் பாட்டு. "வேதவாகமச் சென்னியில்" என்பது 13-ம்பாட்டு. இவர் 11-க்கும் 13-க்கும் இடையிலுள்ள 12-ம் பாட்டாகிய,

"பத்திசெய்தா னருட்பெரும் பத்தருக் கன்றி
முத்திபெய்தரி தெனமறை மொழிவதப் பொதுநூல்
சத்தியப்பொருட் டெளிவெலாஞ் சத்திநி பாதர்க்
குய்த்துணர்த்திய தாகம மென்பர்மெய் புணர்ந்தோர்."

என்பதனை இங்கேகாட்டாது மௌனமாக விட்டு விட்டார். இப்படி விட்டதற்கு ஏது வென்னை? இதன் பொருள் தங்கொள்கைக்கு விரோதமா மென்பதேதா. அவ்விரோதம் யாது? சிவபத்தருக்கன்றி முத்தி பெய்தரிதென மறைமொழியு மென்றும், அம்மறை பொது நூலென்றும், அவ்வேத மெய்ப்பொருட்டெளி வெல்லா வற்றையும் சத்திநிபாதர்க்கு உய்த்துணர்த்தியது ஆகமம் எனவும் உண்மை புணர்ந்த ஞானிகள் கூறுவாரென்பதேதா. தம்கொள்கைக்கு மாறாகவந்தாலும் உண்மையை யொளிக்கலாமா. தம் மனசசாட்சிக்குத் தெரிந்தவொன்றை அம்மனச்சாட்சிக்கு மாறாகப் போகலாமா. இங்கு இப்படி யொளித்தவர் மற்றிடங்களில் வேறியாது செய்யமாட்டார். அன்பர்களே! இவரது வஞ்சனையைப் பாருங்கள். பிடித்த கட்சியைச் சாதிக்க வேண்டுமென்பதே யன்றி உண்மையில் நாட்டமில்லை யென்பது இதனால் நன்கு புலப்படுகின்றது.

இனி, பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தம் நித்தமென்பதற்கும் நித்தியா நித்திய வஸ்து விவேகத்திற்கும் என்ன சம்பந்தம். அதினும் இங்கே காட்டிய செய்யுட்களுக்கும் அதற்கும் என்ன தொடர்பு.

வாதவூரடிகள் தம் மதியில் "நித்தியா நித்திய வஸ்து விவேகம் உதிப்ப, இகபரபோக வைராக்கிய முற்றுச், சித்த சுத்தியுடையாராய், முத்திநெறியையாராயத்தொடங்கி, வேதத்துக்குப்புறம்பான உலோகாயதம், பௌத்தம் சமணம் என்னும் மார்க்கங்கள் பொய் மார்க்கங்களாய்; வேதத்தைத் தழுவிய மீமாஞ்சகம், தார்க்கிகம், சாங்கியம், மாயாவாதம், பாஞ்சராத்திரம், பாதஞ்சலம் முதலி

ய மார்க்கங்களும் அறிவின் கண்ணதாகிய அஞ்ஞான மயக்கத்தையறுத்துச் சிவபெருமானுடைய திருவருளை உணர்த்தமாட்டா; அதனால், ஆணவமலபந்தம் நீங்குதலும் இல்லை; முத்திசித்தியும் இல்லையாம். சிவபத்தருக்கன்றி மற்றையோர்க்கு முத்திசித்திப் பதரிதென்று வேதங்கூறும். பொருளாகிய அவ்வேதத்தின் மெய்ப்பொருள் விளக்கத்தைச் சத்திநிபாதத் துத்தமர்க்கு உய்த்துணர்த்துவது சிறப்புநூலாகிய ஆகமமாம் என்று உண்மையுணர்ந்த ஞானிகள் கூறுவார்கள். ஆதலின், அவ்வேதாகம முடிவில் விளங்கும் மெய்ப்பொருளின் அபேதவாதம் பேதாபேத வாதம் பேதவாதமாகிய பிணக்குக்களை அறுத்து அஞ்ஞானத்தை நீக்கி மெஞ்ஞானந்தந்து பதியாகிய தன்னையும், அடிமையாகிய என்னையும் தரிசனஞ் செய்து வைக்கின்ற ஞானாசாரியார் எப்பொழுது வருவாரோ!” என்று காதலித்துரைத்ததாக அப்பாக்கள் புகல்கின்றன.

தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனாரும் ஞானம் என்னும் பகுதியில் நிலையாமை துறவு மெய்யுணர்தல் என வைத்து, செல்வ நிலையாமை யாக்கை நிலையாமைகளையும், அகப்பற்றுப் புறப்பற்றுக்களின் ஒழிவையும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல்களால் வரும் மெய்ப்பொருளுணர்வையும் போதித்தார்.

இவ்விஷயத்துக்கும் பதிபசுபாசம் நித்தியமென்பதற்கும் யாது சம்பந்தம். முரட்டுத்தனமாகச் சூட்டுக்கோல் கொண்டு ஆங்காரத்தோடு வந்த இவர் இது மாட்டுமந்தையன்று, வித்வகோஷ்டியாகும் என் உணராததென்னை. “கல்லாதவரும் நனிநல்லர் கற்றார்முற், சொல்லாதிருக்கப் பெறின்” என்பதை யறியார்போலும்.

மேல், அவர் “பரமேசுரனால் உபதேசம் பெற்ற மணிவாசகப் பெருந்தகை வேறுபாடுடைய எப்பொய்ம்மையாம் பொருளை விவேகஞ் செய்தனர்” என்று முறைத்தார். இவர் காட்டிய செய்யுட்கள் உபதேசம் பெறுதற்கு முன்னிருந்த நிலைமைகளைப் போதிப்பனவாக, அதனை யோசியாமல் உபதேசம் பெற்று விவேகஞ் செய்ததாகக் கூறுவது சாலவியப்புடைத்து! அம்மம்ம! இவரது அறிவுக்கு எதனை யொப்பிடலாம்!! முசலக்கிரமதியினரும் நல்லவர

யிருப்பர்! அந்தோ பாவம், இவர் சும்மாவிராது இந்த வேலையிற் றலையிட்டது மிக்க பரிதாபம்! உபதேசமாதற்குமுன் நிகழ்வது நிலையாமை யுணர்தல். பசுபாச உணர்வு இங்கு சித்திக்க மாட்டாது. நிலையாமையை யுணர்தல் முன்செய்த புண்ணிய வினையினாலாம். அகப்பற்றுப் புறப்பற்று நீங்குதல் மலபரிபாகம். சித்தசுத்தி பெறுதல் இருவினையொப்பு. இந்நிலையிற் சத்திநி பாதம் பிறந்து குருவாயில் காட்டமுண்டாம். அப்பக்குவநிலையை நோக்கி ஞானாசாரியர் எழுந்தருளித் தீக்கை செய்து ஞானத்தை உபதேசிப்பர். அந்த ஞானத்தால் அம்முப்பொருளின் இயல்பு செவ்வனே தோன்றும். அவ்வாறே வாதவூரடிகள் சரிதத்திலும் நிகழ்ந்தமை திருவிளையாடற்புராணம் திருவாதவூரடிகள் புராணங் களைப் படித்து, அல்லது கல்வியறிவுடையார்மாட்டுக் கேட்டு அறி ந்துகொள்ளக் கடவர். அந்தோ! இவர் நூற்பயிற்சியின்றி அபி மானமாத்திரத்தால் எழுந்து தம்மாறி அலக்கணுறுதற்கு யாம் மிக இரங்குகின்றோம்! இவர் குழுவினருள் இவருக்கு இவற்றைத் தெளிவித்துத் திருத்தி யுபகரிக்கவல்ல அறிவாளர் ஒருவருமிலர் போலும்.

இன்னும், ஈண்டு இவர் எடுத்துக் காட்டிய புராணச்செய்யுட் கள் வேதம் பொது நூலென்றும், அதைத் தழுவிய மாயாவாதத் தால் அஞ்ஞானமொழிதலும், வீடு சித்தித்தலு மில்லையாமென வும், ஆகமம் சிறப்புநூலெனவும் அதன் போதத்தால் அஞ்ஞான நீங்கி முத்தி சித்திக்குமெனவும் உரைத்து நின்றமையால், இவ ரது மாயாவாதம் பாறிவீழ்ந்து பாழ்பட்டுப்போயது. அவ்வுரை இவரது மூர்த்தாவிற்கு ஓர் அசநிபாதமாய் முடிந்தது. அதனை யறியாது எடுத்தாண்ட இவர்கதி சக்காயவியறியாது தலையிற்றூங் கிய சலர்தான் கதியாயிற்று. பரிதாபம்! மிக்க பரிதாபம்!!

5. இனி முப்பொருளும் அநாதிசித்தமோ வென்பதனையும் அவ்வாறு சைவநூல்கள் கூறுகின்றனவோ வென்பதனையும் அறிய விரும்புவாராயின், அது காட்டுதும். இவர்தமக்கும் பிரமா ணமென ஒத்துக்கொண்ட திருமந்திரம்:—

"அறிவறி வென்ற அறிவு மனாதி
அறிவுக் கறிவாம் பதியு மனாதி

யறிவினைக் கட்டிய பாச மறுதி
யறிவு பதியிற் பிறப்பறுத் தானே"

"நாமம் பதியுட னற்பசு பாசமு
நேமமோ நித்த நிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமு
நாடிய சைவர்க்கு நந்திய வித்தே."

"பதிபசு பாசம் பயில்வியா நித்தம்
பதிபசு பாசம் பகர்வோர்க் காகப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயிலநில் லாவே"

"படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்
துடைப்பு மறைப்புமுன் னோன்ற வருளுஞ்
சடத்தை யிசைந்த வுருளுஞ் சகலத்
தடைத்த வருளினை வைத்தெனை யாமே."

திருவருட் பயன்.

"ஏகனேக னிருள்கரும மாயை யிரண்
டாகவிவை யாறாதி யில்."

தணிகைப்புராணம்—நந்தியுபதேசம்.

"இறைதனுலின னியம்புவ பதிமுத லெண்ணிற்
கறையெனத் தலைமயக்குவ கழிக சைவத்த
மறுதியாவதி யரியன கிறைவின வலிய
வறுதிசத்தி நித்தியத்தன வைத்துமெய்ப் பொருளே."

"பதியுமப்பதிக் கடிமையாம் பசுவுமப் பசுவின்
முதிருமாணவப் பகையுமம் முழுப்பகை தழிப்பக்
கதியமாயையுங் கருமமு மெனப்படு மவைதா
மதியுமிலார்க்குள் பின்னிரண்டையு மலத்தொடு மொழிவர்."

எனக் கூறுமாற்றா னறிக்கடவர். இவைபோல்வன இன்னும் பலவுள.

6. அவர் மற்றோரிடத்தில் "பதிபசு பாசங்கள் அநாதி நித்தியங்கள் என்றார். பாசம் எங்ஙனம் நித்தியமாம்" என வினவினார். இதனால் பதி அநாதி நித்திய மென்பதிலாவது பசு அநாதி நித்திய மென்பதிலாவது ஆக்ஷேப மொன்றுமில்லை போலும்.

மூன்றும் நித்தமேயென்பதனை மேற்காட்டினுமாயினும் தனித்தனி பசுபாசங்களைப்பற்றியும் பேசுவாம். நித்தம் என்பதன் பொருள் தோற்றநாசம் இல்லாதிருப்ப தென்பதாம்.

பசு நித்தமென்பது, சிவப்பிரகாசம் "எண்ணரிதாய் நித்த மாய்" என்பதனாலும்,

ஆணவமலம் நித்த மென்பது-சிவப்பிரகாசம் "செம்பினுறு களிம்பேய்ந்து நித்தமூலமலமாயறிவு முழுதினையு மறைக்கும்" என்பதனாலும்,

மாயை நித்தமென்பது, சிவஞானசித்தியார் "நித்தமாயரு வாயேக நிலையதா யுலகத்திற்கோர் வித்துமாய்" சிவப்பிரகாசம், "உருவாதி சதுர்விதமா யொன்றொன்றொவ்வா வுண்மையதாய் நித்தமா யொன்றாய்" என்பவற்றாலும் இனிது போதரும்.

7. இனி அவர் பாசத்தினும் ஆணவமலத்தைப்பற்றி எவ்வ ளம் நித்தியமாமென ஆசங்கை செய்திலர். மாயை நித்தியமா குமா எனவுங் கேட்டிலர். வழித்த பாசம் பாசம் என்கின்றார். இவர் பாசம் என்று கூறுவது பிரபஞ்சத்தையென்று தோன்று கின்றது. பிரபஞ்சத்தை நித்தமென்று கூறுவார் ஒருவருமிலர். பிரபஞ்சம் அநித்தியமாம். அது,

"மண்டலில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும்
எண்டரு பூத பேத யோனிக ளியாவு மெல்லாங்
கண்டவிந் திரமா சாலக் கனக்கழு திரதங் காட்டி
யுண்டுபோ லின்றாம் பண்பி னிலையின யசத்து மென்பர்."

எனச் சிவஞான சித்தியாரினுங் கூறப்பட்டது. உண்டுபோ லின் றுதல் நெடுங்கால நிலைபெறுவதுபோலக் காட்டி விரைவிலழிந்து போதல். "இல்லையெனுமாயையி லிட்டனை நீ" எனக் கந்தரனு பூதியிற் கூறியதும் அழிந்துபோவதாய பிரபஞ்சவாழ்வில் இருத் தினை" என்றபடியாம்.

திருவாசகத்தில் "பொய்யாய செல்வம்" என்றதும், தேவா ரத்தில் "பொய்யினுன் மிடைந்த போர்வை" "பொய்ம்மாயமேனி தன்னைப் பொருளெனக் காலம்போக்கி" என்பனவும் நிலையின்றி அழியு நீர்மையினையே குறிக்கும்.

காரணம். பிரபஞ்சம் காரியம். மாயை நித்தம். பிரபஞ்சம் அநித்தம். சிவசந்நிதானத்தில் இப்பிரபஞ்சம் அசத்தாய் முனைந்து நில்லாமையின், அச்சியத்தைப் பொருந்திய ஞானிகள் பிரபஞ்சத்தைக் காணமாட்டார். சத்து அசத்துக்களின் இயல்பைச் சித்தாந்தநூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க்கடவர். அங்ஙனமின்றி வறிதே கரைதல் மரபன்றாம். நில்லாமையுணர்தல் வேறு. பாசம் அசத்தாயொழிதல் வேறு. முன்னது பக்குவநிலையில் நிகழும் நிகழ்ச்சி. பின்னது சிவன் முத்தி முதலிய முத்திநிலைக்கண் நிகழும் நிகழ்ச்சியாம். இவர் அவ்வேறுபாடுணராது இரண்டையும் ஒன்றாகக்கருதி எல்லாப் பாட்டையும் ஒருங்கு எடுத்துப் போட்டுக் குழறுபடையாக்கினார். மாயாவாதிகள் பெரும்பான்மையும் இவ்வாறே செய்வர். கலையறிவில்லாமையே அதற்குக் காரணமாம்.

இனி, சிவனுக்குரிய பிரமத்தன்மையைச் சீவனுக்குச் சொல்வது தகாதென்று தூர்வைபாசகப்படல வசனகர்த்தர் எழுதியதைப்பற்றிப் போதிய நியாயஞ்சொல்லிச் சீவனுக்குப் பிரமத்தன்மையுண்டென்று காட்டாமல், சைவர்களுஞ் சிவனுக்குரிய குணங்கள் யாவும் சீவனுக்குண்டென்று கூறுகிறார்களெனப் பல பாட்டுக்களை எடுத்து எழுதுகிறார்.

மாயாவாதிகள் ஆன்மாவே பிரமமென்கின்றனர். சைவர் சிவனே பிரமமென்கின்றனர். சிவம் அநாதிமலமுத்தபதி. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில் செய்யும் பிரமம். ஆன்மாவோ அநாதிமலபெத்தன். ஐந்தொழிலிற் பட்டு உழலும் பசு. இவ்வேறுபாடுகளுடைய பதியும் பசுவும் ஒத்தவியல்புடையவாதல் அல்லது ஒன்றுதல் எப்படி? முத்திநிலையிலே சிவகுணங்கள் ஆன்மாவுக்கு வருகின்றனவே யென்கிறார். சிவகுணங்களில் அநாதிமுத்தத்தன்மை ஆன்மாவுக்கு எவ்வாறு வரும். அநாதியிற் பெத்தனாயிருந்தவனை அநாதி முத்தனாயிருந்தானென்று சொல்லவியலுமா. முத்தியடைந்தாலும் சிவசாட்குண்ணியங்களை ஆன்மா அடைந்தாலும் ஐந்தொழில் செய்யுமுரிமை ஆன்மாவுக்கில்லை. சிவனுக்கே யுண்டு. சாட்குண்ணிய நிலையைச் சிவன்கொடுக்கிறான். ஆன்மா பெறுகின்றான். சிவன் ஆனந்த சொரூபி. ஆன்மா சிவானந்தத்தை அநுபவிக்கிறான். சிவன்

அறிவிக்கும் சித்து. ஆன்மா அறிவிக்க அறியும் சித்து. இன்னும், அவ்விரு பொருளுக்கும் இயல்பு ஒன்றன்று. அது பற்றியே முத்தியில் ஆன்மா சிவத்தோடு அத்துவிதமாகக் கலந்து சிவானந்த நுகருமென்பர்.

சிவனுக்குரிய குணங்கள் முத்தியில் ஆன்மாவைப்பற்ற ஆன்மா சிவம் போலவே விளங்குமென்பது சிவ சங்கிராந்தவாதம். அது சைவசித்தாந்தமன்று. அவ்வப்பொருளின் குணம் அவ்வப் பொருளிலிருக்குமேயன்றி ஒன்றன் குணம் ஒன்றிற் சங்கிரமிக்க மாட்டாது. ஒருபொருளுக்கு முன்னில்லாத குணம் புதிதாய் வரவு மாட்டாது. ஆறு குணங்களும் சிவனுக்கு இயல்பாயுள்ளவை. அதனால் அச்சிவம் மலபந்தமடையவில்லை. ஆன்மா அக்குணங்களின் இயல்பு முன்னில்லாமையால் மலபந்தமடைய நேர்ந்தது. முத்தியில் அவ் வறுகுணங்களையும் சிவன் கொடுத்து உபகரிக்க அவ்வுபகாரத்தைப் பெற்று மலபந்தமடையாது சிவானந்த மடைந்திருக்கின்றது. உதாரணமாக, கண் ஒன்று, கண்ணுக்கு ஒளியொன்று. ஒளிக்குக் காணுங் குணம் ஒன்று. காணுந் தொழில் ஒன்று இப்படி நான்கு தன்மைகளை இங்கு வைத்து விசாரிப்போம் கண் இருளோடு கூடியபொழுது இருளால் மறைப்புண்டு ஒன்றினையுங் காணவில்லை. ஏன் காணவில்லை. கண் கெட்டதா? இல்லை. கண்ணொளி கெட்டதா? இல்லை. ஒளிக்குக்காணுங் குணங் கெட்டதா? இல்லை. ஆனால் இருளின் உபாதியால் காணுந்தொழில் நிகழவில்லை. பின்பு சூரியோதயமானவுடன் கண்ணினொளி அச்சூரியனது ஒளியோடு கூடச் சூரியனது ஒளி கண்ணுக்கு உபகாரஞ்செய்து எவற்றையுங் காட்டுகின்றது. கண் அச்சூரியவொளியைப் பெற்றுக் காணுகின்றது. அதாவது காணுந்தொழில் நிகழ்கின்றது. இங்கே கண்ணுக்காவது ஒளிக்காவது காணுங்குணத்துக்காவது ஒரு மாற்றமுமின்றி யிருந்து காணுந்தொழில் மாத்திரம் முன் நிகழாமலும் பின் நிகழ்ந்தும் ஒரு மாற்றமுண்டாயது. அவ்வாறே வியாபக நிலையினையும் வியாபக அறிவினையும் உடைய ஆன்மா, தன்னோடு வியாத்தியாயிருந்த ஆணவமலத்தின் சத்தி தனது வியாபக அறிவைத்தடுக்க, அறிவு மறைப்புண்டு அறியாதிருந்தது. [illegible] சிவம் பிரகா

சித்தபொழுது சிவத்தின் முன்னே முன்னது நிற்றலாற்றாது மலவிருள் மழுங்க, ஆன்ம அறிவு சிவப்பிரகாசத்தோடு கூடி அதனை அநுபவித்து ஆனந்தமடைந்தது. சூரியப்பிரகாசத்தோடு கலந்த கண்ணை இருள்மறைக்க இயலாமைபோலச் சிவப்பிரகாசத்திற் கலந்த உயிரை மலம் மறைக்க இயலாது வலியழிந்திருக்கும்.

இந்த உவமானத்தில் கண் எப்படிச் சூரியகிரணத்தைத்தான் சங்கிரமித்துப் பெற்றுச் சூரியனாக அல்லது சூரியகிரணத்தையுடையதாகவில்லையோ, அப்படியே முத்தியினும் ஆன்மா சிவகுணத்தைச் சங்கிரமித்துப் பெற்றுச் சிவமாவதில்லை. சிவனது உபகாரத்தைப்பெற்றுச் சிவானந்தத்தை யநுபவிக்கும். அதுபற்றியே திருவடிநீழல் யடைதல் முத்தி என்று சம்பிரதாயமாகக் கூறுவர். திருவடியென்றது சிவசத்தியை. சத்தியாவது சிவகுணம். அதுவே ஞானமெனவும், அருளெனவும் சொல்லப்படும். சிவனது குணமாகிய ஞானத்தைத் திருவடியென்று கூறுவது சைவசித்தாந்த சம்பிரதாய வழக்காம். இவ்வுண்மைகளைத் திருமூலநாயனார் திருமந்திரத்தில்,

"காணும் நிலையு மறியார் கலதிகள்
காலந்தச் சத்தி யருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்ட வீடாகுமே."

"சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையு மெந்தை திருவடிக் கீழது
எந்தையு மென்னை யறிகிலா னாகில்
எந்தையை யானு மறியகி லேனே."

"தாள்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றயக்கறப்
பால்கொண்ட வென்னைப் பரன்கொள்ளச் சாடினன்
மேல்கொண்டென் செம்மை விளம்ப வொண்ணாதே."

"முத்தியி லத்தன் முழுத்த வருள்பெற்று"
"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே."

### தணிகைப் புராணம்-சிவபோகம்.

"ஒன்றுறு மதனு லொருபொருளாகா திரண்டினால் வேறுமா காது
தோன்றுறு நிலையே நிலைபதாய்ச்சேர்ந்து தன்னையுந் தன்னுரு வையுந்
தன்றுமா லைத்தி னழுந்தியாங்கறிவா யறிவினு ளழுந்தியங் கறிவு
பொன்றியும் பொன்று தலசமாயின்பப் புணரிவாய் மிப்பது போகம்."

### சிவஞான சித்தியார்-சிவப்பேறு.

"மாயமெலா நீங்கியரன் மலரடிக்கீ ழிருப்பன்
மாறாத சிவானுபவ மருவிக் கொண்டே."

"அருக்கன் புகுத விருள்போம் அடியிற்பொருந்த மலம்போமே."

"உயிர்க்குந் தங்கவரன் ஞானக்கண் கொடுத்தருளினாலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன்காணே."

"அரனுறுமலம் போக்கியம்பொனடிக்கீழ் வைப்பன்"

"உம்பர்பிரா னுற்பத்தியாதிகளுக்குரிய னுயிர்தானுஞ்
சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே."

"சிவனருட்சித்திவனருளைச் சேருஞ் சித்தவன்றன்
பலன்சேர் புத்தி முத்தி பண்ணுஞ் சித்தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப்படுஞ் சித்து மிவன்று,
னவன்றனையறியுஞ் சித்தாதலினு லிரண்டு
மிளைத்தாலு மொன்றாகாதசியமா யிருக்கும்."

"அப்பணைந்த வுப்பேபோல் விரும்பி அமலன் அணைந்து"

(இது என்குணங்களை ஆன்மாவிற் பதித்துச் சிவசமமாக்கு வதற்குவமை.)

"கரும்பைத் தேனைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியை யொத்திருப்பனைத்த முத்தியினிற் கலந்தே."

(இது சிவம் ஆனந்தசொரூபமாய் நிற்றல்.)

### திருவிளையாடற் புராணம்.

"மாசறு மணிபோற் பன்னுள் வாசக மாலை சாத்திப்
பூசனை செய்து பன்னாட் புண்ணிய மன்று ளாடு
மீசன தடிக்கீ ழெய்தி யிறிலா வறிவா னந்த
தேசொடு கலந்து நின்றார் சிவனருள் விளக்க வந்தார்."

(இது மாணிக்கவாசக சுவாமிகளடைந்த முத்தி.)

என வரும் பிரமாணங்களால் அறியக்கடவர்.

9. இனி, வேதம் முதனூல் என்றும் ஆகமம் வழிநூலென்றும், வேதம் மூலமென்றும் ஆகமம் அதனுரையென்றும் சைவசித்தாந்திகள் கொள்ளுவரென்றார். அவ்வாறு கூறுவோர் யாருமிலர். வேதசிவாகம மிரண்டும் முதனூல்களேயாம். அதனை,

சிவஞானசித்தியார்.

"அருமறை யாகம முதனூல்"

"வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க
ளாதிநூ லனாதியமலன் றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினா லுலகர்க்குஞ் சத்திநி பாதர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள் வேதாந்த
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்."

என்பவற்றானுணர்க.

வேதம் மூலமும் ஆகமம் உரையுமாமென்று கொள்பவருமிலர். "பொருள் பலபடத் தோன்றுஞ் சூத்திரமும், அதனை அவ்வாறாக வொட்டாது தெளித்துரைக்கும் பாடியமும்போல முறையே வேதமும், சிவாகமமும் செய்யப்பட்டன" என்பர் பெரியோர். இவர் போல என உவமையாகக் கூறுவதை யோர்ந்திலர்.

10. ஆனந்த நடராச வள்ளலார் பெற்றான் சாம்பானுக்குத் திருமுகமளித்தபொழுது எவ்வடிவமாகத் தோன்றினாரென்கின்றார். சுந்தரமூர்த்தி நாயனாருக்கு எவ்வாறு தோன்றி வல்வழக்கிட்டார்; மாணிக்கவாசக சுவாமிகளுக்கு எவ்வாறு தோன்றி ஞானோபதேசஞ் செய்தார்; மற்றை நாயன்மார்களுக்கு அவ்வப்பொழுது தோன்றியது எவ்வாறு; அவ்வாறே பெற்றான் சாம்பானுக்கும் பிரசன்னமாயினரென்று உணரக்கடவர். அதுபற்றி இன்னும் சில குழறினர். அவை பயனிலவாதலின் நோக்காது ஒதுக்கினோம்.

11. இனி, "உயிர்நீங்கிய உடம்பைச் சமாதி வைத்தலும், ஆலயஞ் செய்வித்தலும், பூசையாதிகள் நடத்திவைத்தலும் அநியாயமென்று" கூறினாரென்கின்றார். அது செய்யலா மென்பதற்குத் திருமந்திரத்தில்,

"ஆதன மீதி லாசன லிங்கம்
போது மிரண்டினி லொன்றைத் தாபித்து
மேதரு சந்தி மேவுத்தரம் பூர்வம்
காதலற் சோடசங் கணுபசாரமே."

என ஞானி பரிபூரண மடைந்தகாலத்து அவரது திருமேனிக்குச் செய்யுஞ் சமாதிக்கிரியையை விதித்த பிரமாணத்தை எடுத்துக் காட்டினார். திருமூலர் ஞானியென்றது சிவஞானியை. அது,

திருமந்திரம்.

"ஞானத்தி னற்பத கண்ணுஞ் சிவஞானி
தானத்தால் வைத்த தனியால யத்தனு
மோனத்த னதலின் முத்தனுஞ் சித்தனு
மேனைத் தவசி யிவனென லாகுமே."

என்பதனால் விளங்கும். அங்ஙனமாக, உண்மையாகிய சிவஞானிக்குச் சொல்லப்பட்ட சமாதியைச் சிவஞானியல்லாதார்க்கும் இக்காலத்துச் செய்கின்றனர். வேடம் பூண்டதனால் ஒருவர் ஞானியாகமாட்டார். அந்தப் பொய்வேடதாரிகளை,

"ஆடம்ப ரங்கொண் டடிசிலுண் பான்பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகா
ளாடியும் பாடியு மழுது மரற்றியுந்
தேடியுங் காணீர் சிவனவன் றாள்களே."

"ஞானமி லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
யீனம தேசெய் திரந்துண் டிருப்பினு
மான நலங்கெடு மப்புவி யாதலா
லீனவர் வேடங் கழிப்பித்த லின்பமே."

"இழிகுலத் தோர்வேடம் பூண்பர் மேலெய்த
வழிகுலத் தோர்வேடம் பூண்பர் தேவாகப்
பழிகுலத் தாகிய பாழ்சண்ட ரானார்
கழிகுலத் தோர்கள் களையப்பட் டோரே."

"பொய்த்தவஞ் செய்வார் புகுவார் நரகத்து"

"பொய்வேடம் பூண்பர் பொசித்தற் பயனாக"

என்று திருமூலநாயனாரே இகழ்கின்றார். இக்காலத்துச் சிவஞானிகள் அகப்படுதல் அரிதாம். பொய்வேடதாரிகளே மிகுந்துவிட்டனர். இந்த வயிற்றுச் சோற்று வேடதாரிகளெல்லாம் சிவஞா

விளைவரா? அவர்களது உயிர்நீங்கிய உடலைச் சமாதிவைத்து ஆலயங்கட்டி வழிபடலாமா? அன்றியும் இவர்குழுவினர் மாயாவாதம் பேசுபவர். இந்த மாயாவாத ஞானிகள் சிவஞானிகளாகார். மலபரிபாகம் இருவினையொப்பு சத்திநிபாதம் எய்திக் குருவருளாகிய சிவதீக்கை பெற்றுச் சரியை கிரியை யோகம் ஞானம் உடையவராய் விளங்குபவரே சிவஞானிகள். அவருக்காக காயனர் சொன்ன சமாதிக் கிரியைக்கும் மாயாவாதிகளுக்கும் என்ன சம்பந்தம்.

12. இவர்கள் தங்களுக்குக் குருவென்று சொல்வது சங்கராசாரியரை. அந்தச் சங்கராசாரிய மடத்தார் பிராமணர். அவர்கள் பிராமணரொழிந்த மற்றை வருணத்தாருக்கு வேதமில்லை, ஞானமில்லை, உபதேசமில்லை, பிரமசரியம் கிரகஸ்தம் வானப்பிரஸ்தம் சந்நியாசமாகிய ஆச்சிரமங்களில்லை, மோக்ஷமில்லை, இறந்தபின் சந்நியாசிகளுக்குச் செய்யும் எச்செயலும் மற்றை வருணத்தார்க்கில்லை. எல்லாம் பிராமணர்க்கே யுரியன என்பவர். ஆதலால், இவர்களைச் சீடராக அவர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். அன்றியும், இக்காலத்துச் சிலர், மேலெழுந்தவாறு ஒரு சாத்திரப் பிரமாணமும் சமயப் பிரமாணமுமின்றித் தாந் தாம நினைந்தவாறே ஒரு சம்ஸ்காரமு மின்றிக், கல்லாடைபூண்டு முண்டிதமிட்டு நீறு பூசிச் சந்நியாசிகளாகிவிடுகின்றனர். இப்படியாதல் எந்த வேத விதி. எந்த ஸ்மிருதி யநுசாரம்.

வைதிகமென்றால் வேதமுறைப்படி நடத்தல் வேண்டும். ஸ்மார்த்தமானால் ஸ்மிருதிவழி யொழுகல் வேண்டும். வைணவமானால் பாஞ்சராத்திரப்படி நடத்தல் வேண்டும். சைவமானால் சிவாகம விதிப்படி நடத்தல் வேண்டும். எல்லாரும் அவரவர் விதிப்படி நடக்கின்றனர். இக்காலத்து வேதாந்திகளெனப் புறப்பட்டாரிற் சிலர் ஒன்றிலேனும் அமைந்தவராகக் காணப்படவில்லை. வியாசர் இயற்றிய பிரமசூத்திரம் வேதத்துள்ள கர்மகாண்ட விதிப்படி நடந்து பரிபாகமடைந்தவனுக்கு அதன்மேல் இந்த ஞானவிசாரம் உரியதாமென்று அதிகாரியை நிர்ணயம் பண்ணுகின்றது. இவர்கள் அவ்விதியை உல்லங்கனஞ்செய்து எடுத்தவுடனே வேதாந்திகளாகிவிடுகின்றனர். பிராமணர், சைவர், விதிக்கப்பட்ட

முறைப்படி சந்நியாசம் பெறுகின்றனர். இவர்கள் அப்படிப்பெறுகின்றார்களா. சந்நியாசிகளுக்கு விதித்த விதிப்படி நித்தியகர்மங்கள் செய்கின்றார்களா. பெற்றதுமில்லை. அநுட்டித்ததுமில்லை. பயனும் அப்படியேயாமென்று சொன்னால் அது தூஷணமாகுமா? இவர்க்கும் திருமூலர் சொல்லிய சைவசமாதிக் கிரியைக்கும் என்ன சம்பந்தம். சமாதிக் கிரியை எந்நூற்படி செய்வது. சிவலிங்கந் தாபிக்கும் விதியெது. பூசித்துச் சோடசோபசாரஞ் செய்தற்கு மந்திரம் கிரியை பாவனை வேண்டுமே. எந்த நூலின்படி செய்வது. சைவர் ஆகமவிதிப்படி செய்வர். இவருக்கு அது கூடுமா? ஆகமவிதிப்படி தீக்ஷை அநுஷ்டானம் பூசை யோகம் ஞானம் இருந்தாலன்றோ சமாதிக்கிரியை ஆகமவிதிப்படி செய்யத்தகும்.

வைதிகத்தில் அல்லது இவரது மாயாவாத நூல்களில் இவை விதிக்கப்பட்டிருக்கின்றனவா. அவ்விதிகளின் வண்ணம் பற்றிச் செய்கின்றனரா. பிரஸ்தாபம் வரும்பொழுது உண்மையைப்பேசுதல் குற்றமாகமாட்டாது. இதைக்கண்டு விடைசொல்லித் தப்பமுடியாமல் வாயில் வந்தவாறு பேசி எழுதித் தூஷணைகளையே அள்ளி யெறிதல், இழிமொழி பேசுதல் என்பன நல்லோர் செயலாக மாட்டா. உண்மையை நினைந்து ஏதேனுமொரு சமய சாஸ்திர வரம்பில் அமைந்துநின்று பயன்பெற முயலல் வேண்டும்.

13. இனி, நாயனார் சிவஞானியைச் சமாதிவைத்து அரசையேனும் சிவலிங்கத்தையேனும் வைத்தல் வேண்டுமென்றனரேயன்றி, நந்தி பலிபீடம் பரிவாரம் துஜஸ்தம்பம் தூபி பிராகாரம் கர்ப்பக்கிரகம் அர்த்தமண்டபம் மகாமண்டபம் ஸ்நபன மண்டபம் தம்பமண்டபம் நிருத்த மண்டபம் கோபுரம் முதலியவை யெல்லாம் இயற்றி ஆலயமாகக் கட்டும்படி சொல்லியிருக்கின்றனரா? சிவலிங்கமென்றது அவ்வியக்தலிங்கமா? வியக்தாவ்வியக்தலிங்கமா? வியக்தலிங்கமா? திருவாடுதுறையிலே திருமூலநாயனாரது சமாதியிலே வியக்தலிங்கம் வைக்கப்பட்டிருக்கிறது. மெய்கண்டதேவர், உமாபதி சிவாசாரியார், திருமாளிகைத் தேவர், நமச்சிவாய மூர்த்திகள் சமாதிகளிலெல்லாம் வியக்தலிங்கங்களே வைக்கப்பட்டிருக்கின்றன. இவை யெல்லாம் சைவ விதிப்படி செய்யப்பட்ட சமாதிகள்.

மாயாவாதிகள் இம்முறை பற்றித்தானே செய்கின்றனர்? திருமூலர் சமாதியிலேயே வியக்தலிங்கம் ஸ்தாபிக்கப் பெற்றிருக்குமானால் நாம் செய்யவேண்டுவது எப்படி? அவர் விதித்தது எந்தலிங்கத்தை? அறிவுடையோர் இதனை யோசிக்கக்கடவர். இதுவே இப்படியிருக்க, மாயாவாதிகள் தமக்கு ஒருவகையினுஞ் சம்பந்தப்படாத ஆலயங்களை உயிர் நீங்கிய உடம்புக்குக் கட்டுதல் எவ்வாறு பொருந்தும்? உள்ளவாறே சமாதி யுற்றவர்க்கன்றி இறந்தவருக்கும் சமாதி விதிக்கப்பட்டிருக்கிறதா. சமாதியுற்றவர்க்குச் சாமதியா? காவி கட்டினவர்க்கெல்லாஞ் சமாதியா?

மாயாவாதிகள் சங்கரமதத்தவர் செய்யுஞ் சமாதி முறையை அநுசரிக்காததென்னை? அநுட்டிப்பது சங்கரமதம்; இறந்தபின் செய்வது சைவ முறையோ. இவர் சைவ முறைப்படியேனுஞ் செய்கின்றனரா. ஒரு கிரியையும் பிரதிஷ்டையுமில்லாமல் வெறும சிலையினாலாய இலிங்கவடிவை வைத்தால் அது சிவலிங்கப் பிரதிஷ்டையாகிவிடுமோ? இன்னும், கோவிலூரிலே ஆண்டவர் என்பவருக்குச் சிவலிங்கமும், துறவு சுவாமிகளென்பவருக்கு நந்தியும, சிதம்பரய்யா என்பவருக்குப் பலிபீடமும் வைக்கப்பட்டிருக்கின்றனவே. இப்படி மூன்றினும் மூன்றுவிதமாய் வைத்ததற்கு நியாயமென்னை? விதியென்னை? இனித்துஜஸ்தம்பம் ஒன்றுதான் குறைபோலும்! அதற்குயாரைப் பார்த்திருக்கிறார்களோ! திருமூலநாயனர் "அரசசிவலிங்கம்" என்றனரே யன்றி "நந்தி பலிபீடம்" என்று சொல்லவில்லையே "அரசசிவலிங்கம் நந்தி பலிபீடம்" என்று இவர் புதிதாய் ஒரு பாட்டுப் பாடுவாரோ!

திருமூல நாயனர், பதி பசு பாசவேறின்மை.

"ஆய பதிதா னருட்சிவ லிங்கமா
மாய பசுவு மடலே றெனநிற்கு
மாய பலிபீட மாகுநற் பாசமா
மாய வரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே."

எனச் சிவலிங்கத்தைப் பதியென்றும், நந்தியைப் பசு வென்றும், பலி பீடத்தைப் பாசமென்றும் கூறியிருக்கிறார். இவ்வாறே காரணாகமம் மகோற்சவ விதிப்படலத்திலும், பதஞ்சலி முனிவர் தெய்வாலய சம்பந்தமாய்ச் செய்த சூத்திரத்திலுஞ் சொல்லப்பட்

டிருக்கிறது. திருமந்திரமும் ஆகமமும் பதஞ்சலி சூத்திரமும் இவர்களுக்குப் பிரமாணமாமன்றே. அம்முறைப்படி பார்க்கின், ஆண்டவர் பதியா? துறவுசுவாமிகள்பசுவா? சிதம்பரய்யா பாசமா? இவர்கள் மூவரும் பதி பசு பாசமாவதற்கு நியாயமென்னை? அல்லது, இவர்களை இப்படியாக்குவதற்கு விதி யென்னை? இவை யொன்றையுங் கருதவில்லை, உத்தேசமாய் மூன்றையும் வைத்தார்களென்னில், அதில் யாதொரு கேள்வியுமில்லை. என்னை? இவர்கள் செய்வன வெல்லாம் பயனில்லாதனவே யாகலினென்க. ஏதேனுமொரு மதம் பற்றி, அல்லது, ஒரு நூன்முறைபற்றி, ஒரு விதிபற்றிச் செய்தாலன்றோ குற்றமுங் குணமும் பார்க்கலாம். அதுவுமில்லை, இதுவுமில்லை யென்பதே விடையாம். இவர் கூறிய சமாதியினழகு இப்படியாயிற்று! அம்மூவர்க்கும் பின் வந்தோருக்கு அவை தாமும் இல்லை. அது என்ன உத்தேசமோ. எதைச் சரி யென்போம்! எதைப்பிழையென்போம்! காசிகானந்தருக்கு வாய்ப்பேச்சுமாத்திரம் வெகு ஆடம்பரமாயிருக்கிறது. காரியத்தில் ஒன்றையுங்காணோம்! பதி பசு பாசம் நித்த மன்றென்போர் ஈற்றில் பதி பசு பாசம் மூன்றும் நித்தமாமெனச் சமாதிநிலையிற் சாதித்து விட்டனரே! நானு மறியேன் அவளும் பொய்சொல்லாள் என்றபடி நடந்து விட்டது போலும்!

14. மேல் அவர் சிவலிங்கம் வைத்துப் பிரதிஷ்டைசெய்யப் பெற்ற ஆலயங்களிலும் தம் மாயாவாதிகள் உடல் வைத்த சமாதிகள் உயர்வுடையனவாமென்றார். ஆகமங்களையும் அதன் கிரியைகளையும் சிவஞானத்தையும் நிந்திக்கின்ற இவரன்றோ, சிவனையும் சிவலிங்கத்தையும் சிவாலயத்தையும் இழிவுபடுத்திப்பேசுவது ஒரு புதுமையோ? ஒரு மதத்திலுங் கட்டுப்படாத இவர்கள் யாதுதான் செய்யமாட்டார்கள்.

15. பரமேசுவரன் ஞானிகளது பாததூளி கிடைக்க வேண்டிப் பின்னே திரிவனென்றும், மகேசுரன் ஞானிக்குச் சமமல்லவென்றும், ஞானிக்குப் பரமேசுரன் மகேசுவரன் சதாசிவன் முதலியோர் சமமாகாமல் அவரது ஏவற் பணிக்குக்காத்திருப்பர் என்றும் கரைகின்றார். இது மிக்க சிவ தூஷணமாம். ஞானியென்பார் பரசிவனது திருவருள் லேசத்தைப் பெற்று அவரது பாததாமரை

களையே சிந்தித்துத் துதித்து வணங்கி அப்பாததாமரைகளினின்று பெருக்கெடுத்தோடும் ஆனந்தமாகிய தேனையுண்டு களித்துமெய் யன்போடு திரிவர்.

மாணிக்கவாசக சுவாமிகள்.

"நெக்குநெக் குள்ளுருகியுருகி நின்றுமிருந்துங் கிடந்துமெழுந்து
நக்குமழுதுந் தொழுதும்வாழ்த்தி நானாவிதத்தாற் கூத்துநவிற்றிச்
செக்கர்போலுந் திருமேனி திகழநோக்கிச் சிலிர்சிலிர்த்துப்
புக்குநிற்ப தென்றுகொல்லோவென் பொல்லாமணியைப் புணர்ந்தே."

"அம்மையே யப்பா வொப்பிலாமணியே
யன்பினில்விளைந்த வாரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச்சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன்றனக்குச்
செம்மையேயாய சிவபதமளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவ தினியே."

"பானினைந் தூட்டுந் தாயினுஞ்சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய
வூனினையுருக்கி யுள்ளொளிபெருக்கி
யுலப்பிலா வானந்தமாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே."

"சீலமின்றி நோன்பின்றிச் செறிவேயின்றி யறிவின்றித்
தோலின்பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்றுவிழுந்து கிடப்பேனை
மாலுங்காட்டி வழிகாட்டி வாராவுலக நெறியேறக்
கோலங்காட்டி யாண்டானைக் கொடியேனென்றோ கூவுவதே."

திருவிசைப்பா.

"என்னையுன்பாத பங்கயம்பணிவித்
தென்பெலா முருகநீயெளிவந்
தன்னையேயென்பால் வைத்தெங்குமெஞ்ஞான்று
மொழிவற நிறைந்தவொண்சுடரே

முன்னை யென்பாவ முழுவது மகல
முளைத்தெ ழுந்தமர்த் தெனக்கே
கன்னலும் பாலுந் தேனுமா யமுதக்
கனியுமா யினியையா யினையே."

பட்டினத்தடிகள்.

"பூதமுங்கரணம் பொறிகளும் புலனும் பொருந்திய குணங்களோர் மூன்றும், நாதமுங்கடந்த வெளியிலே நீயு நானுமாய் நிற்குநாளெந்நாளோ, வாதமுஞ்சமய பேதமுங்கடந்த மனோலயவின்பசாகரனை, ஏதுமொன் றறியேன் யாதுநின் செயலே யிறைவனே யேகநாயகனே"

இப்படியே அடியாரெல்லாம் அழுதாற்றொழுதும் ஆடியும் பாடியும் விழிநீர்பெருக்கி யழிவிடைப்பட்ட மெழுகேபோல் அகங்குழைந்துருகி அன்புசெய்து ஆனந்தமாகியிருப்பாராக, இப்பேதைநீசர் தம் மகம்பிரமமாயாவாத வேதாந்தத்துடிப்பினால், எள்ளளவேனும் அன்பின்றி அச்சமுமன்றி அபாரமசிவனை இழித்துக் கூறினர். அந்தோ, இவ்வதிபாதக சிவநிந்தைக்கு மாற்றுமருந்தும் உண்டாங்கொல்! இச்சிவநிந்தையைக் கேட்கினும் அதிபாதகமாமே! பாவமே! இவரும் திருநீறு புனைந்து சைவப்போர்வையில் வைகிச் சிவாலயங் கட்டுகின்றோமென்றும் சிவாலயங்களை வழிபடுகின்றோமென்றும் உலவுகின்றனரே. அது.

"வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்து மேய்ந்தற்று"

என்னுங்குறட்படி போலும்.

இவர் "நாமே பிரமம், பிரகிருதி பொய், அப்பிரகிருதியின் சத்துவகுண மாயா பிரதிபிம்பனுயுள்ளவன் ஈசுவரன். பிரமமாகிய நம்மில் அவ்வீசுவரன் தாழ்ந்தவன். பிரமமாகிய நம்மைத்தவிர ஈசுரனும் சீவர்களும் உலகமுமாகிய எல்லாம் பொய். வெறும்பொய்" என்பவராதலின், அப்பரமேசுரனிடத்தே அன்புண்டாக இடமில்லை. அதுபற்றியே இப்படித்துணிந்துரைக்க நேர்ந்தது. கடவுளையே இல்லையென்போர் எவ்வாறு கொள்ளினுமென், எவ்வாறு கூறினுமென்.

16. அவர் அம்மட்டோடு நில்லாது "இப்பொழுது பிரசித்தியாயுள்ள சிவாலயங்களெல்லாம் பிரம ஞானிகளாய மகான்களது சமாதிகளே" என்றும் உரைத்தார். முன்னே பிரம ஞானிகளுக்குச் சமாதி கட்டவேண்டுமென்றார். பின்பு சிவாலய மெல்லாஞ் சமாதியென்கிறார். அப்படியானால் மனிதருக்கே ஆலயமன்றிப் பரமசிவனுக்கு ஆலயமில்லை யென்று ஆகின்றது.

யசுர்வேதத்திலே போதாயன சாகையிலே சிவலிங்கார்ச்சனம் விதிக்கப்பட்டிருக்கிறது. இவர் கொள்கைப்படி அதுவும் மனித சமாதிலிங்கத்தையே போலும். பரமசிவன் அருளிய காமிக முதலிய ஆகமங்கள் ஆன்மார்த்தமாகச் சிவலிங்கார்ச்சனஞ் செய்யுமாறு விதிக்கின்றன. அவை யெல்லாம் சமாதிலிங்கங்களைத் தானோ பூசிக்குமாறு விதித்தன. எட்டுவித சுயம்புலிங்கங்களுக்கு ஆலயம் அமைத்தும், புதிதாகச் சிவலிங்கப்பிரஷ்டை செய்து ஆலயமமைத்தும் பூசிக்குமாறு விதித்திருக்கின்றன. அவை யெல்லாம் சமாதிலிங்கங்களைத்தான் விதித்தனவோ. அதுவும இந்த மாயாவாதிகளுடைய சமாதிகளைத்தானோ. கெட்டி! கெட்டி! இதுவரையில் மற்றவரெல்லாம் பிறந்திறந்துழலுந் தம்மைப் பிரமமென்றனர். இவர் கோவிற்சிவலிங்கமெல்லாம் அதிலும் பிரசித்தமான பெரிய தலங்களிலுள்ளவைகளெல்லாம் தம்மவராகிய மாயாவாத மனிதப்பிரமங்களினது சமாதிகளாமென்கின்றார். இவரது சாமர்த்தியத்தை என்னென்று சொல்லலாம். சிவாகமங்களை இகழ்ந்து திரிகின்ற மாயாவாதப் பிரமங்கள் சிவாகம நிலையமாயுள்ள ஆலயங்களையும் மாயாவாதக் கோவிற்சமாதிகளாக்கிவிட நினைப்பது நல்ல சூழ்ச்சியேயாம். இதன்பொருட்டுத்தான் ஆலயப்பணியும் ஆலய பரிபாலனமும் செய்கின்றோமென்று முயல்கின்றனர்போலும். மெல்லமெல்ல ஆலயங்களைத் தம்வசமாக்கிக்கொண்டு எல்லாவற்றையும் சமாதிகளாக்கி அவ்வழியினாலும் மாயாவாதத்தைப் பரப்பிவிடலாமென்றும், தம்மவர்க்கே ஆக்கந் தேடிக்கொள்ளலாமென்றும் யோசனை செய்தனர்போலும்.

17. இப்படிச் சொல்லிய அவர் தம் சொல்லுக்கு வேதத்திலாவது, வேதாந்தத்திலாவது, ஆகமங்களிலாவது ஸ்மிருதிபுராண இதிகாசமுதலிய பிரமாண நூல்களிலாவது பிரமாணங்காட்டாமல்,

யாதொரு வழியும் இல்லாமையாற்போலும் சித்தர் நூலிலே நடுவி லெடுத்து "ஆமப்பா" "கேளப்பா" என்று தொடங்கும் சில பாட்டுக்களைக் காட்டுவாராயினர். சித்தர் நூல் எவ்வளவிற் பிரமாணமா மென்பது யாவர்க்குந் தெரியும். இக்காலத்திலும் குஜிலிக்கடைச் சித்தர்கள் அநேக நூல்களைப்பாடி வெளியிடுகின்றனர். அதிலும் இது போகர் பாடிய நூலாம்.

அப்பாட்டில் "ஆமப்பா அருணகிரிமலையிற் கேளு ஈர்ந்து பேர்கள் சித்தர் அதனில் வாழ்வார்." "கழுக்குன்றி லொன்பது பேர் கூட்டம்" "நால்மலையி லொருநூறுபேர் சித்தர்" என்று சொல்லப்பட்டிருக்கிறதேயன்றி, அருணகிரியில் அண்ணாமலைநாதர் கோவில் சித்தர்சமாதியென்று சொல்லபடவில்லை. "ஆமென்ற சிதம்பரமே திருமூலராச்சு" "திருக்கூடல் மூலராச்சே" "வாமென்ற மலைநாடு நெடுங்குன்றூரில் மகத்தான திருமூலர் வாசமாச்சு" "நாமென்ற மேலச்சிதம்பரத்தில் நாடியது திருமூலர் நாட்டந்தானே." என்றிருக்கின்றன. திருமூலர்சமாதி திருவாவடுதுறையிலே சிவாலயத்து லிங்கத்துக்கு வேறாகவிருத்தல் பிரத்தியக்ஷமாம். அப்படியிருக்க இவர் திருமூலர்சமாதி சிதம்பரமென்கின்றார். நெடுங்குன்றூர் என்கின்றார். மேலச்சிதம்பர மென்கின்றார். இந்நான்கனுள் எது திருமூலர்சமாதி? வாசம் வாசம் என்பதையெல்லாம் இவர் சமாதி யென்கின்றார்.

சிதம்பரம் திருமூலர் சமாதி யென்றனரே. திருமூலர் அச்சிதம்பரத்தைத் தாம அருளிய திருமந்திரத்திலே பலவாறு துதித்திருக்கின்றார். அதுவருமாறு:—

"எங்குஞ்சிதம்பரமெங் குந்திருநட்டம்" "பொற்றில்லைக் கூத்தனை" "அடியார் பொன்னம்பலக்கூத்தாடல் கண்டாரே" "செம்பொற்றிருமன்றுட் சேவகக்கூத்தனை" "வண்டில்லைக்கூத்தனை" "செம்மை சிறந்த திருவம்பலக்கூத்து"

"மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூடு மிவ்வானி லிலங்கைக் குறியுறுஞ்
சாருந் திலைவனத் தண்மா மலயத்
தூடேறுஞ் சுழுனை யிவைசிவ பூமியே"

"திருவம்பலத்தானே, வேறின்றியண்ணல் விளங்கி நின்றானே"
"அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்"

இவ்வாறு திருமூலர் காலத்துக்கு எத்தனையோ கற்பங்களுக்கு முன்னரே விளங்குவதாய், அதாவது சிருட்டியிலேயே சுயம்புவாயமைந்த சிதம்பரத்தைத், திருமூலரும் வழிபட்டுத் தோத்திரஞ் செய்வாராக, இந்த மாயாவாதியார் பெரும் புரட்டுப் புரட்டிச் சிதம்பரம் திருமூலர் சமாதி யென்கின்றார்.

அருணகிரி:—அயனுமரியுந்தேடி அடிமுடிகாணாதயர்ந்த சோதி லிங்கமாகும். அதனையுஞ் சித்தர் சமாதி யென்கின்றார். திருவாரூர் பிருதிவிலிங்கம். திருவானைக்கா அப்புலிங்கம். திருவண்ணாமலை தேயுலிங்கம். திருக்காளத்தி வாயுலிங்கம். சிதம்பரம் ஆகாசலிங்கம். இவை யெல்லாம் ஒருவராற் பிரதிட்டை செய்யப் பெற்றனவல்ல. பரமசிவனே உயிர்கள் உய்யும் பொருட்டு அவ்வத்தலமாயும், அங்குள்ள மூர்த்திகளாயும், அங்குள்ள தீர்த்தங்களாயும் அமைந்திருந்தனரென்று நூல்கள் கூறுகின்றன. அங்ஙனமாக, அவை யெல்லாஞ் சித்தர்கள் சமாதி யென்று இம்மாயவாதியார் சொன்னால், இவரைப் பித்தம்பிடித்தவரென்பரேயன்றி இவருரையை ஏற்றுக்கொள்வார்களா.

சிதம்பரம்:—தகரோபாஸ்தி தருந்தலம். தகரவித்தை சாந்தோக்கியம் தைத்திரியம் முதலிய சுருதிகளிலே விதிக்கப்பட்டது. கைவல்யோபநிடதத்திலே தகரோபாசனை செய்யுமுறை சொல்லப்பட்டது. பரமசிவன் உலகத்திலே தகரோபாஸ்திதருந் தலமாகத் தில்லை வனத்தில் இச்சிதம்பரத்தை அமைத்தார். சிருட்டிதொட்டு அத்தலத்திலே தகரவித்தையாகிய ஆனந்ததாண்டவம் அநவரதமும் நடக்கின்றது. பதஞ்சலி வியாக்கிரபாதர் அருந்தவஞ்செய்து அந்த நடனத்தைத் தரிசித்தனர். பதஞ்சலிமுனிவர் மகுடமுதலிய ஆகமங்களிலே சிதம்பர பூசாவிதியை யறிந்து தாம்பூசித்து, அம்முறையைப் பதஞ்சலி சூத்திரமென அருளிச்செய்தார். அவ்வாகம முறைப்படி தில்லைவாழந்தணர் பூசித்து வருகின்றனர். இவர் அவ்வுண்மைகளை யோராது சிதம்பரம் திருமூலர் சமாதியா யென்றது மாயாவாத மயக்கமாம்.

திருக்கழுக்குன்றம்:—இதில் வேதங்கள் மலையுருவாயமைய வேதத்துள்ளுறை பொருளாகிய பரமசிவன் சுயம்புலிங்கவடிவா யெழுந்தருளினர். திருமால், பசு, வராகம், கோடி யுருத்திரர், சண்டன் பிரசண்டனாகிய கழுகரசர், சம்பாதி சடாயுவாகிய கழுக ரசர் பூசித்து அருள் பெற்றனர். இதனை மூன்பது சித்தர் சமாதி யென்றார்.

காஞ்சிபுரம்:—இது உமாதேவியார் கம்பையாற்றங்கரையில் மணலாற் சிவலிங்கம் பாவித்துப் பூசித்ததலம். அம்மையார் பூசி த்த லிங்கமே இங்குள்ளது. இதனைக் காலாங்கி நாதர் சமாதி யென்றார்.

கும்பகோணம்:—இது சிருட்டியாரம்பத்தில் பிரமனமைத்த கும்பத்திருந்த அமுதத்தால் ஒரு சிவலிங்கமியற்றி, உருத்திர மூர் த்தி வேடவடிவோடிருந்து பூசித்ததலம் இதனைக்கும்பமுனிசமாதி யென்றார்.

மாயூரம்:—இது உமாதேவியார் மயில் வடிவங்கொண்டு சிவலிங்கத்தாபித்துப பூசித்து வழிபட்டு அருள்பெற்ற தலம். இதனை மச்சமுனி சமாதியென்றார்.

சீகாழி:—பிரமா பூசித்த சிவலிங்கம் இங்குள்ளது. விஷ்ணு, இந்திரனாதியோரும் பூசித்து அருள் பெற்றனர். நரசிம்மத்தின் உக்கிர நிலையையடக்கிய சரபேசுரர் பின்பு சட்டைநாத வடிவாயிரு ந்து அநுக்கிரகித்த மூர்த்தமும் இங்குளது. இதனைச் சட்டமுனி சமாதி யென்றனர்.

நாகபட்டினம்:—புண்டரீக மகாரிஷி பூசித்த ஆதி புரா ணேசுவராகிய சிவலிங்கம் அமையப்பெற்றதலம். அகத்தியர், பிர மா, இயமன், விஷ்ணு, விசுவாமித்திரர் முதலாயினோர் பூசித்து அருள் பெற்றனர். இதனை அழுகண்ணிச்சித்தர் சமாதியென்றார்.

திருவிடைமருதூர்:—உருத்திரர் பூசித்த சிவலிங்கம் இங் குளது. உமாதேவியார், விநாயகர், சுப்பிரமணியர், பிரமா, விஷ்ணு, சரஸ்வதி, இந்திரன், துவாதசாதித்தர், சந்திரன், வேதங்கள், வசி ஷ்டர், அகத்தியர், முப்பத்து முக்கோடி தேவர், அஷ்டமா நாக ங்கள் ஆதியோர் பூசித்து அருள் பெற்றனர். இதனை இடைக் காடர் சமாதி யென்றார்.

மதுரை:—"முன்னசிக் கடம்பின்மாடே முளைத்தெழிச் சைவ லிங்கம்" "ஒப்பரிதான ஞான வொளிதிரண் டானலிங்கத் திப்பிய லிங்க மூல லிலிங்கமாய்ச் சிறக்குமன்றே" என்னுந்திருவிளையாடற் படி, சுயம்பு மூர்த்தியா யெழுந்த சிவலிங்கம் இங்குளது, இதனைச் சுந்தர சித்தர் சமாதி யென்றார்.

வைத்தீசுரன்கோவில்:—இது புள்ளிருக்கும் வேளூர் எனவும்படும். சம்பாதி சடாயு பூசித்த சிவலிங்கமுள்ளது. சூரியன், வேதம், சுப்பிரமணியக்கடவுள், இராமன், இலக்குமணன், தேவேந்திரன் முதலியோரும் பூசித்திருக்கின்றனர். இதை வசிஷ்டர் சமாதி யென்கின்றார்.

திருக்காளத்தி:—இது தெக்ஷிண கயிலாயம் எனப்படும். இங்குள்ள லிங்கம் சுயம்புலிங்கம். முன்னே கயிலையில் வாயுவினாலே பூசிக்கப்பெற்றது. பின் பிரமதேவன் கயிலாயத்திருந்த அச்சிகரத்தை இவ்லிங்கத்தோடு கொண்டுவந்து இங்கே தாபித்துப் பூசித்தான். பின்பு சிலந்தியும் காளமும் அத்தியும் பூசித்து அருள்பெற்றன. கண்ணப்பர் பூசித்து அருள் பெற்றதும் இவ்லிங்கத்தையே. இதைக் கருவூரார் சமாதி யென்கின்றார்.

காசி:—அவிமுக்தஜாபாலம் என்னும் உபநிடதத்திலே புருவநடுவிடமாகிய வாரணாசியில் தாரக வித்தை செய்யுமுறைசொல்லப்பட்டது. இத்தலம் அத்தாரக வித்தைக்குரிய தலமாம். அதனால் இது வாரணாசி யெனப்படும். இங்குள்ள லிங்கம் அவிமுக்தேசுரர் எனப்படும் சுயம்புலிங்கமாம் விசுவநாதர் எனவும் படும். இதை விஸ்வாமித்திரர் சமாதி யென்றார்.

திருவையாறு:—தருமதேவதை பூசித்து வழிபட்ட சிவலிங்கம். செம்பொற் சோதிநாதர் என்னும் பெயருள்ளது தருமதேவதை பூசித்துத் திருநந்தி தேவராகிய பெரும்பதம் பெற்றது இத்தலத்திலேயாம். இதை அகப்பேய்ச்சித்தர் சமாதி யென்றார்.

திருப்பெருந்துறை:—இது பராசரமுனிவராலே பூசிக்கப்பட்ட ஆத்மநாதேச்சுரர் இருக்குந் தலம். பிருகுமுனிவரும் பூசித்துப் பேறுபெற்றனர். மாணிக்கவாசக சுவாமிகளுக்கு ஞானோபதேசஞ் செய்ததலமும் இதுவேயாம், இதனைப்புலத்தியர் சமாதி யென்றார்.

திருக்கடவூர்:—மார்க்கண்டேய முனிவர் இயமனை வெல்லும் பொருட்டுத்தாபித்துப் பூசித்த அமுதகடேசுரர் என்னுஞ் சிவலிங்கம் இருக்குந் தலம். இதைக் காலாங்கி நாதர் சமாதி யென்றார்.

திருக்கோவலூர்:—இது அட்டவீரட்டங்களுளொன்று. அந்தகனைக் காலபைரவர் சங்கரித்துச் சிவ பூசைசெய்த சிவலிங்கம் இங்குளது.

திருவாவடுதுறை:—இந்திரன் தாபித்துப் பூசித்த சிவலிங்கம். மாசிலாமணியீச்சுரர் எனப்படும். திருமூலர் சமாதி வேறிருக்கின்றது இதை விசுவாமித்திரர் சமாதி யென்றார்.

திருப்பனந்தாள்:—தாடகை யென்னும் அம்மையார் பூசித்த சடையப்பநாதேச்சுரர் என்னுஞ் சிவலிங்கமுள்ள தலம் இதை வரருசி சமாதி யென்றார்.

திருவானைக்கா:—சம்புமுனிவர்பொருட்டு வெண்ணாவல் மரத்தினடியில சுயம்புமூர்த்தியாக வெழுந்த சிவலிங்கம். சிலந்தியும் யானையும் பூசித்து வழிபட்ட மூர்த்தி. இதை மச்சமுனி சமாதி யென்றார்.

இங்ஙனம் இவர் எல்லாவற்றையுஞ் சித்தர் சமாதியென்றது பெரும் பேதைமையாம். வேதங்கள் ஆகமங்கள் புராணங்களிலே சொல்லப்படும் பிரமாணங்களினும் சித்தர்பாடல் பெரும்பிரமாணமென இவர் எடுத்தெழுதியது யாதினாலோ. இன்னும், அவர் கோவிலூரைப்பற்றி ஒன்றும் எழுதவில்லை. அதுவும் இருக்கனரும் யாருடைய சமாதியென்பதனையும் எழுதுவாராக.

18. இனி, மாயாவாதிகள் "சீவனும் பொய் ஈசுவரனும் பொய்யென்று சொல்லுகிறார்கள்" என எழுதியதைப்பற்றிச் சில நியாயம் பேசினார்.

பிரமம் பிரகிருதியிற் பிரதிபிம்பிக்கு மென்பது இவர் மதம். பிரமம் உருவமன்று. அருவுருவுமன்று. அருவமுமன்று. இம்மூன்று நிலைக்கும் அப்பாற்பட்ட சேதனவஸ்து. பிரகிருதி அருவப்பொருள். தன்னிலிருந்து அருவமும் அருவுருவமும் உருவமுமான தத்துவங்களைத் தோற்றுவிப்பது. அருவமான பிரகிருதியில்

னுருவில்லாத பிரமம் எவ்வாறு பிரதிபிம்பிக்கும். உருவப்பொருள் இரண்டற்கே பிரதிபிம்ப நிகழ்ச்சி கூடும். முகம் உருவப்பொருள். கண்ணாடி உருவப்பொருள். அவ்விரண்டற்கும் உருவ சம்பந்த மிருத்தலால் கண்ணாடியில் முகம் பிரதிபிம்பிக்கலாம். இன்னும், சந்திரன் உருவப்பொருள். கடசலம் உருவப்பொருள். சந்திரனது பிரதிபிம்பம் கடசலத்திற்றோன்றலாம். ஒரு சந்திரனது பிரதிபிம்பம் அநேக ஆயிர கடசலத்திற் றோன்றலாம். அன்றியும், கண்டப் பொருள்களுக்கே பிரதிபிம்ப நிகழ்ச்சியுண்டாம். அங்ஙனமாக, மாயாவாதிகள் மாயையினும் அவித்தையினும்பிரமம் பிரதிபிம்பிக்குமென்றும், அப்பிரதிபிம்பங்களே ஈசுரனும் சீவர்களுமென்றுங்கூறுவது எவ்வாறு பொருந்தும்? பிரமம் சித்துப்பொருள். மாயை சடப்பொருள். சடமாகிய மாயையிலே சித்தாகிய பிரமம் பிரதிபிம்பிப்பது எப்படி?

அன்றி, மாயையே பொய். அதிற் பிரதிபிம்ப நிகழ்ந்ததும் பொய். அவித்தை பொய். அதிற் பிரதிபிம்ப நிகழ்ந்ததும் பொய். யாதொன்றும் இல்லையென்பது அவர் மதமேயன்றோ. அவித்தையென்பதொன்றிருந்தன்றோ அந்தக்கரண ஆபாசமாகிய விசேஷணமுண்டாம். அதில் கூடஸ்த சேதனமாகிய விசேஷியம் பொருளாய் நிற்கும். கூடஸ்த நிகழ்ச்சி மெய்யா, பொய்யா. ஒன்று மெய்யானால் மற்றதும் மெய்யாகும். விசேஷியம் மெய்யானால் விசேஷணமும் மெய்யாம். ஈசுவரன் என்னும் சொற்கு மாயை பிரதிபிம்பங்களாய விசேஷணமும் பிரமசேதனமாய விசேஷியமும் ஆகிய விசிட்டம் பொருளாம் என்றார். மாயை உள்பொருளா. பிரதிபிம்ப நிகழ்ச்சி உண்மையா. அப்படியானாலன்றோ ஈசுவரன் மெய்யாம்; பிரமசேதனமான விசேஷியம மெய்யாம். விசேஷியம் மெய்யென்பாராயின் பிரதிபிம்ப நிகழ்ச்சியும் மாயையும் மெய்யென்றாம். விசேஷணமான அந்தக்கரண ஆபாசமும் பொய், மாயை பிரதிபிம்பமும் பொய்யென்பவர் அவை விசேஷியமான சேதனத்தின்கண் ஔபாதிகமாய்த் தோன்றிப் பாஸ்பரம் விரோத தர்மமுடையனவாய் ஐக்கியமுறுமென்று கூறுவது வெறும் வார்த்தையன்றோ. மாயை அவித்தைகள் உள்பொருளாயினன்றோ இத்தனையும் சம்பவிக்கும்.

இன்னும், பிரமம் சந்திரனையொக்கும். மாயை அவித்தைகள் கடசல நிகர்க்கும். ஈசுரன் சீவர்கள் கடசல சந்திரப்பிரதிபிம்பத்தை யொப்பர். கடசல நிகர்த்த மாயை அவித்தைகள் இல்லாதபோது சந்திரப்பிரதிபிம்பமு மில்லையாம். ஆகவே மாயையை யில்லையென்பார் சீவேசுரர்களையும் இல்லையென்பவரே யாகின்றார். முயலிற் கோடு இல்லாதபொழுது அக்கோட்டினாலாய சிமிழ் எப்படியுண்டாம். ஆகாயத்தாமரை இல்லாதபொழுது அதனாலாகிய மாலையை மலடிமைந்தன் சூடுவது எப்படி? ஆமைமயிர் இல்லாதபொழுது அதனாலியன்ற கயிறு கொண்டு மலடிமைந்தனைக் கட்டுவதெப்படி?

இன்னும், சந்திரன் கடசல பிரதிபிம்ப சந்திரனைக்கண்டு நான் என்று மயங்கிப், பின்பு ஒருவர் உணர்த்த நான் பிரதிபிம்பமன்று, சந்திரனேயெனத் தெளியவேண்டியதில்லை. பிரதிபிம்ப சந்திரன் நான் சந்திரனென்று நினைத்துக் கடத்தையுடைத்தாலும் சந்திரனோடு கூட அல்லது சந்திரனாக ஆவதில்லை. அதுபோலவே பிரமத்துக்கு ஒருவர் உணர்த்தவேண்டியதுமில்லை மாயை அவித்தைகள் நீங்கினும் பொய்யாயொழியினும் சீவ ஈசுரர்கள் பிரமத்தோடு ஐக்கியமுற, அல்லது பிரமமாக ஆவதில்லை. அவை சூனியமுறுதலே போந்த மிச்சமாம்.

மேலும், நிருபாதிக வஸ்துவாய் சச்சிதானந்தமயமாய் ஏகமாய் விளங்கும் பிரமத்தைவிட மாயையென்றொரு பொருளும், அப்பொருளிற் பிரமம் அகப்பட்டு, சத்தியல்பு ஆனந்த நிலை நீங்கிச் சோபாதிக முறுதலும் எப்படிப் பொருந்தும். சோபாதிகனாகும் பொருள் சச்சிதானந்த பிரமமாவதெப்படி? மாயை பொருளன்று சத்தி யெனின், பிரமத்துக்குச் சடகுணம் வருவது எப்படி? பரிக்கிரக சத்தியெனின், மாயை யுள்பொருளாயினன்றோ பிரமம் பரிக்கிரகிக்கும். அன்றியும் மாயையையுடைய சத்தன் யார்?

இவற்றை யெல்லாம் நோக்காது மாயையிலே பிரமம் பிரதிபிம்பித்தது, பிரமம் சோபாதிகனாயிற்று, மாயையில் மயங்கிற்று என்பனவாக மொழிந்தால், அவை பொருந்துவதெப்படி? இவர் கூறும் பொருள் மாயையிலே உபாதியடையும் பொருளாயின், அதனைப் பிரமமென்று சொல்லமுடியாது. அப்பொருள் ஒன்று, மா

யையொன்று; அறியாமையினால் மாயையிலே மயங்கிற்று எனல் வேண்டும். எனவே, அதற்கு அறியாமையைச்செய்து நின்றதொன்று; அது ஆணவமலமாம். ஆன்மா ஆணவமல மறைப்பால் அஞ்ஞான முற்றுப் பசுவாகி, மாயையிலே தங்கிப் புருடனாகி, அந்தக்கரணங்களிலே சேர்ந்து சீவனாம். ஆன்மா இயல்பில் நிருபாதிகனாயினும் மாயையிலே தோய்ந்து சோபாதிகனாவன் என்று சைவசித்தாந்த நூல்கள் கூறும். திருமந்திரமும் இப்படியே சொல்லும். பரமசிவன் பகர்ந்த ஆகமங்களும் இவ்வாறே கூறும். மாயாவாதிகளும் இப்படிச்சொல்வார்களானால் ஒத்துப்போம். போகவே, சைவசித்தாந்திகள்சொல்லும் ஆன்மாவையே மாயாவாதிகள் பிரமமென்று கூறுவர் என விளக்கமாம். அது பற்றியே ஆத்மஞானம், ஆத்மகைவல்லியம், ஆத்மாநுபூதியென மாயாவாதிகள் கூறுவரென்பதும் மெய்யாம். இந்த ஆத்மஞானத்தோடு இவர் நின்றுவிட, சைவசித்தாந்த நூல்கள் ஆன்மாவுக்கு ஆன்மாவாகிய பரமான்மாவாய்ச் சச்சிதானந்த வஸ்துவாய் உள்ள சிவத்தைப் பிரம மென்று எடுத்துக்காட்டித் தன்னையடைந்தார்க்குச் சிவ ஞானத்தை விளைவிக்கும். சிவத்தோடு அத்துவிதமாகக் கலப்பிக்கும். சிவமாந்தன்மைப் பெருவாழ்வினையருளும். இதுவே இவ்விருமதத்துக்கும் உள்ள வேறுபாடாம்.

திருமூலநாயனார் அருளியவாறு,

"ஆயத்து ணின்ற வறுசம யங்களுங்
காயத்து ணின்ற கடவுளைக் காண்கிலா."

"ஆறு சமயமுங் கண்டவர் கண்டில
ராறு சமயப் பொருளும் பயனில்லை."

"சிவமல்ல தில்லை யறையோ சிவமாந்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்
கவமல்ல தில்லை யறுசம யங்கள்
தவமல்ல நந்திதாட் சார்ந்துய்ய வீரே."

புறச்சமயங்கள் மெய்ச்சமயங்களாகா. மாயாவாதம் புறச்சமயங்களுள்ஒன்று. "சாவிபோம் மற்றச்சமயங்கள் புக்குநின், றாவிய லமந்தே யுந்தீபற" என்றபடி, பயனற்ற அச்சமயங்களால் நாம் அடைவது ஒன்றுமில்லை.

19. உலகத்துள்ளே புண்ணிய பூமி பரதகண்டமாம். பரத கண்டத்துள்ளும்,

"ஈறான கன்னி குமரியே காவிரி
வேறு கவதீர்த்த மிக்குள்ள வெற்பெழுட்
பேறான வேதா கமமே பிறத்தலான்
மாறாத தென்றிசை வையகஞ் சுத்தமே."

என்றபடி, வேதாகமங்களும் அவைபோதிக்குஞ் சைவசித்தாந்தமும் சிவாலயங்களும் நிலவுவதாயுள்ள இத்தமிழ்நாடு மிக்க புண்ணியமுடைய தேசமாம். சிவனருளிய நூல் வேதசிவாகமம். அதுவே சைவமுதனூல். அதன் மெய்ப்பொருளை போதிக்கும் ஆசிரியர் தக்ஷிணாமூர்த்தி. அவரது இடம் கைலைமலை. அவர் திருக்கரத்திருப்பது சிவஞானபோதம். அவர் போதிப்பது அந்நூலே. அவரது மாணாக்கர் திருநந்தி தேவர். அவர் போதித்த சிவஞானபோத முதனூல்வழி வந்தவை சைவசித்தாந்த நூல்கள். தேவார திருவாசகங்கள் சிவானுபூதியுரைத்த தமிழ் மறைகள். சைவசித்தாந்திகளாகிய நாம் எல்லாவகையாலுஞ் சிறப்புடையோம். அறுபத்துமூன்று நாயன்மார்கள் சைவ சமயங்கொண்டு சிவாலய வழிபாடு செய்து சிவகதியடைந்தனர். நாமும் அவர் ஒழுகிய சைவநெறி கடைப்பிடித்து ஒழுகி ஆலயவழிபாடும் மாகேசுரபூசை குருபூசைகளுஞ் செய்து, சைவசித்தாந்த நூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடிச் சிவானந்தம் பெறக்கடவோம்

வஞ்சநெஞ்சத்தோடு முநிவரியற்றிய மயக்கநூல்களைப் போதிமையிலெய்திச் சிவநிந்தை சிவசாத்திர நிந்தை சிவாலய நிந்தை சைவ நிந்தை செய்து, உழலக் கடவேமல்லேம்

இம்மாயாவாதிகளோ, வேதாகமமருளிய இறைவனது உபதேசத்தைக்கொள்ளாராயினர். அரிபிரமேந்திராதி தேவர்கள் கடைப்பிடித்துய்ந்த ஆலயவழிபாடாகிய சிவ பூசையை நிந்தித்து வெறுத்தாராயினர். முனிவர்கள் உண்மையெனக்கடைப்பிடித்த சிவநெறியையும் விரும்பாராயினர். சுக்கிரன் சூரபன்மனுக்குச் சொல்லிய ஆசுரமயக்க நெறியே பெரிதென்று மெச்சுவர்.

கடவுளாகிய சிவம் உண்டென்றால், ஏன்று கொள்ளார். தாம்

பிரமமென்று மகிழ்கின்றனர். வைதிகரென்று வாயில் நுவல்வர். ஆசிரமநெறியிலமையார். சந்நியாசிகள் ஆசரிக்குங் கர்மமொன்றும் அறியார். கைவல்லிய வாதிஷ்டம் படித்து நாம் பிரம மென்பதே சாதனமென்பர். *சிவ வாக்கினும் வியாசர் வாக்கே பெரிதென்பர். சங்கராசாரியர் வடபுலஞ்சென்று போதித்த மாயாவாதமே பெரிதென்பர். சங்கராசாரியர் தென்னாட்டில் அதனைப் பரப்பாதொழிந்த சூழ்ச்சியை யோரார். சங்கராசாரியர் சிவாவதாரமாதலால் அவர் வாக்குப் பிரமாணமாமென்பர். சிவன் நேரே சொன்ன சிவாகம உபதேசத்தை ஏற்க மறுப்பர்.

20. பரமசிவன் வடிவங்கொள்ளுமிடத்துச் சிற்கனமேனியாகிய சத்திகாரிய வடிவமே யன்றி மாயாவடிவங் கொள்பவரல்லர். ஸ்ரீகண்டபரமசிவனும் சிவலோகம் கைலாசங்களில் வடிவு கொள்வரேயன்றி, இவ்வுலகிற் பிறந்திறந்துழலார். சங்கராசாரியரோ மலையாளத்திலே காலடி யென்னுங் கிராமத்திலே சிவகுருவென்னும் பிராமணருடைய மனைவிவயிற்றிலே கருத்தரித்து வளர்ந்து பூமியிற்பிறந்து மனித சரீரத்தோடு உண்டு உடுத்து உறங்கிப் பால கௌமாரப் பருவங்களையடைந்து தருணப்பருவத்திலே உயிர் நீங்கப்பெற்றவர். தம்முடைய பந்த நீங்கி முத்தி சித்திக்க வேண்டிச் சிவானந்தலகரி சிவபுஜங்கம் சௌந்தரியலகரி முதலியன செய்து, சிவபெருமானையும் உமாதேவியாரையுந் துதித்துத் திரிந்த ஒருவர். எல்லா வகையாலும் அவர் ஒரு மனிதரே யன்றி வேறல்ல ரென்பது தெளிவாகும். மனிதருள் விசேடம் பெற்ற கல்விமானாகலாம். மாயாவாதத்துக்கு ஓர் சிறந்த ஆசாரியராகலாம். இவ்வளவேயன்றி, அவர் சிவாவதாரமாவதெப்படி? "நம் சோமேசர்-இல்லிற், பிறந்த கதையுங்கேளோம் பேருலகில்லாமுந்துன், டிறந்தகதையுங் கேட்டிலோம்" என்ற பாவலர் சொற்போலவே சிவன் பிறப்பிறப் பில்லாதவரென்று எல்லா நூல்களுங் கூறுகின்றன. இவரோ சிவன் சங்கராசாரியாராகப் பிறந்திறந்தார் என்கின்றனர். இவர் சொல்லினும் அறிவுடையோர் எவ்வாறு ஏற்பர். அன்றி, இவர் சிவாவதாரமோ அல்லவோ வென்று ஐயுறுமொருவர் வார்த்தையினும் நேரே சிவன் சொன்ன வாக்குவிசேடமாயென்பதை உணராததென்னை. இது என்னபாபவசமோ!

சாபலமன்றோ! பரமசிவனிலும் சங்கராசாரியர் பெரியவரா? வேதவியாசர் பெரியவரா? மற்றெவர் தாம் பெரியவராவர்.

21. மயக்க நீர்மையுடைய முனிவர், மனிதர் வாக்கில் மயங்காது, அநாதிமலமுத்தபதியாய்ச் சர்வஞ்ஞராயுள்ள பரமசிவன் பகர்ந்த வேத சிவாகமங்களையும் சைவசித்தாந்த நெறியையுமே மேலெனக்கொண்டு, சிவதீக்ஷை பெற்றுச், சரியை கிரியை யோக ஞானங்களில் ஏற்றதொன்று கொண்டு ஒழுகிச் சிவபெருமானது திருவருளைப் பெற்றுச், சிவகதியடைதற் குரியராதலே மரபாமென்பதை இனியேனும் உணரக்கடவர். "சைவமாஞ் சமயஞ்சாரும் ஊழ்பெறலரிது" காசிகானந்தர் முதலாயினோர் இயல்பாகவே சைவபரம்பரையிற் பிறந்தும் வளர்ந்தும் இருந்தனராக, பின், சிவதீக்ஷை பெறுதற்கும் சைவசமயவழி யொழுகுதற்கும் விடாது அவரை மாயாவாத மயக்கிலே தள்ளிய ஊழ் எத்தன்மையதோ. இவர் மரபினரெல்லாரும் சைவநலங்கொண்டு திருவருள் பேணிச் சுகிப்பாராக, இவர்க்கு இவ்வூழ் வாய்த்ததென்னையோ.

சங்கராசாரியர் ஈற்றிலே ஸ்ரீகண்டாசாரியரை யடுத்துச் சைவராயினரென்றும், சிவபூசையாதிய சிவபுண்ணியங்கள் செய்தனரென்றும் ஆன்றோர் பகர்வர். இவர் அஃதில்லையென்கின்றனர். சங்கராசாரியர் சைவராகியதாற் சைவத்துக்கு வந்த ஆக்கமென்னை? இல்லையென்பதனால் வந்த நஷ்டமென்னை? ஒன்றுமின்றெனவுணரக்கடவர்.

22. சனகர், இராமர், கிருஷ்ணர் முதலாயினோர் சிவதீக்ஷை பெற்றுச் சிவபூசை செய்து சைவஞானம் பெற்றமை புராணப் பிரசித்தமாம். இவர் அதனை இல்லையென்று சொல்லுதலிற் பிரயோசனமில்லை. முனிவர்கள், அரசர்கள் யாவரும் ஆலயங்கடோறுஞ் சென்று சிவாகம முறைப்படி பூசித்து வழிபட்டனரென்பதைப் புராணங்கள் கோஷிக்கின்றன. இவர் அதனை மறுக்க வல்லரோ. இவ்வுண்மைகளையெல்லாம் காசிகானந்தரும் அவர் சார்பினரும் ஆய்ந்து தெளிந்து உண்மை கடைப்பிடித்து உய்தலே மரபாம்.

23. தூர்வையாசகப்படல வசனகர்த்தர் உண்மை நெறி கடைப்பிடித்தொழுகுந் தன்மையுடையோர். சிவபக்தசிகாமணி,

பேறிவாளர். தாம் அறிந்தவாறு சைவநெறி பேணி உய்யுநீர்மையர். சிவானந்தப் பேறுடையவர். "தாம்பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்" என்று மற்றையோர்க்குஞ் சைவசித்தாந்த உண்மையைப் போதிக்கின்றனர். சைவநெறி கடைப்பிடித்தொழுகுஞ் சிவபக்தர் குழுமிய இந்நாட்டிலே மாயாவாத மதமெழுந்து இடர்செய்தலின், அது பொறாது அநுதாபமுற்று உண்மையை அச்சிவ பத்தருக்கு ஓதுகின்றனர். சைவசமயத்தை நிறுத்துதல் பெரும் புண்ணியமாம். ஆதலால், இவரும் இவர் சார்பினரும் மாயாவாத மயக்கொழிந்து உண்மை கடைப்பிடித்துத் தம் பழைய சைவ மார்க்கத்திலே திரும்பி யொழுகுதல் நன்மையாம்.

சமய உணர்வு பொன்றிய இக்காலத்துப் பிரசங்கம் பத்திரிகை புத்தக வாயிலாக உண்மைகளை வெளியிடுதல் பெரியதோர் உபகாரமாம். ஆயின், நிந்தாமொழி யொழிந்த நல்விஷயங்களாலும் மிக நலமாம். வாதஞ்செய்வோர் இதனைப் பரியாலோசிக்க வேண்டும்.

24. இனி, மாயாவாதநெறி இந்நாட்டிற் பரவுவதால் வருங் கேடென்னையெனின், அஃதொன்றோ, இரண்டோ? முதலிற் காசிகானந்தரையே உதாரணமாக வைத்துக்கொள்வோம். சைவமரபிலே பிறந்தவர், இப்பொழுது மாயாவாதத்திற் புகுந்த தோஷத்தால் தம் முன்னோர் கொண்டொழுகிய சைவநெறியை யிகழ்கின்றார். சிவநிந்தை செய்கின்றார். வேதவியாசர் கிருஷ்ணர் சங்கராசாரியரினும் சிவனைக் குறைந்தவராக எண்ணுகின்றார். சிவவாக்காகிய ஆகமங்களை நிந்திக்கின்றார். பசுவாக்காகிய மாயாவாதநூலை மேன்மையாகப் பாராட்டுகின்றார். சைவசமயம் இழிந்ததென்கின்றார். மாயாவாதமே சிறந்ததென்கின்றார். தேவார திருவாசக முதலிய அருட்பாக்களையும், திருமந்திரம், மெய்கண்டசாத்திரம் முதலிய உண்மை நூல்களையும் பிரமாணமென ஏற்க அருவருக்கின்றார். சைவசந்தான குரவர்களை இகழ்கின்றார் நாயன்மார் ஒழுகிய நெறியை ஏற்கின்றிலர். சிவாலயங்களை நிந்திக்கின்றனர் எல்லாம் மனிதசமாதி யென்கின்றனர். சிவாலயத்தைவிடத் தம் மாயாவாத மனிதசமாதிகளை உத்கிருஷ்டமென்கின்றனர். சிவாலயங்களுக்குச் செய்யும் பூசை விழாக்களைக்காட்டிலும் மாயாவாத மனித

ர்மாதிகளுக்கே ஆலயம் சிறப்பாக அமைக்கவேண்டுமென்றும் பூசை திருவிழாக்கள் சிறப்பாகச் செய்யவேண்டுமென்றும் சொல்லுகின்றார். சைவசித்தாந்த வைபவம், சிவமகிமை, சிவாகமமகிமை, சிவாலய மகிமை, மெய்யடியார் மகிமைகளை ஒருவரும் உலகிற் பேசக்கூடாதென்கின்றார். பேசுவோரை நிந்தித்து அவர்க்குப் பெருந்தீங்குகளெல்லாஞ் செய்ய முயற்சிக்கின்றார். சைவசமய பரிபாலனத்தின்பொருட்டுப் பொருளுபகரிக்குஞ் சிவநேசச்செல்வரையும் நிந்திக்கின்றார். சைவப்பிரபுக்களை யடுத்துச் சைவத்திலுள்ள பற்றை விடுவித்து மாயாவாதம போதித்துத் தம்வழி ஈர்க்கமுயற்சிக்கின்றார். சைவசமயத்தை யழித்து மாயாவாதத்தைப் பரப்பிவிடவேண்டுமென்று பகிரதப் பிரயத்தனஞ் செய்கிறார். இப்படி இவர் செய்யுந்தொல்லைகள் பல. இவர் ஒருவரால் இந்நாட்டுக்கும் சைவசமயத்துக்கும் இவ்வளவு கேடு விளையக்கூடுமானால், இவர் போல நூறுபேர் ஆயிரம்பேர் கிளம்பிவிட்டால், தமிழ்நாடு முழுவதும் பரந்துவிட்டால், அதன்பின்பு சொல்லவேண்டியதென்னை? இப்பொழுதே பல மாயாவாதிகள் அங்கங்கு பரந்து இவர்போலவே பல தீமைகள் செய்து சைவநெறிக்கு இடுக்கண் விளைத்து வருகின்றனர். அதனைக்கண்டு மனம்வருந்தும் அன்பர்கள் பலர். சைவசித்தாந்த நூலுணர்வுடைய வித்துவசிரேஷ்டர்களும், சிவபத்திவாய்ந்த செல்வப் பிரபுகுலதிலகரும் ஆலசியமாயிருந்தால், இன்னோன்னவரால் இன்னும் எத்தனையோ தீங்குகள் சைவ சமயத்துக்கு உண்டாகிவிடும்.

அதுபற்றியே, இத்தனைகேடுகளையுஞ் சிந்தித்துச் சிவபத்தியிற் சிறந்த வித்துவசிரேஷ்டராகிய சொக்கலிங்கச் செட்டியாரவர்கள், இந்நாட்டுக்கு நேர்ந்த அனர்த்தங்களை நீக்கி "பாண்டிநாடே பழம் பதியாக"க்கொண்ட பரமசிவனுடைய திருவருள் விலாசத்தை ஓங்கும்படி செய்ய அரும்பாடுபடுகின்றார். காசிகானந்தரோ "குலத்தைக் கெடுத்த கோடரிக்காம்பு" போலத் தாம் பிறந்த சாதியார் பண்டு தொட்டுக் கொண்டுவருஞ் சைவசமயத்தை யழித்துக் கெடுத்துவிடப் பார்க்கின்றார். இவர் போல இன்னும் பலருளர். இவ்விருசாரினருள் எவர் செய்வது பிழை

பென்று நாம் சொல்லலாம். இவற்றை யெல்லாம் காசிகானந்தர் அமைதியோடு சிந்திக்கக்கடவர்.

25. சைவசமயந் தோன்றிய காலம் முதல் எத்தனையோ மதங்கள் முளைத்தெழுந்து போராடியிருக்கின்றன. உலோகாயத மெங்கே, பௌத்தமெங்கே, சமணமெங்கே, மீமாஞ்சமெங்கே, சாங்கியமெங்கே. அவை யெல்லாம் அவ்வப்பொழுதே நசித்து விட்டன. அதிலும் நந்தமிழ் நாட்டிலே பரமசிவனது திருவருள் சாந்நித்தியமா யிருக்கின்றது. பாபவசத்தால் ஒவ்வொரு நெறி தலைப்படினும் சிவபாதவிருதயர், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் போன்ற மெய்யன்பரது தவவிசேடத்தால், பரமசிவன்றாமாகவும் ஒவ்வோர் அன்பர் வாயிலாகவுங் கருணை புரிந்து சைவ சமயத்தைக் காத்து வருகின்றார். ஆதலால், ஏதோ ஒரு கர்மவசத்துக்கு ஏற்ப மாயாவாதம் பரவினும் பரமசிவன் இப்படியே விட்டுவிடுவாரென்று நினைக்கலாகாது. எங்கணும் மாயாவாத மயமாக்கி, சிவாலயங்களையெல்லாம் சமாதிகளாக்கி விடலாமென்று இவரன்னோர் சூழ்ச்சி செய்வதும் மகிழ்ச்சியுறுவதும் பயன்படமாட்டா தென்று நன்றாக உணரக்கடவர்.

காசிகானந்தரேனும் அவர் சார்பினரேனும் எதிர்வாதஞ் செய்ய எழுங்கால், பதரன்ன நிந்தைமொழிகளைவிட்டு, நியாயவரம்பில் நின்று சமய உண்மைகளை மாத்திரம் புகன்று வருவாரானால் அழகாயிருக்குமென்பதையும் உணரக்கடவர்.

"புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன வஞ்செ ழுத்துமே."

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

திருச்சிற்றம்பலம்.

